ஓம்
திருமாலே துணை

# இராம காதையில் சீதை பாதை!

ஆசிரியர்

முனைவர் எ.கு.திருவேங்கடம்,எம்.ஏ.,எம்.எட்.,பிஎச்.டி.

(தமிழக அரசின் நல்லாசிரியர் விருது பெற்றவர்)

This Book is published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme aid to publish religious books

வெளியீடு

அன்புநிலையம்

194 நடுத்தெரு
பொதட்டூர்பேட்டை - 631 202
திருவள்ளூர் மாவட்டம்
தொலைபேசி எண்: 04118 - 89284

## நூல் விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| முதற்பதிப்பு | ஆகஸ்ட் 2001 |
| உரிமை | பதிப்பகத்தாருக்கு |
| விலை | ரூ 60.00 |
| ஆசிரியர் | முனைவர் எ.கு.திருவேங்கடம் |
| பிறந்தநாள் | 01.07.1942 |
| பொருள் | ஆன்மீகம் |
| பதிப்பு | முதற்பதிப்பு |
| தாள் | 11.6 கிகி. |
| அளவு | கிரவுன் |
| எழுத்து | 12 புள்ளி |
| படிகள் | 1000 |
| கட்டடம் | செக்ஷன் |
| வெளியீடு | அன்பு நிலையம், 194, நடுத்தெரு, பொதட்டூர்பேட்டை - 631 208. |

## BOCK DETAILS

| | |
|---|---|
| Title | Rama Kathaiyil Geethai Pathai |
| Subject | Religious |
| Author | Dr. E.K. Thiruvengadam |
| Date of Birth | 01.07.1942 |
| Language | Tamil |
| Edition | First Edition |
| Paper | 11.6 kg |
| size | Crown |
| Point | 12 points |
| Copies | 1000 |
| Binding | Section |
| Publisher | Anbu Nilayam , 194 Nadu Street, Pothatturpettai - 631 208 |
| அச்சிட்டோர் | கவிக்குயில் பிரிண்டர்ஸ், 47நல்லதம்பி தெரு, சென்னை - 5. தொ.பே. 8446107 |

# சமர்ப்பணம்

இந்த உலகில் எம்மை உலவக்காரணமாய் இருந்த என் தாய் கன்னியம்மையார், தந்தை குப்பண்ண முதலியார், எம்மை ஆன்மீகப் பாதைக்கு அழைத்துச் சென்ற அருட்பிரகாச வள்ளல் வடலூர் இராமலிங்க சுவாமிகளுக்கும், அருள் மொழி அரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளுக்கும், 1990 ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் மலேசியாவில் உலகத் தமிழர் மாநாடு (கோலாலம்பூரில்) நடந்த போது, அங்கு எம்மை அன்புடன் வரவேற்று, பல . விதங்களில் உதவி விருந்தளித்து உபசரித்து எம் இதயத்தைக் கவர்ந்த அன்புச் சகோதர நண்பர் திரு. கண்ணன் மணியன் அவர்களுக்கும் சிங்கப்பூரில் பெரும் உதவி புரிந்து வழியனுப்பி வைத்த அன்பு நண்பர் திரு. கருணாநிதி அவர்களுக்கும் தமிழ் தொண்டாற்றிவரும் லண்டன் பேராசிரியர் உலகத் தமிழ் பண்பாட்டுக் கழகத் தலைவர் டாக்டர். C.S.S. சோமசுந்தரம் அவர்களுக்கும், ஆன்மீக உலகில் அதிசயங்கள் பலபுரிந்து ஆன்மிகப் பணியுடன் சமூகப் பணியும் புரிந்து எம் வாழ்வின் ஒளி விளக்குகளாகத்திகழ்ந்துவரும் தவத்திரு. இரத்தினகிரி பாலமுருகன். அடிமை அடிகளாருக்கும், உலகச் சமுதாய சேவா சங்க நிறுவனர் தவத்திரு. யோகிராஜ வேதாத்திரி மகரிஷி அவர்களுக்கும், சம்ரட்சணா நிறுவனர் நீலாங்கரை சித்த யோகி சிவ சங்கர பாபா அவர்களுக்கும், மற்றும் பல ஆன்மீக சமுதாயப்பணி பெரியார்களுக்கும், "இராமகாதையில் சீதை பாதை" என்னும் இந்த ஆன்மீக நூலை சமர்ப்பித்துப் பணிகின்றேன்.

**எ.கு. திருவேங்கடம்**
நூலாசிரியர்

இடம் : பொதட்டூர்பேட்டை

# முன்னுரை

அன்பு வாசகர்களே!

வணக்கம்.

இராமாயணம் சாமான்யமல்ல என்பர் பெரியோர். காரணம் திருமாலின் அம்சமும், அவருக்கு உகந்த ஆதிசேடன், சங்கு, சக்கரம், சூரியன், சந்திரன், இந்திரன் மற்ற விண்வாழ் தேவர்களின் அம்சங்களும் மண்ணுலகில் பிறந்து, மண் மீது நடந்து மண்ணில் வாழ்ந்து, தம் பக்தர்களுக்கு அருள் ஆசி கூறவும், ஆணவத்தால் தருக்குற்று வாழ்ந்த இராவணேஸ்வரன் போன்ற அரக்கர்களின் ஆற்றலை ஒழித்து தருமத்தை நிலை நாட்டவும், அவதாரம் செய்த நிகழ்ச்சியை விளக்குவது தான் இராம காதை. இராமனைப் பற்றிய கதை என்றும், இராமாயணம் என்றால் (இராமன் + அயனம்) 'அயனம்' என்றால் 'காடு' என்று பொருள். இராமன் காட்டுக்குச் சென்றதைப் பற்றியது என்பது பொருள்.

**நான்கு யுகங்கள்**

'2500 ஆண்டு காலம் ஒரு யுகம்' எனக்குறிக்கப்படுகின்றது. இது வரை மூன்று யுகங்கள் தோன்றி தற்போது நான்காம் யுகம் நடந்து கொண்டுள்ளது. அவை 1. கிருத யுகம், 2. திரேதா யுகம், 3. துவாபரயுகம், 4. கலியுகம்

ஒவ்வொரு யுகத்திலும் அறத்தை நிலைநாட்டவும், அதர்மத்தை அழித்து ஒழிக்கவும் எல்லாம் வல்ல பரம் பொருளின் அம்சமே விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்கு இறங்கி வந்து அருள் பாலித்துள்ளது என்பதை வேத நூல்களும் உபநிடதங்களும் குறிப்பிட்டுள்ளன. இதுவரை திருமால் எடுத்துள்ள அவதாரங்கள் பத்து ஆகும். அவை :

| | | |
|---|---|---|
| 1. மச்சாவதாரம் | மீன் | கிருதயுகம் |
| 2. கூர்ம அவதாரம் | ஆமை | கிருதயுகம் |

| | | |
|---|---|---|
| 3. வராக அவதாரம் | பன்றி | கிருதயுகம் |
| 4. நரசிங்க அவதாரம் | (சிங்கம் - மனிதன்) | கிருதயுகம் |
| 5. வாமன அவதாரம் | குள்ளன் | கிருதயுகம் |
| 6. பரசு ராம அவதாரம் | மனிதன் | திரேதாயுகம் |
| 7. ஸ்ரீ இராம அவதாரம் | மனிதன் | திரேதாயுகம் |
| 8. பலராம அவதாரம் | மனிதன் | துவாபரயுகம் |
| 9. கிருஷ்ண அவதாரம் | மனிதன் | துவாபரயுகம் |
| 10. கல்கி அவதாரம் | மனிதன் | கலியுகம் |

இப்படி பல்வேறு அவதாரங்களும் காரண காரியமாகவே நடந்துள்ளது என்பதை ஆன்றோர் அறிவர். ஸ்ரீ இராம அவதாரம் காலக்கால் மாக்கிய திரேதாயுகத்தில் நடந்த நிகழ்ச்சியாகும். கிருஷ்ண அவதாரம் 2500 ஆண்டுகழித்து துவாபரயுகத்தில் நடந்தது. இரண்டு அவதாரங்களுக்கும் ஒரு ஒற்றுமை உண்டு.

கிருஷ்ணாவதாரத்தில் தன் ஆருயிர் நண்பன் அர்ஜுனனின் கடமையுணர்வை உணர்த்த வேண்டியும், அதன் வாயிலாக எல்லா மக்களுக்கும் உண்மை இறை வழியை உணர்த்தவும் கீதை உபதேசம் செய்யப்பட்டது.

அறிவுரை கூறல் சுலபமே. ஆனால் சொன்ன விதமாக நடந்து காட்ட முடியுமா! என்ற ஐயப்பாடு வாசகர்களுக்கு எழக்கூடுமல்லவா? அந்த ஐயப்பாட்டை போக்கும் விதமாக அமைந்த நிகழ்ச்சியே இராம அவதார நிகழ்ச்சியாகும். மனிதன் சொல்வான். ஆனால் செய்ய மாட்டான். ஆனால் ஆதிபரம் பொருளான இறை தான் எப்படி தர்ம வழியிலே இறுதிவரை நடந்து காட்டி, உலகுக்கு வழிகாட்டியாக அமைந்து இராமனாக வாழ்ந்து உணர்த்துகிறான். அதையும் புரிந்துகொள்ளமுடியாத பாமரர் மீது இரக்கம் கொண்டு கீதை மூலம் வாய் வழி செய்த உபதேசமே கீதா உபதேசம் எனப்பட்டது. கீதை உபதேசத்தில் குறிப்பிடப்படும் அறவழி எவ்வாறெல்லாம் செயல்படுத்தப்பட்டுள்ளது என்பதை கோடிட்டுக்

காட்டும் நோக்குடன் ஆக்கப்பட்டதே "இராம காதையில் சீதை பாதை" என்னும் இந்நூலாகும். இந்நூலின் அடிப்படை நோக்கம் இராமாயணத்தின் நோக்கமும், கீதை உபதேசம் ஒன்றென உணர்த்துவதாகும்.

இராமகாதை ஞானத் தெளிவுபெற்ற வால்மீகி முனிவரால் வடமொழியில் இயற்றப்பட்டது. அதுபோலவே கிருஷ்ணரின் கீதோபதேசம் இடம்பெற்ற பாரதகாப்பியம் வியாச பகவானால் வடமொழியில் பாடப்பட்டது. வால்மீகிக்கு 'ஆதிகவி' என்று பெயர். பிற்காலத்தில் இவை பல்வேறு இந்திய மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது. அதிமுத்த தேன் மொழியாம் தமிழில் ஆக்கித்தந்தவர் கம்பர் நாட்டாழ்வார் ஆவார்.

இராமகாதையை கம்பன் ஆறுகாண்டங்களாகப் பிரித்து ஒவ்வொரு காண்டத்தையும் பல்லாயிரப்பாடல் வரிகளில் தன் கற்பனை வளத்துடன் ஆக்கிதந்து இலக்கிய உலகத்தில் என்றும் அழியாத இடத்தைப் பிடித்துக் கொண்டார். ஒவ்வொரு காண்டத்திலும் வரும் கதாபாத்திரங்களையும் எழிலுடன் படம் பிடித்து கீதையின் பாதையில் நடப்பித்துச் செல்வதை ஆய்ந்து நோக்கினால் நன்கு விளங்கும். இராமகாதையும், கீதை பாதையும் நம் வாழ்விற்கும் வழி காட்டும் நிதிகூட்டும் என்பது திண்ணம்!

ஒரு நூலை ஆக்கி வெளியிடுவது என்பது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. பலரின் உதவிகள் பெற்று தான் ஒரு நூலை உருவாக்க முடியும். ஒரு கரு தாயின் வயிற்றில் தங்கி பத்து மாதங்கள் வளர்ந்து பின் மண்ணில் குழந்தை வடிவாக பெற்றெடுப்பதில் எவ்வளவு சிரமங்கள் உள்ளதோ அது போன்றது தான் ஒரு நூலைப்படைத்து வெளிவிடுவதாகும். அதிலும் ஒரு தெய்வீக நூலை

எழுதிமுடிக்குமுன் எண்ணற்ற வேதனைகளையும், சோதனைகளையும் ஏற்படுத்துவான் இறைவன் என்பதை இந்த நூல் வாயிலாக உணர்ந்தேன். இதற்காக நூற்றுக்கணக்கான நூல்களைப் படிக்க வாய்ப்பு ஏற்படுத்திய இறைவன் எழுத துவங்கியபின் உடல் நலிவை எற்படுத்தியதுடன், மருத்துவ மனைகளில் சேர்ந்து மருத்துவம் செய்து கொள்ள வேண்டிய சோதனை நிகழ்த்தினான். உடல் நலம் குன்றச் செய்த இறைவன் மன நலத்தையும், வளத்தையும் தந்ததுடன் அவன் அருட் சக்தியே இந்த நூலை முடிக்க துணை நின்றது. திருப்பதி திருமலை தேவஸ்தானத்தின் மாத இதழ் 'சப்தகிரி' ஆசிரியர் திரு. N.S. இராமமூர்த்தி, M.A., மற்றும் துணையாசிரியர் திரு. வ.கோ. சொக்கலிங்கம் ஆகியோர் தந்த ஊக்கமும் வாசர்கள் பலரின் வேண்டுகோளும் எம் உணர்வுகளை வெளிப்படுத்த வாய்ப்பைத்தந்தன. நூலை ஆக்க உற்சாகப்படுத்தி பலவிதங்களில் உதவிய ஆருயிர் மகன் E.K.T. சிவகுமார், M.Sc., P.G.D.C.S., F.I.C.S., Ph.D. சிறந்த முறையில் ஓவியம் தீட்டித் தந்து உதவிய திரு. ஐமால் அவர்களுக்கும், பிழைத் திருத்தம் செய்து உதவிய புலவர் C.V. சோமசுந்தரம், M.A., M.Ed., அவர்களுக்கும், கவிஞர். எஸ். இரகுநாதன் அவர்களுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**ஆசிரியர்.**

# பொருளடக்கம்


**இராம காதை** பக்கம்

1. திருமாலின் திருஅவதாரங்கள் 1
2. ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டிற்கும் வழிகாட்டும் இராம காதை 11
3. அயோத்தி மன்னன் தசரதன் (பாலகாண்டம்) 17
4. அயோத்தி காண்டம் 34
5. இராமனின் கானக வாழ்க்கை (ஆரண்ய காண்டம்) 58
6. அனுமனின் இலங்கைப் பயணம் (சுந்தர காண்டம்) 89
7. இராம இராவணப் போர் (யுத்த காண்டம்) 110

**கீதை பாதை**

8. கீதாசாரம் 127
9. கீதை பிறந்த கதை (கீதைச் சுருக்கம்) 128
10. அர்ச்சுனன் அகத்தவிப்பு (முதல் அத்தியாயம்) 134
11. நல்லொழுக்க நெறி (இரண்டாம் அத்தியாயம்) 135
12. தன்வினை மாற்றம் (மூன்றாம் அத்தியாயம்) 140
13. ஞான கர்ம சன்னியாசயோகம் (நான்காம் அத்தியாயம்) 143
14. துறவுநிலை (ஐந்தாம் அத்தியாயம்) 146
15. மனப் பயிற்சி நெறி (ஆறாம் அத்தியாயம்) 147
16. அறநெறி விளக்கம் (ஏழாம் அத்தியாயம்) 149
17. எங்கும் நிறை இறை (எட்டாம் அத்தியாயம்) 150

18. மூலப்பொருளும் மறை பொருளும்
(ஒன்பதாம் அத்தியாயம்) 152

19. இறை நலம் (பத்தாம் அத்தியாயம்) 154

20. முழுமுதல் இறை நிலை
(பதினொன்றாம் அத்தியாயம்) 157

21. இறை நெறி (பக்தியோகம்)
(பன்னிரண்டாம் அத்தியாயம்) 159

22. உடலும் உயிரும்
(பதின்மூன்றாம் அத்தியாயம்) 161

23. மூன்று பண்புகள் (பதினான்காம் அத்தியாயம்) 163

24. மாந்தரில் ஒரு மாமணி
(பதினைந்தாம் அத்தியாயம்) 165

25. இறைமைப் பண்பும் அரக்க நிலையும்
(பதினாறாம் அத்தியாயம்) 167

26. நன்னம்பிக்கை மூன்றின் நலம்
(பதினேழாம் அத்தியாயம்) 168

27. வீடு பேறாம் வெற்றிப்பாதை
(பதினெட்டாம் அத்தியாயம்) 173

28. கீதையின் சீரிய சிந்தனைகள் 188

29. கீதையின் முரண்பாடு 193

30. கீதையின் பொன் மொழிகள் 198



# 1. திருமாலின் திரு அவதாரங்கள்

விஷ்ணுவின் மறு அவதாரமே இராமன், தெய்வம் மனிதனாகப் பிறந்து மண்ணில் கால் தோய நடந்து எப்படி வாழ வேண்டும் என்பதை நமக்கெல்லாம் வழிகாட்டிய கதை இராமன் கதையாகும்.

அதுபோலவே மறுயுகத்தில் கிருஷ்ணனாகப் பிறந்து பாண்டவர் நண்பராக வாழ்ந்து நாட்டை சூதில் கைப்பற்றிக் கொண்டு தரமறுத்த துரியோதனாதியர்களான குருகுலத்தவரை அழிக்க நடந்த குருட்சேத்திரப் போரில் பாசம், பந்தம் என்னும் மாய வலையில் சிக்கி ஆயுதங்களை தரையில் போட்டு போர் செய்ய மறுத்த விஜயனுக்கு மாயத்திரை அகல, பூலோக மக்களெல்லாம் உய்யும் பொருட்டு எடுத்துச் சொன்ன கீதை உரையை வழங்கியதுமான பாரதத்கதையும் நம் வாழ்க்கையைச் செம்மைப் படுத்திக் கொள்ள தோற்றிவிக்கப்பட்டது ஆகும். இவை மனித வாழ்விற்கு இருகண்களாகும். ஒன்றில் இரண்டு (டூ இன் ஒன்) என்ற அடிப்படையில் ஆக்கப்பட்டதே இந்நூல்.

இராம அவதராரத்தில் ஆதிசேஷனின் அவதாரம் இலட்சுமணன், சக்கரத்தின் அம்சம் பரதன், சங்கின் அம்சம் சத்ருக்கனன், மகாலட்சுமியின் அவதாரம் தான் சீதை. இந்திரன் வாலியாகவும், சூரியன் அம்சமாக சுக்ரீவனும், இந்திரன் தம்பி உபேந்திரன் அங்கதனாகவும், தேவர்கள் வானரர்களாகப்

பிறந்தார்கள். எல்லோருடைய அவதார நோக்கமும் இராவணன் என்னும் அகங்காரம் கொண்டவனையும் அரக்கர் கூட்டத்தையும் அழித்து நன்மையை நிலை நாட்டுவதே யாகும். இராவணன் போன்ற அரக்ககுணத்தவர் இன்னும் வாழ்வதால் அது அழிய இந்நூல் உதவும்.

தெய்வம், அவதாரம் என்பதெல்லாம் நமக்கு வெகு தூரத்தில், நாம் காண முடியாத தூரத்தில் இருப்பதாக எண்ண வேண்டாம். ஏனெனில் அது கண்ணெதிரிலேயே உள்ளது. நாமும் நமது செயல்பாடுகளால் தெய்வநிலைக்கு உயரலாம். என்பதை உணர்த்துவதே கீதை பாதையில் வாழ்ந்த இராமன் வாழ்க்கை.

தெய்வம் மனிதனாகப் பிறந்தது, மண்ணில் கால் தோய நடந்தது, ஒரு சாதாரண மனிதனுக்கு எவ்வளவு இன்னல்கள் வருமோ, அத்தகைய துன்பங்களை எல்லாம் அதுவும் அனுபவித்தது. இன்னும் சொல்லப் போனால் சராசரி மனிதனுக்கு வரும் துன்பங்களைவிட அதிகமாகவே அந்த அவதாரம் செய்த தெய்வம் அனுபவித்தது.

இராம அவதாரி அரசை இழந்தான். மனைவியை பறிகொடுத்தான். கானகத்தில் அலைந்து திரிந்தான். மனைவியை மீட்க பெரும் போர் செய்தான். இவை எல்லாம் எதற்காக. நமக்கு பாடம் கற்பிக்கத்தான். நல்லறிவைப் புகட்டத்தான்.

கீதையில் பரம்பொருளான கிருஷ்ணன் குறிப்பிடுவது போன்று ஒவ்வொருவர் வாழ்விலும் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு உண்மைக்காகவும், நேர்மைக்காகவும், நீதிக்காவும் வாழ்பவனே எனக்கு உவந்தவனாவான்" என்பதை நடை முறைப்படுத்தத்தான் என்பதை வாசகர்கள் உணர வேண்டும்.

சத்தியம் என்றால் உண்மை, வாய்மை, நேர்மை என்று பொருள். சத்தியத்தைக் காப்பதற்காக இராமன் பெற்ற இன்னல்கள் எண்ணற்றவை.

தன் தந்தையின் வாக்கைக் காப்பாற்ற பதினான்கு ஆண்டுகள் கானகம் சென்றான். தன் உண்மை அன்பாலும் இனிய வாய் மொழியாலும் பல சகோதரர்களைப் பெற்று தன் தந்தை மீது எந்த வெறுப்பும் காட்டாது விபிடணனிடம் "புகலறும் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் உந்தை". தசரதனாகிய உன் தந்தை புதல்வரால் பெருமை பெற்றான், என்று பேசுமளவிற்கு அசையாத மனத் தெளிவு பெற்றிருந்தான்.

தன் சகோதரர்களுடன் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் அவன் தன் உடன் பிறந்த தம்பியர் மூவரிடமும் பாசத்துடனும் நேசத்துடனும் பழகினான். உலகில் உள்ள அனைவருமே சகோதரர்கள் தான் என்பதை எடுத்துக் காட்டுவதற்குத்தான் குகனையும், சுக்ரீவனையும்,

வீடணனையும் உடன் பிறந்தவர்களாக ஏற்றுக் கொண்டான். உலகில் வாழும் நாம் எல்லோருமம இதை உணர்ந்து வாழ்ந்தால் இன்பமன்றி துன்பமேது.

சுக்ரீவனும் வாலியும் சகோதரர்கள் தாம். அவர்கள் இருவரும் ஒருவர் மற்றொருவரை தவறாகப் புரிந்து கொண்டு தாங்கள் சண்டையிட்டுக் கொண்டதுடன் இராமனின் துணை கொண்டு தன் உடன்பிறந்த அண்ணனைக் கொன்ற தம்பியானான். விபிடணனும், இராவணனும் சகோதர்கள் தான். அவர்கள் இருவரும் கருத்து வேறுபாடு காரணமாக பிரிய நேர்ந்தது. இராமனுக்கு உதவி செய்து தன் அண்ணன் அழிவிற்குக் காரணமான தம்பியாகின்றான்.

பாரதக் கதையில் வரும் அர்ஜுனனும் கர்ணனும் குந்தியின் புதல்வர்களாய் பிறந்தும் இறுதிவரை தாங்கள் சகோதரர்கள் என்பதை அறிந்து கொள்ளாமல் ஒருவரை ஒருவர் பகைத்தனர், போரிட்டனர்.

ஆனால் இராமன் தனக்குரிய அயோத்தி அரசைப் பரதனுக்கு விட்டுக் கொடுக்கத் தயாராய் இருந்தான். பரதனோ அதை ஏற்க மறுத்து அரசு வேண்டாம், அண்ணன் அன்பும் ஆசியும் தான் வேண்டும் என்றான். இதுவன்றோ உண்மை சகோதரத்துவம்.

தற்போதைய உலகியலில் பெரும்பாலான சகோதர்கள் பொறாமை உணர்வும், பகை உள்ளமும் கொண்டவர்களாக உள்ளனர். வீணாக தகராறுகள் செய்து கெண்டு தங்கள் வாழ் நாளையே

துன்பமயமாக்கிக் கொள்கின்றனர். அத்தகையோருக்கு யார் போல் வாழக் கூடாது, யார் போல் வாழ வேண்டும் என்பதை வரதுங்க நாம பாண்டியர் பாடல் ஒன்றால் கோடிட்டுக் காட்டப்படுகின்றது.

"செஞ்சுடரின் மைந்தனையும் தென் இலங்கை
வேந்தனையும்
பஞ்சவரில் பார்த்தனையும் பாராதே - விஞ்சு
விரதமே பூண்டிந்த மேதினியை ஆண்ட
பரதனையும் இராமனையும் பார்"

இதைப் படிக்கும் வாசகர்கள் இனியாவது இராம பரதனைப் போல் ஒற்றுமையுடன் வாழ்வார்களாக.

**எத்தனை எத்தனை இராமன்கள்**

இராமன் கையில் இருந்த 'கோதண்டம்' என்னும் வில் தீயரை ஒழித்து தர்மத்தை நிலைநாட்டியது. கோதண்டத்தைத் தாங்கியதால் கோதண்ட இராமன் என்றும், அயோத்தியில் பிறந்ததால் அயோத்தி இராமன் என்றும், தசரதன் மைந்தனாதலால் தசரத இராமன் என்றும், கோசலையின் மகனாதலால் கோசல இராமன் என்றும், தான்பூண்ட போர்களில் எல்லாம் வெற்றியே பெற்றதால் ஜெய ராமன் எனவும், இறுதியில் பட்டம் தரித்ததால் பட்டாபிராமன் என்றும் குறிக்கப்படுகின்றான்.

**இராம நாம மகிமை**

'இராமன்' என்ற திருப்பெயரும் பெரிய மந்திரமாகப் போற்றப்படுகின்றது. இராம நாமத்தைச்

சொன்னாலே புண்ணியம் என்று புராணங்கள் கூறும். இராம நாம மகிமையைக் குறிப்பிடும் கம்பன்,

“நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே.
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சன்மமும் மானமும் மின்றித் தீருமே
இன்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்.”

இராம நாம பெருமையை உணர்ந்தவர்கள் இன்றும் தம் பிள்ளைகளுக்கு இராமன் பெயரை வைத்து வருவது நாமெல்லாம் அறிந்த உண்மையாகும். இராமநாமத்தை நாமும் சொல்லி இம்மை மறுமை இன்பம் எய்தி உய்வோமாக.

இந்த நூலை படிக்கும் வாசகர்களும் நிச்சயமாக ஆன்மீக உணர்வு பிறக்கும். தெய்வீக சிந்தனைகள் உருவாகும்.

இன்றைய வேற்றுமை வெறியாட்டம், அதன் மூலம் நிகழும் வன்முறைகள், உயிர்க் கொலைகள் நிச்சயமாக ஒழிந்தழியும். மன அமைதியும், இனிய வாழ்க்கையும் அமையும். எந்நாளும் இன்பம் கூடும் என்பதில் ஐயமில்லை. எல்லாம் வல்ல இந்த பரம் பொருள் வாசகர்களாகிய உங்களுக்கும் உங்கள் குடும்பத்தவர்க்கும் இகபர இன்பங்களை வழங்க மனமார பிராத்திக்கின்றோம்.

அடுத்து கீதை பாதை நமக்குப் பர தேவரகசியங்களையெல்லாம் இறைவன் இந்த உலக

மக்கள் உணர்ந்து உய்வு பெற இறைவன் கண்ணனாகப் பிறந்து, பார்த்தசாரதியாக இருந்து, தன் பக்தன் அர்ஜீனனுக்குச் சொல்லும் வாயிலாக உபதேசம் செய்துள்ளான். பதினேழு அத்தியாயங்களின் திரட்சிக் கருத்துக் களையும், பதினெட்டாம் அத்தியாயத்தின் முழு மொழி பெயர்ப்பு செய்தும், நூல் ஆக்கப்பட்டுள்ளது. இரண்டையும் படிக்கும் வாசகர்களுக்கு இரண்டும் ஒரே உண்மையை உலகுக்கு தெரிவிக்கப்பட்டுள்ளது என்பதை உணர்வார்கள். இராம காதையில் செயல் மூலம் செய்து காட்டப்பட்டது. கீதை உபதேசம் சொல்லிக் காட்டப்பட்டது. இரண்டு பாதைகளும் ஒரே பாதையில் சங்கமமாகின்றன. வாசகர் வாழ்க்கைப் பாதை தெய்வாம்சமாகவும், வாழ்க்கையில் அன்புமேலோங்கி மகிழ்ச்சி, அமைதி, நிம்மதி பெற எல்லாம் வல்ல ஆதிமூலத்தைப் பிரார்த்திப்போமாக.

உலக மக்கள் நலனுக்காக நாம் ஒவ்வொருவரும் பிரார்த்தனை செய்ய வேண்டும். அதன் மூலம் நமக்கும் நன்மை கிடைக்கும் என்பதை உணர வேண்டும். பிரார்த்தனையை விட ஒருவனுக்கு பயனளிப்பதில் வேறு எதையும் ஈடாகச் சொல்லமுடியாது. உலக மக்களின் நலன் வேண்டி பிராத்தனை செய்ய பயனுள்ள சிந்தனை வரிகள் கீழே தரப்பட்டுள்ளன.

உலகமெலாம் பருவமழை ஒத்தபடி பெய்யட்டும்
உழவரெல்லாம் தானியத்தை உவப்புடனே பெருக்கட்டும்
பலதொழில்கள் புரிகின்ற பாட்டாளி உயரட்டும்
பல்தொகுப்பில் தொகுப்புணர்வு பண்பாட்டை உயர்த்தட்டும்

கலகங்கள் போட்டி பகை கடந்தாட்சி நடக்கட்டும்
கல்லாமை கடன் வறுமை களங்கங்கள் ஒழியட்டும்
நலம் பயக்கும் மெய்ஞ்ஞான ஒளிஎங்கும் பரவட்டும்
நம்கடமை அறவாழ்வின் நாட்டத்தே சிறக்கட்டும்
- யோகிராஜ் வேதாந்த மகரிஷி

இதை அன்றாடப் பிரார்ந்தனையில் பயன் படுத்தி உலக நன்மைக்குப் பிரார்த்திப் போமாக.

**நுழைவு வாயிலில் சில செய்திகள்**

அன்புக்கும், ஆன்மீகத்திற்கும் முதலிடம் தரும் நாடு நம் பாரதமாகும். பாரதத்தில் பெரும் பாலோர் விரும்பிப் படிக்கும் இருபெரும் இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம் இந்திய மக்களின் இருகண்களாகத் திகழ்ந்து காலத்தைக் கடந்து ஒளி வீசி பலரின் நல்வாழ்வுக்கு உறுதுணையாக இருந்து உதவி வருகின்றன என்பது காலக் கண்ணாடி காட்டும் உண்மையாகும். அதற்குக் காரணம் காக்கும் கடவுளான திருமால் மனித சமுதாயத்தில் அறத்தை நிலைநாட்டவும், மறத்தை மாய்க்கவும் தானே இம்மண்ணுலகில் சாதாரண மக்களைப் போல் தாய் வயிற்றில் தங்கி பிறந்து, சாதாரண மக்களைப் போலவே, எளிய மக்களுடன் வாழ்ந்து அறத்தை நிலை நாட்டியுள்ளார். காலத்தில் முந்திய திரேதாயுகத்தில், ஸ்ரீராமனாகப்பிறந்து, சத்திய நெறிகளை வாழ்க்கையில் கடைபிடித்து, தெய்வ நெறிகளை இந்த உலகுக்கு உணர்த்தியருளினார். 'மானுடம் வென்றதம்மா' என்ற கம்பனின் கவிதை வரிகள் இதை உணர்த்தும் நிலையில்

அமைந்துள்ளது. முதன் முதலில் இராம காதையை உலகுக்கு அறிமுகம் செய்த வால்மீகி வடமொழியில் எழுதினார். மூலநூலில் இராமன் மனிதனாகக் காட்டப்படுகின்றான். மூலத்தை அடிப்படையாகக் கொண்டு தமிழ் மொழியில் காப்பியம் தீட்டிய கம்பன் இராமனைத் திருமால் அவதாரமாகக் காட்டி தன் கற்பனை வளத்தைக் கூட்டி, தமிழ் பண்பாட்டை அதில் நாட்டி யுள்ளதால் அவனை ஒரு தெய்வீகக் கவிஞனாகவும், புவிச்சக்ரவர்த்தியான இராமகாதையைப் பாடிய கவிச்சக்கரவர்த்தியாகவும் உலகு காண்கின்றது.

அடுத்து துவாபரயுகத்தில் தேவகிக்கும், வசுதேவருக்கும் எட்டாவது குழந்தையாகப் பிறந்து, ஆயர்பாடியில் வாழ்ந்த யசோதை என்பாளின் வளர்ப்பு மகனாக வளர்ந்து கிருஷ்ணன் எனப்பெயர் தாங்கி பல திருவிளையாடல்களைக் கோபியரிடம் காட்டி, தன் தாய் மாமன் கம்சன் ஏவிய அரக்கர்களையும், அழித்து, கம்சனையும் கொன்று பின் துவாரகையில் ஆயர்கள் அரசனாக வாழ்ந்து பாண்டவர்களின் நண்பனாக இருந்து, அவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களை எல்லாம் போக்கி தன் ஆருயிர் நண்பனும் நர நாராயணன் என்று போற்றப்பட்ட விஜயனின் தேரோட்டியாக இருந்து, பூபாரம் தீர்க்க மண்ணாசை கொண்ட கௌரவப் படையை எதிர்க்கும் நிலையில் பந்த பாசத்தால் போர் செய்ய மறுத்த விஜயனுக்கு உலக தர்மத்தை விளக்கி வழங்கிய வாசகங்கள் கீதா உபதேசம் எனப்படுகின்றது.

உலகியல் வாழ்வில் மனிதர்கள் உலக தர்மத்தை சொல்வார்கள். ஆனால் சொன்னபடி வாழ்வதில்லை.

ஆனால் முக்கோடி தேவர்களையும் பதினான்கு உலகில் வாழும் அனைத்து உயிரினங்களையும் காத்து அருள் பாலித்து வரும் திருமால், இராம அவதாரத்தில் உலக மக்கள் எப்படி வாழ வேண்டுமென்று வாழ்ந்து காட்டினார். தன் படுக்கையான ஆதிசேசன் என்ற பாம்பு தம்பி இலக்குவனாகவும், சக்கரம் பரதனாகவும், சங்கு சத்துரக்கனாகவும் பிறவி எடுத்து உலக தர்மத்திற்கு உகந்த சகோதரர்களாக வாழ்ந்தார், எப்படி பிறர் வாழ வேண்டும் என்ற உலக தர்மத்தை எடுத்துச் சொல்லும் நிலையில் கிருஷ்ணாவதாரத்தில் கீதை உபதேசம் வழங்கி, அதன் மூலம் உலக மக்களின் உய்விற்கு வழிகாட்டுகின்றார்.

எல்லாம் வல்ல அந்த இறையருள் எம் இதயத்தில் இருந்து இராமகாதையையும், பாரதக் காதையையும் படித்ததுடன் "பகவத் கீதையையும் படிக்க வைத்து இறைவனின் எண்ணத்தை மற்றவரும் புரிந்து கொண்டு வாழ்க்கையின் இரகசியத்தை எல்லோர்க்கு உணர்த்த இந்த நூலை ஆக்கும் எண்ணத்தை எமக்கு அளித்து அதை நூல் வடிவில் ஆக்கும் ஆர்வத்தை ஏற்படுத்தி உங்கள் திருக்கரங்களில் இராமகாதையில் கீதை பாதை" என நூலாகத் தங்கள் திருக்கரங்களில் தவழ விடுகின்றோம். இராமகாதையையும், கீதை பாதையை யும் எளிமைப்படுத்தி இணைத்து உருவாகியுள்ள இந்நூல் எல்லோர்க்கும் வாழ்வின் இருள் அகன்று வாழ்வில் ஒளி வீச இறையருளால் வெளிவருகின்றது.

படித்துப் பயன் பெறுக!

# 2. ஒற்றுமைக்கும் ஒருமைபாட்டிற்கும் வழிகாட்டும் இராமகாதை

உலகம் யாவும் ஒன்று என்று எல்லா இடங்களிலும் பேசப்படுகின்றது. எல்லாரும சகோதரர்களாகவும் வாழ விரும்புகின்றோம். தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்க பல்வேறு விதங்களில் பாடுபடுகின்றோம். ஆனால் தற்போது அப்படி உள்ளதா என்பது கேள்விக் குறியே.

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இராமன் அவதாரம் செய்து தன் வாழ் நாளில் அறப் பாதையில் வாழ்ந்துக் காட்டிய பெருமைக்குரியவன் ஆகின்றான். கிருஷ்ணன் வழங்கிய கீதையின் பாதையிலிருந்து அவன் ஒரு சிறிதும் வழுக்காமல் வாழ்நது வழிகாட்டியதாலோ என்னமோ நம் பாரதத் தந்தை அண்ணல் காந்தியடிகள் துப்பாக்கியால் சுடப்பட்டு மண்ணில் சாயும் சமயம் அவர் வாயில் "ராம்" "ராம்" என்று சொல்லிய வண்ணம் உயிர் துறந்தார்.

சக்கரவர்த்தித் திருமகனாகப்பிறந்து, தந்தையின் விருப்பத்திற்கேற்ப முடிதரிக்க இசைந்து, பின் தாய் கைகேயியின் கட்டளை ஏற்று பட்டத்தைத் தம்பி பரதனுக்குத் தந்து பதினான்கு ஆண்டுகள் காட்டில் கழிக்க இசைநதான். இது கீதையில் குறிப்பிடப்படும். "இன்ப துன்பங்களை ஒரே மாதிரியாகக் கருத

வேண்டும்” என்ற கருத்துக்கு இலக்கணமாக வாழ்ந்தான் இராமன்.

காட்டில் குகனைச் சந்தித்து வேட்டையாடிப் பிழைக்கும் வேடுவனான குகனை வேற்று மனிதனாக நினைக்கவில்லை. சகோதரனாக ஏற்றுக் கட்டித் தழுவிக்கொண்டான். குகனின் அன்பிற்கு அடிமையானான். அவனுக்கு தன் பாதங்களைத் தந்து பாதபூசை செய்து கொள்ளவும் இசைந்து இறுதியில் தம் பரமபதத்தையும் அளித்தான்.

சுக்கிரீவ குரங்கு மனித இனத்திலிருந்து மாறுப்பட்டது என எண்ணாமல் அதையும் ஏற்று அதற்கும் உதவி செய்தான். “உன் உறவினர் என் உறவினர் உன் பகைவர் எம் பகைவர்” என்று உறுதி அளித்து அவனுக்கு அவன் அரசை மீட்டுத் தந்தான். அனுமனின் சொல்வன்மையை “சொல்லின் செல்வன்” என விளித்து அவனைதன் நம்பிக்கைக்குரியவனாக ஏற்றான்.

விபீடணன் இராமனிடம் சரணாகதி அடைந்த போது தானே அதை ஏற்காமல் அனைவரின் கருத்தையும் கேட்டறிந்தான். பெரும்பாலோனோர் விபீடணனை சந்தேகக் கண்ணுடன் நோக்கினர். ஆனால் இராமனோ அனுமன் சொன்ன ஆலோசனைப்படி விபீடணனை ஏற்று அபயம் அளித்தார். பின்பு இலங்கை அரசை முடி சூட்டி வைத்தார். கீதை வாசகப்படி “பரந்தாமனைப் பற்றியவர்க்கு இன்னலும் வருமோ”.

எல்லாரும் ஓர் இனம் எல்லாரும் ஒரு குலம். எல்லாரும் ஓர் நிரை. எல்லாரும் இந்நாட்டு மன்னர். எல்லாரும் உடன் பிறந்தோர், என்ற மாபெரும் தத்துவத்தை தன் வாழ் நாளில் செய்து காட்டினான்.

இராம அவதாரத்தின் நோக்கமே சரணாகதி தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். இக்கருத்தைக் கதையின் போக்கில் உணரலாம்.

காட்டில் வாழ்ந்து கங்கை கரையில் படகோட்டியான குகனைச் சந்தித்து அவன் மீது கொண்ட அன்பை அவனைக் கட்டித் தழுவி "இனி நாம் ஐந்து சகோதரர்கள்" என்றான்.

கிட்கிந்தையில் சுக்கிரீவன் என்னும் குரங்கரசனை சகோதரனாக ஏற்றுக் கொண்டு "இனி நாம் ஆறு சகோதரர்கள்" என்றான். இலங்கையில் பிறந்த இராவணன் தம்பி விபீடணன் சரணா கதியை ஏற்றுக் கொண்டு "இனி நாம் ஏழு சகோதரர்கள்" என்றான்.

இதிலிருந்து நாம் அறிவது என்ன?

சகோதரத்துவத்திற்கு சாதி, மத, இனப் பாகுபாடு இல்லை என்பதை இராமகாதை உணர்த்து கிறதல்லவா? இதைக் குறித்த கம்பன் காப்பிய வரிகள்

"குகனொடும் ஐவரானோம் முன்பு, பின் குன்று சூழ்வான்
மகனோடும் அறுவரானோம் எம்முனம் அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனோம்
புகல் அரும் கா னம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை"

என்பதாகும்.

## மானுடத்தை வென்ற ஸ்ரீஇராமன்

"உலகில் நல்லவர்களைக் காப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நிலை நாட்டுவதற்கும் நான் ஒவ்வொரு யுகத்திலும் பிறக்கிறேன்" என்று பகவான் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஞான் விளக்கம் தந்த நிலையில் தெரிவித்தான். அந்த வாக்கின்படி அவன் பத்து அவதாரங்களை எடுத்தான். அவைகள் முன்பே முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. சுமார் 7,500 ஆண்டுகளுக்கு முன் நடந்த இராமன் வரலாற்றை ஞானத் தெளிவு பெற்ற வால்மீகி முதன் முதலில் வடமொழியில் "இராமாயணம்" என்ற தலைப்பில் பாடல்களில் தொகுத்துத் தந்தார். அவர் இராமனை மனிதப் பிறவியாளனாகக் காட்டி அவன் ஆற்றல் திறனையும் உள்ளத் தெளிவையும் விளக்கி மனிதனை தெய்வமாக்கினார். இவரின் இராமகாதை பல மொழிகளில் பலரால் மொழிபெயர்ப்பு செய்யப் பட்டுள்ளது.

## கம்ப இராமயணம்

தமிழ் மொழியில் தமிழில் ஆக்கியவர் கவிச்சக்கரவர்த்தி கம்பன் ஆவார். ஆறு காண்டங்களில் பல ஆயிரம் பாடல்களில் இவன் இராமன் பெருமையை அற்புதமான காவியமாகப் படைத்து தமிழிலக்கிய உலகுக்குத் தந்துள்ளான் 'புகழ் கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று பாரதியால் போற்றிப்

பாராட்டப்பட்டுள்ளான். இராமனை திருமால் அவதாரம் என்று முதலில் குறிப்பிட்டவனும் கம்பனே ஆவார். மனிதனே தெய்வாகும் போது தெய்வம் மனிதனாக வந்து மானுடத்தை வென்றது என்பது கம்பனின் அசையாத நம்பிக்கையாகும். கம்பன் காப்பியத்தையும் கீதையின் உண்மைப் பொருளையும் மிகச் சுருக்கமாகவும் எளிமையுடன் எவரும் புரிந்து கொள்ளும் விதமாக எழுதப்பட்டதே இந்நூல்.

"உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெறுத் தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே"

என்ற இறைவணக்கப் பாடலுடன் கம்பன் தன் காப்பியத்தைத் துவங்குகிறான். இதன் பொருள் கீதைக் கருத்தை இணைத்துப் பாடியதாக அமைந்துள்ள இதன் பொருள் "இறைவன் எல்லா உலகங்களையும், தாம் உள்ள தன்மையோடு ஆக்குவார். அவற்றை நிலை நிறுத்தி சரண் அடைந்தோரை வாழவைப்பார். அந்த உலக மக்களுடன் தானும் கூடி வாழ்வார், கூடாமல் நீங்கியும் இருப்பார். இத்தகைய எழில் மிகுந்த விளையாட்டை எளிதாகவும், இயல்பாகவும் செய்யக் கூடிய பேராற்றலையும், பேரறிவினையும் பேரருளையும் பெற்ற தலைவனாம், இறைவனை சரணடைகின்றோம்", என்று இறை நிலையை எளிதில் சுருக்கமாக கீதை குறிப்பிடும் சரணாகதி தத்துவத்தை

எளிமைப் படுத்திப் பாடியுள்ளான். மேலும் அவையடக்கப்பாடலாக

"ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு
பூசை முற்றவும் நக்கு புக்கென
ஆசை பற்றி அறைய லுற்றேன்
ஏசில் கொற்றத்து இராமன் கதை அரோ"

என்ற வரிகள் கம்பனின் கற்பனை வளத்திற்கு எளிமைக்கும் சாட்சி பகர்கின்றன. பார்கடலில் அருகே சென்று, அந்தப்பால் முழுவதையும் நக்கியே குடிக்க விரும்பும் பூனையைப் போன்று நான் இராமன் வரலாற்றுப் பெருமைகள் அனைத்தையும் பாட விரும்புவது என்று குறிப்பிடுகின்றான். கவிச் சக்கரவர்த்தியே ஒரு பூனைக்குச்சமம் என்று அவையடக்கம் கூறுவது அவன் பெருமைக்கு சான்று பகர்கின்றது.

# 3. அயோத்தி மன்னன் தசரதன் (பால காண்டம்)

பழம் பெரும் புனித பாரத நாட்டின் வடபகுதியில் கோசல நாடு வளமும் பொலிவும் பெற்றுத் திகழ்ந்தது. அயோத்தியைத் தலைநகராகக் கொண்டு நீண்ட பல ஆண்டுகளாக அறவழி தவறாது ஆண்ட மன்னன் தசரதன் ஆவார். தசம் என்றால் பத்து என்பது பொருள். ஒரே சமயத்தில் பத்து ரதங்களைப் போர்க்களத்தில் செலுத்தும் ஆற்றல் பெற்றவனாதலால் தசரதன் என்னும் பெயரைப் பெற்றான். இவனுக்குக் கோசலை, கைகேயி, சுமித்திரை என்று மூன்று மனைவியர் இருந்தனர். ஆனால் ஒரு குழந்தை பாக்கியமும் இல்லை.

இதனால் மன வருத்தம் கொண்டிருந்த மன்னன் குலகுருவாகிய வசிஷ்டரிடம் தன் கவலையைத் தெரிவித்தான். இதைக் கேட்ட வசிஷ்டரும் கலைக்கோட்டு முனிவரைக் கொண்டு (ருசியசிருங்கர்) மகப்பேருக்குரிய வேள்வியை (புத்திர காமேஷ்டியாகம்) செய்தால் தக்க பலன் கிடைக்கும் என்று தெரிவித்தார். வேள்வியை முறையாகச் செய்தால் எண்ணியது எய்தல் திண்ணம் என்ற கீதை வாசகம் எண்ணத் தகுந்ததாக அமைந்துள்ளதை உணரலாம்.

**கலைக்கோட்டு முனிவர்**

மகிழ்ச்சி அடைந்த தசரதன் கலைக்கோட்டு முனிவரைப் பற்றியும், வேள்வி செய்வதற்குரிய

வழிமுறைகளையும் விளக்கமாகத் தெரிவிக்கும்படி வேண்டினான். அதற்கு வசிட்டர் "தசரத மன்னா! கலைக்கோட்டு முனிவர் மிகவும் தவவலிமை கொண்டவர். காட்டில் ஆசிரமத்தில் தங்கி வாழ்பவர். தீதறியா ஞானி. "பிரம்ம தேவரின் புத்திரர் காசிபர். இவருடைய மகன் விபாண்டகர். விபாண்டகரின் பிள்ளைதான் ருசியசிருங்கர் என்னும் கலைக்கோட்டு முனிவர். இவர் தலையில் மான்கொம்பு போன்ற ஒரு கொம்பு இருப்பதால் கலைக்கோட்டு முனிவர் என்று பெயர் பெற்றவர். "இவரை அங்கதேசத்து மன்னன் தன்னாட்டில் தோன்றிய வறட்சியைப் போக்கும் பொருட்டு மழையை பொழிவிக்க வேண்டி அழைத்துச் சென்றுள்ளான். நாட்டில் மழை பொழிந்து சுபிட்சம் பெற்றதால் அங்கேயே தங்கவைத்து தன் மகளான 'சாத்தை' என்ற பெண்ணை இவருக்கு மணம் செய்து வைத்துள்ளான்" என்றார். தசரதனும் அங்கதேசம் சென்று தக்க மரியாதைகளுடன் கலைக்கோட்டு முனிவரை அயோத்தி நகருக்கு அழைத்து வந்தான்.

**வேள்வியும் விளைவும்**

அயோத்தி மாநகர் வந்த கலைக்கோட்டு முனிவரும் மைந்தரை அளிக்கும் வேள்வியை சாத்திர முறைப்படி செய்தார். வேள்வித் தீயில் ஆகுதியை இட்டார், கலைக்கோட்டு முனிவர். வேதம் ஓத ஓத அக்கினியிலிருந்து ஒரு பூதம் தோன்றி, அமுதத்துடன் கூடிய ஒரு தட்டை பூமியில் வைத்து விட்டு அத்தீக்குண்டத்தின் வழியே சென்று மறைந்து விட்டது.

கலைக் கோட்டு முனிவர் பெரிதும் மகிழ்ந்து தசரதனிடம் “மன்னா! இந்தட்டில் உள்ள அமுதத்தை உன் மனைவியருக்குக் கொடுப்பாயாக” என்று தெரிவித்துத் தட்டை தசரதனிடம் கொடுத்தார். தசரத மன்னன் தட்டிலிருந்த அமுதத்தை எடுத்துக் கோசலைக்கு ஒரு பகுதியும், கைகேயிக்கு ஒரு பகுதியையும், இளைய மனைவி சுமித்திரைக்கு ஒரு பகுதியையும் தந்து மிகுந்திருந்த பகுதியையும் சுமித்திரைக்கே தந்தான். கலைகோட்டு முனிவர் தசரதனிடமும், வசிஷ்டரிடமும் விடைபெற்றுச் சென்றார். சில நாட்களில் மூன்று மனைவியரும் பிள்ளைப் பேற்றை அடைந்தனர். மன்னன் பெரிதும் மகிழ்ச்சியடைந்ததான்.

இதை படிக்கும் வாசகர்களுக்கு ஒரு ஐயப்பாடு தோன்றலாம். வேள்வி செய்வதன் மூலம் பிள்ளைப் பேற்றைப்பெற இயலுமா? இது நடைமுறை சாத்தியம் தானா? இதே ஐயம் கீதையை உபதேசித்ததைக் கேட்டுக் கொண்டிருந்த அர்சுனனுக்கும் எழுந்தது. அவன் அதுபற்றி கண்ணனிடம் கேட்டதிற்கு கண்ணன் வேள்வியின் மகிமை குறித்து சொன்ன கருத்துக்கள் நமக்கு ஏற்புடையதாக அமைகின்றன.

**உன்னத அறிவு. பதம்.27**

தன்னுணர்வில் விருப்பமுள்ளோர் மனம், புலன்கள் இவற்றை அடக்கி, புலன்களின் இயக்கங்களையும், பிராணனையும் அடக்கப்பட்ட மனம் என்னும் நெருப்பில் யாகம் செய்கின்றனர். அதனால்

உரிய பயன்கள் உடனடியாகக் கிடைக்கின்றன என்பதைக் காணுகின்றோம். மந்திர ஒலிக்கு ஆற்றல் சக்தி இருக்கின்றது. வேள்வியில் இடும் பொருட்கள் எரியாகும் போது எழும் புகைமண்டலத்தில் மந்திர ஒலி சக்தியும் இணையும்போது ஓர் அபூர்வ ஆற்றல் சக்தி வெளியாகின்றது என்பதையும் கீதை நமக்கு தெரிவிக்கும் உண்மைகளாகும்.

பந்து மாதங்களுக்குப்பின் கோசலை வயிற்றில் ஒரு ஆண் குழந்தையும், கைகேயிவயிற்றில் ஒரு ஆண் மகனும் சுமித்திரை வயிற்றில் இரு ஆண் குழந்தைகளும் பிறந்தன. அயோத்தி நகரம் செய்தி அறிந்து விழாக்கோலம் பூண்டது. மூன்று தாய்மார்களும் நான்கு குழந்தைகளையும் தொட்டிலிலிட்டுத் தாலாட்டினர். குல குருவாகிய வசிஷ்டர் கோசலையின் குழந்தை மூத்தவனுக்கு 'இராமன்' என்றும், கைகேயியின் மகனுக்கு பரதன் எனவும், சுமித்திரையின் மகன்களுக்கு 'இலக்குவன, சத்ருக்கனன்' என்ற பெயர்களைச் சூட்டினார். மகா ஞானியும், தவசியுமான வசிஷ்டர் இட்ட 'இராம நாம மகிமையைக்' குறிப்பிட வந்த கவிச்சக்ரவர்த்தி கம்பன்

நன்மையும், செல்வமும் நாளும் நல்குமே
திண்மையும், பாவமும் சிதைந்து தேயுமே
சன்மமும், மாணமும் இன்றி தீருமே
இன்மையே 'ராம' என்றிரண் டெழுத்தினால்.

என்று புகழ்ந்துரைக்கின்றார்.

தசரதன் மைந்தர்கள் நால்வரும், நாளொடு மேனியும், பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து, வசிஷ்டரிடம் கல்வி கற்றனர். தசரதன் தன்புதல்வர்கள், நால்வர்மீதும் பரிவும் பாசமும் கொண்டிருந்தாலும் மூத்தமகன் இராமன் மேல் தன்உயிரையே வைத்திருந்தான். இராமனைக் காணும் போதெல்லாம் பூரித்துப்போவான். காணாத நேரமெல்லாம் கவலையுற்றிருப்பான். இராமனும் இலக்குவனும் எப்போதும் இணை பிரியாது ஒருவரோடு ஒருவர் அன்புகொண்டவராகவும், அதேபோல் பரதனும் சத்ருக்கனும் இணைபிரியாது ஒருவரோடு ஒருவர் இணைந்து இருந்தனர். நால்வரும் வசிஷ்ட முனிவரிடம் காலையில் சொன்று அரச குமாரர்களுக்கு உரிய யானை, ஏற்றம், ரதம் ஓட்டும் பயிற்சி, வில், வாள் முதலிய ஆயுதப் பயிற்சியையும், கற்று தேர்ந்தனர். வசிஷ்டரிடம் பாடம் பயின்று மாலையில் அரண் மனைக்குத் திரும்பும் சமயம் வழியில் எதிர்ப்படும் குடிமக்களின் நலம் விசாரிக்கும் இயல்பு இராமனிடம் உண்டு. இதனால் மக்களுக்கு இராமன் மீது மிக்க பரிவும், பாசமும் ஏற்பட்டது. இராமனும் அவன் சகோதரர்களும் கல்வி கேள்விகளிலும் போர்ப் பயிற்சிகளிலும் தேர்ச்சி பெற்று விளங்கினர்.

**விசுவாமித்திரரும் வேள்வியும்**

விசுவாமித்திரர் மிகுந்த தவசீலர். கோப குணம் கொண்டவர். கானகத்தில் தவம் இயற்றி பெரும்

வேள்விகள் செய்பவர். அவரின் வேள்வி நடைபெறாவண்ணம், தாடகி என்ற அறக்கி பெரும் தடையாக இருந்தாள். தசரத குமாரர்களின் போர் ஆற்றலை தம் தவ வலிமையால் உணர்ந்திருந்த விசுவாமித்திரர் ஒரு நாள் தசர மன்னனின் அவைக்குவந்தார். விசுவாமித்திரரைக் கண்ட தசரத மன்னன் பெரிதும் மகிழ்ந்து தக்க மரியாதை செய்து கை கூப்பி வணங்கி "தாங்கள் எம்மை நாடிவந்த காரணத்தை அறியலாமா" என்று கேட்டான். "தசரதா! நான் ஒரு வேள்வி செய்ய இருக்கின்றேன். அதற்கு அரக்கர்கள் இடையூராக உள்ளார்கள். அரக்கர்களை அழித்து என்னுடைய யாகத்தைக்காக்க உன்னுடைய புதல்வர்களில் மூத்தவனாகிய இராமனை என்னுடன் அனுப்புவாயாக!" என்றார் விசுவாமித்திரர். இதைக் கேட்ட தசரதன் மிகுந்த அதிர்ச்சி அடைந்தான். "தவசீலரே! அரக்கர்களுடன் போர் புரியும் அளவு அனுபவம் இல்லாத சிறியவன் இராமன். நானே உம்முடன் வந்து உம்யாகத்தைத் தடுப்பவர் யாராயிருப்பினும் அவர்களை அழித்து உம் வேள்வியை முடித்துத் தருவேன்" என்றுதெரிவித்தான். தசரதன் சினத்துடன் எழுந்தார் முனிவர். "மன்னா! உன்மகன் இராமன் பெருமையை நீ அறிய மாட்டாய். அவனைப்பற்றி எனக்குத் தெரியும்" என்று கோபமாகப் பேசினார் விசுவாமித்திரர். அங்கிருந்த வசிஷ்டர், இராமனை விசுவாமித்திரருடன் அனுப்பும்படி தசரதனுக்குச் சமாதானம் சொன்னார். தசரதனும்

ஒருவாறு சமாதானம் அடைந்து, இராமனை அழைத்துவரப் பணித்தார். அங்கு வந்த இராம இலக்குவனரை முனிவருடன் அனுப்பிவைத்தான்.

### விசுவாமித்திரர் இராம இலக்குவனுக்குத் தந்த வரங்கள்

தம் நாட்டிலிருந்துக் கிளம்பி நகரைக் கடந்து மூவரும் நாட்டைக்கடந்து சென்றனர். காட்டின் வெப்பமும் கடுமையும் அரண்மனையில் வாழ்ந்த அரச குமாரர்களுக்குக் கடுமையாக இருக்கும் எனக்கருதிய முனிவர் அந்தக்கடுமை தெரியாமல் இருக்க 'பலம்' 'அதி பலம்' என்ற இரு மந்திரங்களை உபதேசித்தார். இந்த மந்திரத்தை உச்சரித்தால் மனிதக் களைப்பையும், பசியையும் தாகத்தையும் சிரமமின்றிச் சமாளிக்க முடியும். முக்காலம் உணர்ந்த முனிவர் இராம இலக்குனர்களுக்கு இது தேவை என்பதை உணர்ந்தே இந்த மந்திரங்களை உபதேசித்திருக்க வேண்டும். 'நல்லோர் நட்பு நல்லதே தரும்' என்பதை இதன் மூலம் உணரலாம். இது முனிவரால் கிடைத்த முதல் நன்மையாகும்.

### தாடகை வந்தாள்

விசுவாமித்திரர் காட்டில் ஒரு இடத்தில் தங்கி, அங்கு தங்கி இன்னல் தந்துவரும் அரக்கி தாடகையைப் பற்றி பின்வருமாறு கூறலுற்றார் "இராமா! இவ்வனத்தில் தாடகை என்ற ஒரு கொடிய அரக்கி வாழ்கிறாள். அவளின் மகன்கள் மாரீசன், சுபாகு என்ற இரு அரக்கர்களும் உள்ளார்கள். அவர்கள் முனிவர் களுக்கும், சாதுக்களுக்கம் பெரும் தொல்லை தந்து

வருகின்றார்கள். யாம் இயற்றும் வேள்விகளுக்கு இடையூறு புரிந்து வருகின்றார்கள். அவர்களை அழிப்பதற்காகவே உன்னை அழைத்து வந்தேன் என்றார். தாடகை எங்கே தற்போது இருக்கின்றாள் என்று முனிவரைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே பயங்கர ஒலியை எழுப்பியவண்ணம் இராமன் முன்பு வந்து நின்றாள் தாடகை. அவள் வடிவம் இதுவரை இராமன் காணாத கோர வடிவாக ஒரு மாமிச மலை போன்ற தோற்ற மளித்தாள். அவள் கொக்கரிப்பு செய்தவண்ணம் போருக்குத்தயாரானாள். ஆயினும் இராமன் அவள் பெண் என்பதால் அம்பைத் தொடுக்கத் தயங்கி நின்றான்.

**தயக்கத்தை நீக்கினார் முனிவர்**

இராமனின் உள்ளத்தைப் புரிந்து கொண்ட விசுவாமித்திரர் "இராமா! பெண் கொலை பொருந்தாது என்னும் கொள்கை, நாகரீகம் கொண்ட சமுதாயத்திற் குரியதாகும். பாம்பு கடிக்கவந்தால் பெண் பாம்பு, ஆண் பாம்பு என்று பார்க்க முடியுமா? நல்லவர்களை காக்க தீயரை அழித்தே ஆகவேண்டும். இவள் பெண் அல்லள். பேய்! பேரரக்கி. ஆகவே இவளைக் கொல்வது பாவமாகாது" என்றார். கண்ணன் அளித்த க்தா உபதேசத்தைப் போல். "முனிவர் பெருமானே! தங்கள் வார்த்தைகள் தான் எனக்கு வேதம். நீதி எல்லாமாகும்!" என்று தெரிவித்து தாடகையை வீழ்த்த வில்லில் அம்பைத் தொடுத்தான்.

## தாடகை வீழ்ந்தாள்

தாடகை பூதப்படையை ஏவ அதைத்தவிடுபொடி யாக்கினான் இராமன். தன் மாய சக்தியால் கல்மழை பொழிய வைத்தாள் தாடகை. இராமன் அம்பு அதை வைதததது. இறுதியில இராமன் விடட அமபு தாடகையின் உடலில் பாய்ந்தது. பெருத்த ஒலியை எழுப்பியவண்ணம் ஒரு மாமிசமலை வீழ்ந்ததைப் போன்று தாடகை அலறிக் கொண்டே பூமியில் வீழ்ந்து மாய்ந்தாள்.

## விசுவாமித்திரரின் மகிழ்ச்சி

மகிழ்ச்சி அடைந்த விசுவாமித்திரர் இராம இலக்குவருக்களுக்குப் பலவித படைக் கலன்களைத் தந்து அவற்றைப் பயன்படுத்தும் முறைகளையும் கற்பித்தார். பின்பு தக்கதோர் இடத்தில் தன் வேள்வியைத்துவங்க அதை அறிந்த அரக்கர் கூட்டம் ஆரவாரம் செய்தவண்ணம் ஓடிவந்து வேள்வியைக் கெடுக்க முயன்றனர். இரத்தம், மாமிசம் போன்ற பொருட்களை வேள்வியில் போட்டு வேள்வியை நாசப்படுத்த முயன்றனர். அந்த மாசுபட்ட பொருட்கள் வேள்வியில் விழாத வண்ணம் அம்புகளால் சரக்கூடம் (கொட்டகை போன்று) கட்டினான் இராமன். தாடகையின் மகன்களின் ஒருவனான சுபாகுவை ஒரு அம்பால் வீழ்த்தினான். மற்றொரு மகன் மாரிசனை ஒரு அம்பால் கடலில் தள்ளினான். ஏனைய அரக்கர்கள் இராம இலக்குவர்களின் அம்பால் அடிபட்டு கதறிக்

கொண்டே ஓட்டம் பிடித்தனர். விசுவாமித்திரரின் வேள்வி நல்லமுறையில் முடிந்தது. முனிவர் மகிழ்ந்து இருவரையும் வாழ்த்தினார்.

**கல் பெண்ணானாள்**

விசுவாமித்திரர் இராம இலக்குவர்களை அழைத்துக் கொண்டு கங்கை, சோணை நதிகளில் நீராடி மிதிலைமா நகர் நோக்கி நடந்தார். மிதிலையை ஜனகன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். இவன் சிறந்த ஞானம் பெற்றிருந்ததால் 'ராஜரிஷி' எனப் போற்றப்பட்டான் மிதிலை நகரின் அழகு, தூரத்தில் செல்லும்போதே மூவர்க்கும் மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. மிதிலை நகரின் மதில்புறத்தில் ஒரு பெரிய கல் இருந்தது. முனிவர் முன்னால் சென்றார். இராமன் பின்னால் சென்றான். இராமனின் கால் எதிர்பாராமல் அந்தக் கல்லின் மீதுபட்டது. என்ன ஆச்சர்யம்! அந்தக்கல் பெண் உருவம் அடைந்தது. அந்தப் பெண் ஒதுங்கி நின்று, அவர்கள் காலில் விழுந்து வணங்கினாள். இராம இலக்குவர்கள் வியப்பும், திகைப்பும் அடைந்தனர். அவர்கள் திகைப்பைக்கண்ட விசுவாமித்திரர், அவர்களிடம், "இராமா! இப்பெண்ணின் பெயர் அகலிகை என்பதாகும். இவள் கௌதம முனிவரின் மனைவி. அவள் தன் கணவருக்குவேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தாள். ஆயினும் இவள் அறியாமல் செய்த ஒரு தவறுக்காக கௌதமர் இவளைக் கல்லாகும்படி

சபித்து விட்டார். தன் சாபவிமோசனம் எப்போது என்ற அகலிகைக் கேட்க "தசரத இராமன் இங்கு வருவான் அவன் கால்பட்டதும் உன் கல் உருவம் மாறும் அன்று உன்னை ஏற்பேன்" என்று கூறிவிட்டு அவர் தவம் செய்ய சென்றுவிட்டார். இப்பொழுதுநீ இங்கு உன் கை வண்ணத்தை (வீரத்தை) தாடகை வதத்தில் அங்கு கண்டேன்! உன் கால்வண்ணத்தை (கருணையை) கல்லைப் பெண்ணாக்கியதில் இங்கே கண்டேன் என்றார் விசுவாமித்திரர். அகலிகை இராமனை வணங்கி நன்றி செலுத்தினாள். அவளை அவள் கணவர் கௌதமரிடம் சேர்த்துவிட்டு மூவரும் மிதிலையை நோக்கி நடந்தனர்.

**பிரிந்தவர் கூடினர்**

மூவரும் மிதிலை நகருக்குள் சென்றனர். அங்கிருந்து செடிகளும் கொடிகளும் மூவரையும் ஒரு முக்கிய காரணத்திற்காக சூழ்ந்திருந்த அகழியைக் கடந்து கன்னிமாடத்தைக் கடக்கும் போது கன்னிமாடத்தின்மேலே நின்றிருந்த ஆரணங்கு அழகன் இராமனைக் கண்டாள். அண்ணலும் அவளை நோக்கினான். இருவர் உள்ளத்திலும் இனம் புரியாத காதல் உணர்வு அறும்பியது. அவள்தான் சீதை.

இராமனோ விஷ்ணு அவதாரம். சீதையோ மகாலட்சுமியின் அவதாரம். இருவரும் இராவணனை வீழ்த்துவதற்காக பூலோகத்தில் அவதாரம் செய்திருக்கின்றனர். கீதையில் கண்ணன் குறிப்பிடும்

படி "பக்தரைக் காத்து கொடியவரை அழித்தும், தருமத்தை நிலை நிறுத்துவதற்கும் யுகந்தோரும் நான் தோன்றுகின்றேன்" கீதை உன்னத அறிவு அற்புபதம் 8. கண்ணன் தோன்றி கீதை உரைத்த 2500 ஆண்டுகளுக்குமுன் கீரேதாயுகத்தில் நடந்த இராமன் விஷ்ணு அவதாரம் எடுத்தார் என்பதை பகவான் தெளிவு படுத்துகின்றார்.



சீதையோ பெட்டியில் குழந்தையாக இருந்து, ஜனக மகாராசனால் வேள்விக்காக வயலை உழும் சமயம் கிடந்த பெட்டியில் சீதை கண்டெடுக்கப்பட்டாள். மகப்பேறு இல்லாத ஜனகன் அக்குழந்தையை வீட்டிற்கு எடுத்துச் சென்று செல்லமாக வளர்த்தான். பிறகு ஜனகனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்க ஊர்மிளா எனப் பெயரிட்டான். இப்பொழுது மகா விஷ்ணுவும், மகாலட்சுமியும் பிரிந்த பல ஆண்டுகளுக்குப்பின் இன்று தான் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். இதைக் குறிப்பிடும் கம்பன் "பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ" என்று குறிப்பிடுகின்றான். இருவர் இதயங்களும் பேசிக் கொண்டன.

விசுவாமித்திரர் இராம இலக்குவர்களை ஜனகனின் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். மூவரையும் வரவேற்றான் ஜனக மன்னன். இவர்களின் எழிலைக் கண்ட ஜனகன் திகைப் படைந்தான். முனிவரை நோக்கி "இவர்கள் யார்?" என்று கேட்டான்.

"ஜனக மன்னனே! இவர்கள் அயோத்தியை ஆளும் தசரதனின் குமாரர்கள். உன்னுடைய வேள்வியினைக் காண வந்தார்கள். வில்லையும் காண்பார்கள்! என்றார் முனிவர். "இராமன் வில்லை நாணேற்றினால் துயர் நீங்கும்" என்றான் ஜனகன். ஜனகன் செய்த வேள்வி முடிந்ததும் ஒரு பெரிய வில்லை வேலையாட்கள் அரச சபைக்கு தூக்க முடியாமல் தூக்கி வந்தனர்.

'சிவதனுசு' என்ற பெயர் கொண்ட அந்த வில் சிவ பெருமான் ஏந்தி தக்கன் வேள்வியை அழித்த ஆற்றல் கொண்டதாகும். அத்தகைய வில்லை ஜனகரின் மூதாதையான தேவராத மன்னரிடம் சிவபெருமான் தந்தார். அதை ஜனகன் பாதுகாத்து வந்ததோடு, தன்னிடம் உள்ள சிவதனுசை வளைக்கும் வீரனுக்கு தன் மகள் சீதையை மணம் புரிந்து தருவதாக உறுதி கூறி வந்தார். பேரழகியும், பேரறிவும் படைத்த சீதையை மணக்க பல அரசர்கள் விரும்பி வந்து வில்லை வளைக்க முடியாமல் திரும்பிச் சென்றனர். இச்செய்தியை சதாவந்தவர் சபையில் அறிவித்தார்.

**வில்வளைப்பு**

விசுவாமித்திரரின் குறிப்பைப் பார்வையால் உணர்ந்த இராமன் வில்லின் அருகே சென்று எடுத்தான். வளைத்தான் வில் முறிந்தது. எடுத்தது கண்டனர் இற்றது கேட்டனர் என்பதைப் போன்று வில்லின் முறிவு சத்தம் விண்ணில் கேட்டது. அங்கிருந்த சபையில் இருந்தவர்கள் வியந்தனர், மகிழ்ந்தனர். ஜனகன் தன் மகள் சீதையை இராமனுக்கு மணம் முடித்துக் கொடுப்பதில் மகிழ்ச்சி அடைவதாக விசுவாமித்திரரிடம் தெரிவித்தான். உடனே தசரத மன்னனுக்கு மண ஓலை அனுப்பி வைக்கப்பட்டது. சீதையும் வில்லை வளைத்தவர் தாம் விரும்பிய இராமனே எனக் கேள்விப்பட்டு தசரதன் வர தான் அகமகிழ்ந்தாள். திருமணம் முடிக்க சில தினங்களில்

அயோத்தியிலிருந்து தசரத மன்னன் தன் மனைவியருடனும் பரிவாரங்களுடனும் மிதிலை வந்தான். ஜனகன் தசரதனையும் அவர்தம் சுற்றத்தாரையும் முறைப்படி வரவேற்று உபசரித்தான். இராம இலக்குவனர் பெற்றோரை வணங்கினர். திருமண ஏற்பாடுகள் சிறப்பாகச் செய்யப்பட்டது. குல குருவான வசிஷ்டர் திருமணத்தை முறைப்படி செய்து முடித்து சீதையை இராமனுக்கு ஜனகன் மணம் முடித்து வைத்தான். சீதையின் தங்கை ஊர்மிளையை இலக்குவருக்கு திருமணம் செய்து வைத்தனர். ஜனகன் தம்பியான குசத்துவராசனுடைய மகள்களான மாண்டலியைப் பரதனுக்கும் சுருதகீர்த்தி என்பாளை சத்ருக்கனனுக்கும் மணம் முடித்தனர். திருமணம் புரிந்த தம்பதிகள் நால்வரும் பெரியோர்கள் அனைவரையும் வணங்கி ஆசிபெற்றனர். சில நாட்கள் மிதிலையில் தங்கிய பின் ஒருநாள் ஜனகரிடம் விடைபெற்றுக் கொண்டு அயோத்தியை நோக்கிப் புறப்பட்டனர். விசுவாமித்திரரும் தவம் செய்ய கானகம் சென்றார். வழியில் தசரதன் ஒரு அதிசய நிகழ்ச்சியைச் சந்திக்க வேண்டியிருந்தது.

**பரசுராமனை அடக்கிய இராமன்**

ஜமதக்கினி என்ற முனிவருக்கும், ரேணுகா தேவிக்கும் பிறந்தவர் பரசுராமன். தன் தந்தையை அவமதித்த கார்த்திவீரியன் என்ற அரசனை பரசுராமர் கொன்றார். இதனால் கார்த்தி வீரியன் குலத்தார்

பரசுராமர் இல்லாத சமயம் ஜமதக்னியை கொன்றுவிட்டனர். இதனால் கார்த்த வீரியன் குலத்தார் மீது பரசுராமர் கொண்ட பகைமையால் சத்திரிய குலத்தையே இருபத்தொரு தலை முறைக்குத்



தம்முடைய மழுப் படையால் கருவறுப்பேன் என்று சபதம் பூண்டார். இதனால் அரசர்களின் தலையை வெட்டுவதையே இலட்சியமாகக் கொண்டிருந்த பரசுராமன் மிகுந்த கோபத்துடன் இராமன் முன் எதிர்பட்டார். அவரை இன்ன ர் என்று அறியாத இராமன் 'இவர் யாரோ என்று எண்ணினான். இதற்குள்தசரதன் ஓடிவந்து பரசுராமரை வணங்கி, "இராமன் மிகவும் சிறியன்' நானும் என் உயிர் இராமனும் உங்களுக்கு அபயம். காப்பாற்றுங்கள் என்று கெஞ்சினான். ஆனால் தசரதனை லட்சியம் செய்யாத பரசுராமன் இராமனை நோக்கி "ஏ, இராமா! மிதிலையில் ஒரு ஓட்டைவில்லை உடைத்த நீ என்னிடமுள்ள இந்த வில்லை எடுத்து நாண் ஏற்று பார்க்கலாம் என்று கடுங் கோபத்துடன் பேசி தன்னிடமிருந்தவில்லை இராமனிடம் தந்தார். அந்த வில்லை வாங்கிய இராமன் வளைத்து நாணேற்றி அம்பையும் பூட்டி "பரசு ராமரே! பூலோகத்து அரசர் பலரை அழித்த தாங்கள் ஒரு முனிவர் குமரர். உம்மைக் கொல்வது பாபம். ஆனால் வில்லில் பூட்டி அம்பிற்கு இலக்கு வேண்டும். எதைக் காட்டுகின்றீர் என்று கேட்க, அதிரிச்சியுற்ற பரசுராமன், "தன் வில்லையே இந்த அம்புக் இலக்கு என்று காட்டி இராமனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு ஆசீர் வதித்துச்சென்றார்.

# 4. அயோத்தியா காண்டம்

## அயோத்தியில் அரசியல் மாற்றம்

அறுபதினாயிரம் ஆண்டுகள் சீரும் சிறப்புமாக அயோத்தியை ஆண்ட தசரதன் ஒரு நாள் கண்ணாடியில் தன் உருவத்தைக் கண்ட போது ஒரு நரை முடிதன் காதை நோக்கி நீட்டியிருந்ததைக் கண்டான். நரைமுடி தன்னிடம் "நீ இதுவரை ஆண்டது போதும். இனி இளைஞர்களிடம் ஆட்சியை அளித்து கானகம் சென்று தவம் செய்து உய்வாயாக", என்று தெரிவிப்பதாக உணர்ந்தான். தன் தள்ளாமையை நினைத்து ஆட்சிப் பொறுப்பை இராமனிடம் ஒப்படைக்க விரும்பினான். உடனே மந்திரலோசனை மண்டபத்தை அடைந்து குலகுருவான வசிஷ்டரையும், அமைச்சர்களையும், பிற அரசியல் முக்கியமானவர் களையும் அழைத்து தன் விருப்பத்தைத் தெரிவித்தான். மன்னரின் விருப்பத்தில் நியாயம் இருந்ததாலும், அதுகடன் எனக் கருதியதாலும் வசிஷ்டரும் அமைச்சர்களும் வரவேற்றனர்.

## இராமனுக்கு அழைப்பு

தசரதன் தன் மகன் இராமன் விருப்பத்தை அறிய விரும்பினார். மந்திரி சுமத்திரனை அனுப்பி இராமனை அழைத்து வரப் பணிந்தார். இராமனும் சபையை அடைந்து தந்தையையும், வசிஷ்டரையும், பிற பெரியோர்களையும் வணங்கி நின்றான். அவனிடம்

தாங்கள் விரும்பும் எண்ணத்தை எடுத்துரைத்தான் தசரதன். முதலில் ஆட்சிப் பொறுப்பை நம்மால் ஏற்று நடத்த முடியுமா என்ற அச்சம் உள்ளத்தில் இருந்தாலும், மன்னரின் கட்டளையை ஏற்று கடமை என்று எண்ணி ஒப்புதல் அளித்து, பெரியவர்களிடம் ஆசி பெற்றான். அங்கிருந்தவர்களிடம் விடைபெற்று தன் இருப்பிடம் சென்றான்.

**இராமனுக்கு முடிசூட்டு விழாவிற்கு ஏற்பாடு**

இராமனின் பட்டாபிஷேக கோலத்தை காணவேண்டும் என்று பேராவல் கொண்டிருந்த தசரதன், குலகுரு வசிஷ்டரை அழைத்து, பட்டம் சூட்டும் நல்ல முகூர்த்த நேரத்தைக் கணக்கிட்டுச் சொல்லும்படி வேண்டினார். வசிஷ்டரும் எல்லா சாதகங்களைக் கணித்து "நாளையே முடிசூட்டுதலுக்கு உரிய நல்ல நாள் இருப்பதாகத் தெரிவித்தார். உடனே தசரதன் அண்டைய நாட்டு அரசர்களுக்கெல்லாம் இராமன் முடிசூட்டு விழா பற்றிய ஓலையை ஆள் மூலம் அனுப்பி வைத்தான். இதற்கிடையில் வசிஷ்டரும் முடிசூட்டிக்கொள்ள உள்ள இராமனுக்கு அரசு நீதி முறைகளையும், அரசியல் நுட்பங்களையும் எடுத்துரைத்தார். அரசர் அரசு வள்ளுவனை அழைத்து முடிசூட்டு விழா பற்றிய செய்தியை தண்டோரா மூலமாக பறைசாற்றி மக்களுக்குத் தெரிவிக்கும்படி ஆணையிட்டார். செய்தி அறிந்த மக்கள் பேரானந்தம் அடைந்து நகரை அழகு படுத்தினர். பெண்கள் அழகிய

கோலங்கள் அமைத்து தங்கள் ஆனந்தத்தை வெளிப்படுத்தினர். ஊர் எங்கும் திருவிழாக் கோலம் பூண்டது.

கோசலைக்குத் தம் தோழியர் மூலம் செய்தி தெரிந்தது. மகிழ்வடைந்த கோசலை சுமத்திரையுடன் கோயில்களுக்குச் சென்று வழிபாடு செய்தாள். பலதான தர்மங்களும் செய்து தன் மகனை வாழ்த்தினாள்.

**மந்தரையின் சூழ்ச்சியும் கைகேயின் வீழ்ச்சியும்**

தசரதனின் இரண்டாவது மனைவி கைகேயி. பார் போற்றும் பரதரின் தாய். தன் மகன் பரதன் தான் என்றாலும் கோசலை பெற்ற இராமனையே தன் சொந்த மகனாகக் கருதி வளர்த்தவள். தன் ஆருயிர் மகன் இருக்க தனக்கு ஒரு குறையும் இல்லை என்று கருதியவள். கேகய நாட்டு மன்னனின் மகளான இவள் தசரதனை மணந்த போது தன்னுடன் அழைத்து வந்த தோழி மந்தரை என்னும் பணிப்பெண் கூனி.

இராமன் சிறுவனாக இருந்த போது வில்லில் அம்புக்கு பதில் மண் உருண்டையை வைத்து விளையாடுவது வழக்கம். ஒரு நாள் உருண்டையை வைத்து விளையாடிக் கொண்டிருந்த சமயம் ஒரு உருண்டை கூனியின் முதுகின் மீது வந்து விழுந்தது. விளையாட்டாக அவன் எய்த உருண்டையை வினையாக எடுத்துக் கொண்டு இராமன் மீது வஞ்சம் வைத்துக் கொண்டு காலத்துக்காகக் காத்திருந்தாள் கூனி. இதனால் ஒரு உண்மை நமக்குத் தெரிவது,

விளையாட்டே வினையாகிக் கேடு செய்வதால் விளையாட்டுக்குக் கூட பிறருக்குத் தீங்கு நினைக்கக் கூடாது என்பதாகும்.

மந்தரை என்னும் கூனி "இராமனுக்கு நாளை பட்டாபிஷேகம்" என்பதைக் கேட்டனள் உடனே "இராவணன் இழைத்த தீமை போல் வன்மனக் கிழவி கூனி கைகேயின் வீட்டிற்கு ஓடோடிவந்து உறக்கத்தில் இழுந்த கைகேயியை எழுப்பினாள். கூனி தொட்டதும் விழித் தெழுந்தாள் கைகேயி. துடிப்போடும், சினத்தோடும், நெருப்பு போன்ற கண்களுடனும் தன் அருகே நின்ற கூனி "உனக்குக் கேடு வந்துற்ற நிலையிலும் உனக்கு எப்படி தூக்கம் வருகின்றது?' என்று பதட்டத்துடன் கேட்டாள்.

"என்னடி சொல்கிறாய்?" எனக்கு எப்படி கேடுவரும்?" எம்புதல்வர்களும், என் கணவரும் நன்றாய் இருந்து அறவழியில் நடக்கும்போது எந்தக்குறையும் எனக்கு நேராது" என்றாள் கைகேயி.

"போடி பைத்தியக்காரி! கோசலை தன் விவேகத்தால் பிழைதுக் கொண்டாள். நின் தவமும், செல்வமும் அழிந்துவிட்டன" என்றாள் கூனி". என்னைவிட கோசலை எந்த விதத்தில் உயர்ந்த வாழ்வை அடைந்து விடுவாள்" என்று கேட்டாள் கைகேயி.

"என் உயிர் அனைய தோழி! கைகேயி! நீ செய்தி அறியாமல் பேசுகிறாய்! பெண் என்றும் பாராமல்

அம்புவிட்டு அழித்த அந்த இராமனுக்கு நாளை முடி சூட்டும் விழாவாம். ஊரே அல்லொகல்லோலப் படுகின்றது. நீ இங்கே உறங்கிக் கொண்டுள்ளாய்” என்று கேலியும் கிண்டலுமாகப் பேசினாள் கூனி. “அப்படியா? இன்று இப்போது தான் ஒரு மகிழ்ச்சியானச் செய்தியைச் சொன்னாய்” என்று மகிழ்ந்து தான் தரித்திருந்த மணி மாலை ஒன்றைப் பரிசாகத்தந்தாள் கைகேயி.

தனக்கு வழங்கிய மணிமாலையை எடுத்து தரையில் வீசி எரிந்தாள் கூனி. கோபக்கனல் தெரிக்க “நாளைக்கு இராமனும், சீதையும் சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பார்கள். என் ஆருயிர் தோழியான நீயும். நின் புதல்வன் பரதனும் காட்டுக்குச் சென்று தவம் செய்ய வேண்டியது தான்! என்றாள் கூனி.

“சூரியகுலத்து மரபுப்படி மூத்தவனுக்குத்தான் பட்டம் சூட்டவேண்டுமே ஒழிய இளையவனான என் மகன் பரதனுக்கு எப்படி பட்டம் வரும்! இப்படி சொல்வது உனக்கும் நல்லதல்ல. எனக்கும் நல்லதல்ல. என் நெருங்கிய தோழியாகிய நீ இன்றிவேறு யாராவது இப்படி பேசியிந்தால் இந்நேரம் அவர்கள் நாக்கை அறுத்திருப்பேன்” என்று கடுமையாக எச்சரித்தாள் கைகேயி.

இதற்கு கூனி பின்வருமாறு கூறுகின்றாள், “ஐயோ! நடக்கும் வஞ்சகத்தை அறியாமல் இப்படி மனுமுறையைப் பற்றிப் பேசுகிறாயே! இராமன்

முடிசூடிக் கொண்டால் உன் தந்தையான கேகய மன்னருக்கே ஆபத்து வந்துவிடும். சீதையின் தந்தையான ஜனகன் உன் தகப்பனாரின் நாட்டை அபகரித்துக் கொள்ளுவான். இந்த இராமன் உன் தந்தைக்கு உதவுவானா? உன் தந்தையின் ஆட்சிக்கு ஆபத்துவராமல் காப்பதற்காகவாவது இந்த பட்டமளிப்பு விழாவைத் தடுத்து நிறுத்த வேண்டும்" என்றாள். தன் தந்தைக்கு ஆபத்து வரும் என்று கூனிசொன்ன வார்த்தை கைகேயியின் உள்ளத்தில் சலனத்தை ஏற்படுத்தியது. பின் "இப்படியெல்லாம் கூடச் சூழ்ச்சிகள் நடக்குமா?" என்று கேட்டாள் கைகேயி.

**கைகேயியின் மனமாற்றம்**

மந்தரை என்னும் கூனியின் பசப்பு மொழிகளால் ஆட்கொள்ளப்பட்ட கைகேயி "நாளை நடக்க உள்ள பட்டாபிசேகத்தை நிறுத்த என்ன செய்ய வேண்டும்?" என்று மந்தரையின் யோசனையைக் கேட்டாள்.

இதுதான் தக்க சமயம் என்று நினைத்த கூனி "உன் மகன் பரதன் நாடாள வேண்டும்" என்றாள் "என் மகன் பரதன் நாடாளுவதா? இது நடக்கும் காரியம்தானா? என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் கைகேயி" "நீ மனது வைத்தால் நிச்சயம் நடக்கும். சிறுபெண் நினைத்தால் ஆகாத காரியம் தான் உண்டா? நான் சொல்லுவதைக் கவனமாகக் கேள்; முன்பு ஒரு சமயம் சம்பராசூரனுக்கும், உன் கணவருக்கும் நடந்தபோரில் உனக்கு அளித்த இரண்டு வரங்களை

இப்போது பயன்படுத்திக் கொள். ஒரு வரத்தால் நின்மகன் பரதன், நாடாளவும், சீதைக் கேள்வன் இராமன் ஒருவரத்தால் பதினான்கு ஆண்டுகள் காடு செல்லவும் கேள். தசரதன் வாக்கு தவறமாட்டான். நீதான் உறுதியாக இருக்கவேண்டும். உன் மகனுக்கு ஒரு வழிபிறக்கும். இதுதான் உபாயம்" என்று சொன்னாள் கூனி.

கைகேயியின் சூழ்ச்சிக்கு அளவே இல்லை "மந்தரை தக்க ஆலோசனைகள் சொன்னாய். தக்க சமயத்தில் இரண்டு வரங்களையும் நினைவு படுத்தினாய்" என்று கைகேயி கூனியைக் கட்டித்தழுவிக் கொண்டாள். முத்தாரமும் பொன்னும், பொருளும் பரிசுப் பொருட்களாக வாரிக்கொடுத்து கூனிக்கு விடைகொடுத்தனுப்பினாள்.

**கைகேயியின் அலங்கோலம்**

தன்னை நாடிவரவிருக்கும் கணவன் தசரதனிடம் ஒரு நாடகம் நடிக்கத்தயாரானாள் கைகேயி. தன் அலங்காரங்கள் அனைத்தையும் கலைத்து அலங்கோலம் செய்து கொண்டாள். தன்புகழை வேரோடு அறுப்பதுபோல, தான் அணிந்திருந்த மேகலையை அறுத்து சிந்திவிட்டாள். வளையல்களை உடைத்துக் கொண்டாள். தன் பொட்டைத்தானே அழித்துக் கொண்டாள். தான் தரித்திருந்த பூவை தலையிலிருந்து எடுத்து வீசினாள். கண்களுக்குத் தீட்டப்பட்டிருந்த அஞ்சனமையையும் அழித்துக்

கொண்டாள். பட்டுப்போன கொம்பைப்போன்று பாவை கைகேயி பளிங்குத்தரையில் புரண்டு கிடந்தாள்.

**மன்னன் வந்தான்**

அந்த வேளையில் கைகேயி மாளிகைக்கு வந்த தசரத மன்னன் இந்தக்காட்சியைக் கண்ணுற்றான். திடுக்கிட்டுப் போனான். அவளின் துன்பத்திற்கான காரணம் யாது? என்று பலமுறை கேட்டான். பதில் ஏதும் உடனே சொல்லாமையால் அவளை யானை மானைத்தூக்குவது போல தூக்கினான். அவள் துவண்டு வீழ்ந்தாள் பெருமச்சு விட்டபடி.

"அன்பே! என் ஆருயிரே! கேகயன் மானே! உனக்கு என்ன துன்பம் வந்தது? ஏன் இப்படிக் கிடக்கிறாய்? ஏன் குறைஎதுவானாலும் சொல்! யாராவது உன்னை இகழ்ந்தாள்களா சொல்? அவர்கள் மூவுலகத்தில் எங்கிருந்தாலும் வீழ்த்துவேன். உன்மேல் எனக்கு உள்ள அன்பைப்பின்னால் அறிவாய்!" என்று தசரதன் சிரித்தபடி பேசினான். "என்மேல் உங்களுக்கு அவ்வளவு அன்பா இருக்கின்றது?" என்று சாகசமாகப் பேசினாள் கைகேயி. "என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்? உனக்கு என்ன வேண்டும் கேள். மைந்தன் இராமன் மீது ஆணையாக நீ வேண்டுவன தருவேன்" என்றான் தசரதன். "அப்படியானால் முன்பு சம்பாரசுரனை வெற்றி கொண்டபொழுது நீங்கள் தந்த இரண்டுவரங்களை இப்போது தாருங்கள்" என்று கேட்டாள்.

## வரங்கள் தந்தான்

வஞ்சியின் வஞ்சத்தை உணராத தசரத மன்னன், அந்த இரண்டு வரங்கள் என்ன என்பதை உடனே சொல். இப்பொழுதே தரத் தயாராக இருக்கின்றேன்" என்றான் மன்னன்.

## கைகேயி கேட்ட வரங்களும் விளைவும்

கைகேயி கேட்ட இரண்டு வரங்களில் ஒன்று தன்மகனான பரதன் அரசாளவேண்டும். சீதாராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்யவேண்டும் என்பது இராண்டாவது வரம். கொடியவளின் இவ்வார்த்தைகளைக்கேட்ட தசரதன் நாகம் தீண்டிய யானை சுடிக்குவீழ்வது போல் வேகம் அடங்கி மூர்ச்சையானான். சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்" அடி கைகேயி! உன் புத்தி கெட்டுப் போய்விட்டதா? அல்லது யாராவது வந்து உனக்குக் கெட்ட யோசனை சொல்லித் தந்தார்களா?" என்று கேட்டான் தசரதன். அவன் நிலைதடுமாறினான்". "நான் ஒன்றும் புத்தி கெட்டுப்போய்ப் பேசவில்லை எனக்கு யாரும் சொல்லிதரவுமில்லை. முன்பு தாங்கள் தந்த வரங்களைத்தான் இப்போது கேட்கிறேன். தாங்கள் வரம்தர மறுத்தால் உயிர் விடுவேன்" என்று கடுமையாகப்பேசினாள் கைகேயி. கைகேயியின் கடுமை கண்டு கண் கலங்கி கவலையுற்றான் தசரதன். என்ன செய்வதென்றே புரியாமல் திகைத்தான். பெண் இனத்தையே பகைத்துப் பேசினான்.

“கைகேயி! உன் பேச்சில் அக்கிரமும் அனியாயம் இருப்பதால் உன் மகன் பரதனே இதை ஏற்கமாட்டான். நான் இராமனைப் பிரிந்தால் உயிர் விடுவேன். உன் மஞ்சள் குங்குமத்தை நீயே அழித்துக் கொள்கிறாயா? நான் தந்தவரம் தந்ததுதான். ஆனாலும் நீ அதை நிறைவேற்ற வேண்டாம். உன் மகன் பரதன் தான் அரசாளவேண்டுமென்றால் அதை விட்டு இராமன் கானகம் செல்ல வேண்டும் என்பதையாவது மாற்று” என்று கெஞ்சினான்.

“அரசே! இப்படியெல்லாம் பேசுவதால் தாங்கள் தந்த வரங்களை மாற்றி வாய்மை தவறுகின்றீர்கள் இராமன் மீது ஆணையிட்டுள்ளீர்கள். வரங்கேட்பதை விட்டுவிடு என்று கேட்பது தங்களுக்குத் தகுமா? அல்லது தருமம்தானா?” என்று நியாயம் பேசினாள் கைகேயி.

**மன்னனின் மயக்கம்**

“அடிப்பேயே! நீ பெண் அல்லள்! பேய்கூட இரங்குமே! உன் பெண்ணுள்ளம் இரங்கவிங்லலையே. உன் மகன் பரதன் நாடாளுவதை இந்த நாநிலம் ஒண்ணாது. ஆனாலும் என்கண்; என் ஆருயிர், இந்த உலகுக்கெல்லாம் நல்லுயிர் என் இராமன் என்னை விட்டுப்பிரிந்து செல்லாத ஒரு வேண்டுகோளையாவது நிறைவேற்று” என்று கைகேயியின் கரங்களைப் பற்றி கெஞ்சினான் தசரதன்.

"முடியாது! ஒருக்காலும் முடியாது. வரங்கள் நிறைவேற்றப்படாவிட்டால் என் பிணத்தைத்தான் தாங்கள் காண்பீர்கள்" என்று பிடிவாதமாகப் பேசினாள் கைகேயி.

"அடிபாதகி! சண்டாளி! நீயும் ஒரு பெண்ணா? எங்கள் குலத்துக்கே எமனாக வந்தாயே! நான் தந்த வரங்கள் தந்தது தந்ததுதான். உயிரைவேண்டுமானால் விடுவேனே தவிர, சத்தியம் தவறி எமது சூரிய குலத்துக்கு மாசு ஏற்படுத்தமாட்டேன். இந்த நிலையில் நான் உயிர் விடுவதேமேல்! என் மகன் பரதன் அயோத்தியை ஆளட்டும். என் ஆருயிர் இராமன் காட்டுக்குப் போகட்டும்! நீ கெட்டபெயரோடு, இன்றோடு, இந்தநாட்டை உன் மகனொடு ஆண்டுகொண்டு நீண்டகாலம இரு!" கோபமும் தாபமும் கொப்பளிக்க வேகமுடன் பேசினான் கோவேந்தன். இப்படி பலவாறு பேசி மூர்ச்சையுற்றான் தசரதன். தன் எண்ணம் ஈடேறிற்று என்ற இறுமாப்பில் கவலை இன்றி கைகேயி கண் துயின்றாள்.

இராமனின் பட்டாபிசேகத்தைக் காண காலைக் கதிரவன் விழைந்து வருவது போல காலைப்பொழுது புலர்ந்தது. அயோத்தி நகரமே ஆனந்தக்கடலில் மூழ்கியிருக்க அரண்மனை அந்தப் புரத்தில் சோக இருள் சூழ்ந்திருந்தது. குலகுரு வசிஷ்டர் மந்திரி சுமத்திரனர் அழைத்து பட்டாபிசேகதத்றகான நேரம நெருங்குவதாக மன்னரையும், இராமனையும் அழைத்துவரும்படி கூறினார்.

**கைகேயியின் கட்டளை**

மன்னர் கைகேயியின் அந்தப்புரத்தில் இருப்பதை அறிந்த அமைச்சர் சுமந்திரர் அங்கு சென்றார் "நான் இராமனை உடனே பார்க்கவேண்டும். வரச் சொல்லுங்கள்" என்று அமைச்சரிடம் தெரிவித்தாள் கைகேயி. சுமத்திரரும் இச்செய்தியை இராமனிடம் தெரிவித்தார். தசரதன் வாயால் இராமனைக் காட்டுக்குப் போகச் சொல்லமாட்டார். அதை நாமே கூறிவிடுவோம் என்று முடிவு செய்து கொண்டாள கைகேயி. தன்னை வணங்கிநின்ற இராமனிடம் ஆழிசூழ்உலகமெல்லாம் பரதனே ஆளநீ போய்த் தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கிடும தவமேற் கொண்டு பூழிரிவங் கானம் நண்ணிப் பூண்ணியத் துறைகள் ஆடி ஏழி கண்டாண்டின் வாவென்று இபம்பினான் இரசன் என்றாள். "இராமர்! நீ பதிநான்கு ஆண்டுகள் கானகம் சென்று தவமியற்ற வேண்டும். இந்த உலகை பரதனே ஆளவேண்டும் என்பது மன்னர் கட்டளை!" என்றாள் கைகேயி. இந்த வார்த்தைகள் இராமன் உள்ளத்தை அதிர்ச்சிக்கு ஆளாக்கியிருக்க வேண்டும் சாதாரண மனித இராமனை ஆனால் உலகுக்கு கீதை சொல்ல இருக்கின்ற விஷ்ணு அவதார இராமனுக்கு எந்த சபலத்தையும் ஏற்படுத்தவில்லை. அதற்கு மாறாக பட்டம் சூட்டிக் கொள் என்று தசரதமன்னன் அன்று சொன்னபோது கூம்பிய நிலையில் இருந்த செந்தாமரை முகம் காட்டுக்குச்செல்' என்று தாய்வாயில் கேட்ட மாத்திரத்தில் அன்றுதான்

மலர்ந்த செந்தாமரை போன்று விரிந்திருந்தது என்று குறிப்பிடுகின்றார் கம்பர்.

இப்போது எம்மனோரால் இயம்புதற் கெளிதோ யார்க்கும்
செய்யரும் குணத்து இராமன் திருமுகச் செவ்விநோக்கின்
ஒப்பதே முன்பு; பின்பு அவ்வாசகம் உணரக் கேட்ட
அப்பொழுது மலர்ந்த செந்தமாரையினை வென்றது அம்மா

முகப்பொலிவோடு மட்டுமின்றி அகப் பொலிவையும் இராமனின் பதிலுரை மூலம் கோடிட்டுக் காட்டும் அந்த வரிகள்

மன்னவன் பணியன்றாகில் உம்பணி மறுப்பெனோ? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ
என் இதின் உறுதி? அப்பால் இப்பணி தலைமேற் கொண்டேன்
மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன்! விடையும் கொண்டேன்

என்று "தந்தை தான் சொல்ல வேண்டுமா? தாய் தாங்கள் சொன்னால் போதாதா? நான் ஆண்டாலென்ன? தன்தம்பி பரதன் ஆண்டால் என்ன? என்று நினைக்கின்ற பக்குவமனம் இராமனிடம் இருந்தது. இதைத்தான் கண்ணனின் கீதை உரையில் கோடிட்டுக் காட்டுகின்றான். கதைப் போக்கில் கீதை உரைகளை குறிப்பிட்டால் குழப்பம் ஏற்படுத்தும் என்பதால் கதை முடிவில் கீதை வரிகள் தரப்படுகின்றது.

கைகேயி அன்னையின் ஆணையை ஏற்று தன் தாய் கோசலை வீட்டுக்குச் செல்லுகின்றான் இராமன். அன்று தம்பியுடன் செல்லாமல் தனித்துச் செல்கின்றான். தன் மகன் பட்டம் சூடியபின் தன்னிடம் வரும்போது கவரிவீசவும், வெண்கொற்ற குடைபிடித்து பரிவாரங்களுடன் வருவான் என்று அந்தக் காட்சியைக்காண விரும்பி ஆவலுடன் காத்திருக்கும் தாயின் முன் தனியாளாய்ச் சென்ற இராமனைக் கண்டு திகைக்கின்றாள் தாய். தனிமையில் இராமனை செல்ல வைக்க விரும்பாத கம்பன், "இராமன் விதி முன் செல்ல, அவன் செய்த் தருமம் அவனைப்பின் தொடர்ந்து சென்றதாக கற்பனை செய்கிறார் குழைகின்ற கவரி இன்றி, கொற்ற வெண்குடையுமின்றி இழைக்கின்ற விதி முன்செல்லத் தருமம் பின் இரங்கி ஏக மழைக்குன்றம் அன்னான் மௌலி கவித்தனன் வரும் என்று என்று தழைக்கின்ற உள்ளத்து அன்னாள் முன்" ஒரு தமியன் சென்றான். "இராமா? முடிசூட ஏதேனும் இடையூறு உண்டா?" என்று கேட்டாள் கோசலை. "ஆம் தாயே! உங்கள் அன்புமகன் என் தம்பி பரதன் முடிசூடடிக மகாளளப மபாகின்றான்" என்றான் இராமன. "முறைமை என்ற ஒன்று தவிர நிறை குணத்தவன். உன்னைவிட நல்லவன் பரதன். ஆகவே தம்பிக்கு ஆளுகையைத்தந்து அவனுக்குத் துணையாக என்றும் வாழ்க" எனப்பணித்தாள், இராமனை இம்மண்ணுக்குத் தந்த கோதில் கோசலைத்தாய்.

"அம்மா! மன்னர் எனக்கு மற்றொரு பணியையும் தந்துள்ளார் நான் பதிநான்கு ஆண்டுகள் வனவாசம் செய்துவர வேண்டும் என்று". இதைக்கேட்ட கோசலை "இராமா! நீ இன்றி நான் எப்படி வாழ்வேன்" என்று அழுதுபுலம்பி கண்ணீர் வடித்தாள் கோசலை. தானும் உடன் வருவதாகச் சொன்ன.தாயிடம் தன் தந்தையைக் கவனித்துக் கொள்ள வேண்டிய கடமையைக் கூறிவிடைபெற்று சிறியதாய் சுமித்திரை இல்லம் நோக்கி சென்றான் இராமன்.

கோசலை தன்கணவர் தங்கி இருந்த கைகேயி வீட்டுக்குச் சென்று கலங்கிய நிலையில் இருந்த தசரதனை சமாதானப்படுத்த முயன்றாள். வசிட்டர் இருவருக்கும் எவ்வளவோ தர்மங்களையும் எடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. கைகேயியைப் பார்த்து "இவள் என் மனைவி அல்லள். இவள் மகன் பரதன் என் மகனுமல்லன். என் இறுதிச் சடங்குகளையும் இவர்கள் செய்ய உரிமை இல்லை" என்று சொல்லி புலம்பியவண்ணம் மூர்ச்சித்து விழுந்தான் தசரதன்.

வசிஷ்டர் அரண்மனை சபாமண்டபத்திற்குச் சென்று கூடியிருந்த மக்களிடம் செய்தியைத் தெரிவிக்க மக்கள் துடித்தனர். விரைவில் செய்தி அரண்மனை முழுதும் பரவி விட்டது.

**இலக்குவனின் சீற்றம்**

இச்செய்தி கேட்ட இலக்குவன் பெரிதும் ஆத்திரமடைந்தான். வில்லை எடுத்தான். அதில்

அம்பைத் தொடுத்தான். தன் அண்ணன் இராமனைக் கானகம் அனுப்ப முயன்ற கைகேயியைத் தொலைத்து அண்ணனுக்கு முடிசூட்டுவேன். எதிராக வரும் எந்தச் சக்தியையும் அழித்தொழிப்பேன்" என்று அரண்மனை முழுதும் ஆர்பரித்துத்திரிந்தான். இதைக் கேள்வியுற்ற இராமன் அவனை அழைத்து அவன் கோபத்தைக் தணிவிக்க பல நீதிகளைச் சொன்னான்.

**விதிசெய்யும் பிழை**

தம்பி! இலக்குமணா!

நீரின்றி இருந்தால் அது நதியின் பிழையா? அதுபோல் தற்போது நடப்பவைகளுக்கு மன்னனின் பிழையும் இல்லை, நம்மைப் பெற்று வளர்த்த தாயின் புத்தியிலும் பிழையில்லை. தம்பி பரதன் மீதும் பிழையில்லை. ஆனால் எல்லாம் விதியின் பிழை" இதற்காக நீ ஏன் சினம் கொண்டு போர் செய்யத் துடிக்கிறாய்? சாந்தம் உறுவாயாக" என்று சொல்லி சாந்தப்படுத்தி, சுமித்திரை மாளிகைக்கு இருவரும் சென்றனர். செய்தியைக்கேட்டு கலங்கினாள் சுமித்திரை. தம்பி இலக்குவனை தாய் தந்தையையும், தாய்மார்களையும் கவனித்துக்கொள்ள கேட்டுக் கொண்டபோது அதற்கு உடன்படாத இலக்குவன் தானும் கானகம் வருவேன் என்றான். அப்போது சுமித்திரை பல அறிவுரைகளைக் கூறி" இராமன் உனக்குத் தலைவன். சீதை உன் தாய்! அவர்கள் அயோத்தி திரும்பினால் அப்போதுதான் திரும்ப

வேண்டும்.. அவர்களைக்காப்பது உன் கடன்" என்று தெரிவித்து இருவருக்கும் விடைகொடுத்தாள்.

### மர உரிதரித்தல்

கைகேயியின் பணியாட்கள் கொண்டு வந்த காவி ஆடையை இராமனும் இலக்குவனனும் அணிந்து கொண்டனர். இடையில் சந்தித்த வசிஷ்டரிடம் பிரியா விடைபெற்று சீதையின மாளிகைககு அவளிடம விடைபெற சென்றனர். மரவுரியுடன் கணவனைக் கண்ட சீதை திகைத்துப்போனாள். நடந்தவைகளை இராமன் மூலம் அறிந்த தானும் உடன் வர விருப்பம் தெரிவித்தாள் சீதை. காட்டில் பல தொல்லைகள் வரும் என்று எடுத்துச் சொல்லியும் கேட்காத சீதை மரவுரிபூண்டு பின் தொடர்ந்தாள். மூவரும் மக்களிடம் விடைபெற்றுக் கொண்டு சுமந்திரன் தேர் ஓட்ட கானம் நோக்கி புறப்பட்டனர்.

### தசரதன் மரணம்

அயோத்தி அரண்மனையில் இராமன் பிரிவால் துடித்துக் கொண்டும், புலம்பிக் கொண்டும் கிடந்த தசரதனுக்கு கோசலை ஆறுதல் மொழி சொல்லிக் கொண்டிருந்தாள். அது சமயம் சுமந்திரன் வந்து "இராமன் காட்டிற்குப் போய்விட்டான்" என்று சொன்ன மாத்திரத்தில்" என்ன! என் இராமன் போய் விட்டானா? என் உயிர் போய் விட்டதா" இராமா! இராமா!! என்று நம்பாரதத்தந்தை அண்ணல் காந்தியடிகள் குண்டு துளைக்கப்பட்டு சொல்லிய படியே மண்ணில்

சாய்ந்தபடி உயிரை விட்டான். வாய்மையும் மரபும் காத்து மண்ணுயிர் ஈந்தவள்ளலானான் தசரதன். மன்னன் பிரிவைத் தாங்காது அரண்மனையில் இருந்தவர்களும், மக்களும் ஓலமிட்டு அழுதனர். அனைவருக்கும் வசிஷ்டர் ஆறுதல் கூறினார்.



## இராம குகன் சந்திப்பு

காட்டில் இராமன் முன் செல்ல அவனைத் தொடர்ந்து சீதை செல்ல, அவர்களுக்குப்பின் காவலாக இலக்குவன் சென்றான். மூவரும் கங்கைக் கரையில் தங்கினர். அது சமயம் இப்பகுதிக்குத் தலைவனான குகன் என்னும் வேடன் இராமன் அங்கு தங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டு இராமனைக் காண அங்கு வந்தான். தான் உபசரிப்புக்காகக் கொண்டு வந்த மீனையும், தேனையும் அவன் பாதங்களில் வைத்து உண்ணும்படி வேண்டினான் குகன். இராமன் புன்னகை புரிந்தபடி "அவன் அன்பைப் பாராட்டி தங்களை அவன் படகில் அக்கரை சேர்க்கும் படி தெரிவிக்க அடுத்தநாள் அவன் படகில் ஏறி கங்கையைக் கடந்து மறுகரையில் மூவரும் இறங்கினர். அவர்களைப் பிரிய மனமில்லாத குகன் இராமனை தன்னிடத்திலேயே தங்கும் படி வேண்டி. தண்ணீரால் இராமன் பாதங்களை அருச்சனை செய்தான் குகன்.

## குகனோடு ஐவர் ஆனோம்

குகனின் அன்புப் பெருக்கை உணர்ந்த இராமன் குகனைக் கட்டித் தழுவிய வண்ணம் "அன்பனே! நீ என் உயிருக்கு ஒப்பானாய். என் தம்பி நின் தம்பி! இந்த சீதை நின் கொழுந்தி என்று குகனுக்கு விடை கொடுத்து, குகன் காட்டிய பாதையில் சென்று பரத்வாச முனிவரின் ஆசிரமத்தை அடைந்தனர். அவரும் மூவரையும், வரவேற்று உபசரித்து விருந்து வைத்தார்

அவர். அவர்களை அங்கேயே தங்கியிருக்கும் படி வேண்ட, தங்கள் இயலாமையைக் கூறி அவரிடமிருந்து விடைபெற்று சித்திர கூட மலைக் காட்டில் பன்னக சாலையை இலக்குவன் கட்டி முடிக்க அதில் இராமனும் சீதையும் தங்கினர்.

**பரதனின் பதற்றம்**

தன் பாட்டனார் வாழும் கேகய நாட்டிற்கு பரதனும் சத்ருக்கனனும் சென்று தங்கியிருந்தார்கள். அது சமயம் அயோத்தியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நாம் அறிவோம். ஆனால் பரதனும் தம்பியும் அறியார்கள். குலகுரு வசிஷ்டரின் கட்டளைப்படி அமைச்சர் சுமந்திரன் பரதனை உடனே அழைத்து வா ஒரு ஓலையுடன் தூதுவரை அனுப்பினார். அயோத்தி திரும்பிய பரதன் மாநகரின் எல்லைக்கு வந்தடைந்ததும் நகரம் பொலிவின்றி மங்கலம் இழந்து காணப்படுவதைக் கண்டான். ஏதோ விபரீதம் நிகழ்ந்திருக்கும் என ஊகித்தான். அரண்மனைச் சென்று தன் தந்தையைக் காணாது தவித்தான். தன் தாய் கைகேயின் மாளிகைக்கு வந்து தாயை வணங்கினான் "எம் தந்தை எங்கே? என்று கேட்டான்" உன் தந்தை வானுலகம் சென்றார் நீ வருந்த வேண்டாம்" என்றாள் தாய் கைகேயி வருந்தத்தால் துடித்த பரதன் என் அண்ணன் இராமனை வணங்காமல் என் துயர் தீராது" என்றான் பரதன். "இராமன் கானகம் போய்விட்டான்" என்றாள் கைகேயி. "என் அண்ணன்

இராமன் காட்டிற்குச் செல்லவும், தந்தை வானுலகம் செல்லவும் காரணம் யாது? என்று கேட்டான் பரதன். கைகேயி நடந்தவைகளைத் தெரிவிக்க, பெரிதும் பதைப்புற்ற பரதன் தன் தாயாரை "தாய் அல்ல! பேய்!" என்று சாடினான் அழுதான் புலம்பினான்! தேம்பினான்" தீராத பழிக்கு ஆளாக்கினாயே! யான் என் செய்வேன்? யாரைக் கேட்பேன்? என்று சொல்லிய வண்ணம் கோசலையின் மாளிகைக்குச் சென்று அவரைக் கண்டான். கோசலையிடம் தன் உள்ளத் தூய்மையை உணர்த்தினான். அங்கு தந்தையின் உடலைக் கண்டு ஆழ்ந்த துயரடைந்தான். வசிட்டர் சொன்னபடி தசரதனுக்கு சத்ருக்கனன் இறுதிச் சடங்கினைச் செய்தான்.

**பரதனுக்கு முடிசூட்ட அழைப்பு**

வசிஷ்டர் தன்னிடம் வந்த பரதனிடம் முறைப்படி முடிசூட்டிக் கொள்ளும்படி கூறினார். அதற்கு பரதன் "முன்னவன் இருக்க நான் முடிசூட்டுக் கொள்வது நீதியா, தீராப்பழிக்கு ஆளாக விரும்பவில்லை. கானகம் சென்று அண்ணனை அழைத்து வந்து முடிசூட்டுவேன். அவர் வரமறுத்தால் அங்கேயே தங்கி தவம் செய்வேன். எல்லோரும் இராமனை அழைத்து வர என்னுடன் வாருங்கள். மக்களுக்கும் முரசறைந்து அறிவிப்பீர்களாக" என்று பணித்தான். பரதனின் பண்பு நலம் கண்டு அயோத்தி மக்கள் அளவிலா ஆனந்தம் அடைந்தனர். பரதனுடன் அனைவரும் செல்ல

ஆயத்தமாயினர். சத்ருக்னன், அமைச்சர்கள் மூன்று தாய்மார்கள், மக்களுடன் பரதன் அயோத்தினை விட்டுக் கானகம் புறப்பட்டான்.

## ஆயிரம் இராமர்க்கு இணையான பரதன்

அமைச்சர் சுமந்திரன் வழிகாட்ட மக்கள் கூட்டம் பரதனுடன் சேர்ந்து செல்வதைக் கங்கைக் கரையில் நின்ற குகன் கண்டான், "படையெடுத்து வருகின்றான் பரதன்" என்ற நினைத்து தன் படைகளை போருக்கு ஆயப்படுத்தினான். அருகே பரதன் வர, வர அவன் எண்ணத்தில் மாற்றம் ஏற்பட்டது. குழம்பிய கண்களுடன் கூப்பிய கையை தலை மேல் வைத்த வண்ணம் வரும் பரதன் போருக்கு வரவில்லை. திரும்பவும் இராமனை அழைத்துச் செல்ல வந்துள்ளான் என்று தெளிந்தான். தன் பக்கம் வந்ததும் சுமத்திரன் பரதனுக்கு "உன் அண்ணனின் அன்பன் குகன்" எனத் தெரிவிக்கவும் குகனிடம் வந்து பணிந்தான். அவன் செய்கையை குகனின் உள்ளத்தையே மாற்றி வந்ததுடன் ஆயிரம் இராமர் வந்தாலும் நினக்கு ஈடு ஆகமாட்டார்கள் என்று பாராட்ட வைத்தது. குகன் உதவியுடன் கங்கையைக் கடந்து இராமர் தங்கியிருந்த பரத்வாச முனிவரின் ஆசிரமத்தைக் கடந்து சித்திரக் கூட மலையை அடைந்தனர்.

## இலக்குவனின் சீற்றம்

பரதன் பெரும் பரிவாரத்துடன் சேனைகளுடன் வருவதை மலை மீது இருந்தபடி இலக்குவன் கண்டான்

குதித்தெழுந்தான். இதை அண்ணனிடம் தெரிவித்தான். இராமர் இலக்குவனின் சீற்றத்தைக் குறைக்க புன்முறுவல் பூத்த வண்ணம் "பொறு இலக்குவனா! நீ பரதனைத் தவறாக எண்ணாதே! பரதன் உடன் வந்தவர்களை நிறுத்திவிட்டுச் சத்ருக்கனோடு இராமனை நோக்கி வந்தான். அவன் வந்த காட்சியை தன் பேச்சிற்கு சாட்சியாக இராமன் இலக்குவனுக்குக் காட்டினான். இலக்குவனின் கரங்களில் இருந்த வில் தானாகக் கீழே விழுந்தது. பரதன் ஓடி வந்து "அண்ணா" என்று இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். இராமன் கட்டித் தழுவிக் கொண்டு "தம்பீ! பரதா" என்றான். அந்த ஒருவார்த்தையில் ஆயிரம் உணர்ச்சிகள் தெளிந்தன. இராமன் தந்தையின் நலனைக் கேட்க அவர் பரதன் தந்தை விண்ணுலகை அடைந்ததைத் தெரிவித்தான். பெரிதும் வருந்திய இராம இலக்குவனர்களைக் கொண்டு தந்தையின் நீர்க்கடனை வசிஷ்டர் செய்து முடித்தார். பரதன் தவக் கோலம் கொண்டிருந்த நிலைக்குக் காரணம் கேட்டான் இராமன். பரதன் கண் கலங்கி "நீயே மீண்டும் வந்து அயோத்தியை ஆள வேண்டும் இல்லையே யானும் நின்னுடன் தங்கி கானகத்தில் வாழ்வேன்" என்றான் பரதன். இராமன் அவனுக்குப் பல அறங்களைத் தெரிவித்து தன் இயலாமையை விளக்கினான். இராமனே ஆட்சியை ஏற்று நடத்த வேண்டும் என்று தெரிவிக்க வேறு வழியறியாத பரதன் இராமனிடம் "அண்ணா!

பதினான்கு ஆண்டுகள் சென்று ஆட்சியை ஏற்றுக் கொள்ள வேண்டும் இல்லையெனில் நான் நெருப்பில் விழுந்து மடிவேன்" என்று தெரிவித்து இராமனின் பாதுகைகளைப் பெற்று விடைபெற்று, நகருக்குள் செல்லாமல் நந்திக் கிராமத்திற்கு சென்று அங்கு பாதுகைகளுக்கு பட்டம் சூட்டி பூசித்தபடி அன்ன ஆகாரம் இன்றி விரதம் பூண்டு இராமன் சென்ற திசை நோக்கித் தொழுத வண்ணம் வாழ்ந்தான். இராமனும் இனி தாம் சித்திர கூடமலையருகில் வாழ்ந்தால் பலரும் வந்து தொந்தரவு செய்யக் கூடும் என்று இலக்குவனுடன் தென் திசை நோக்கிக் கடுங் கானகத்தில் அத்திரி ஆசிரமத்தை அடைந்து அவரின் ஆசி பெற, அவர் மனைவி சீதை மீது அன்பு மழை பொழிந்து சீதைக்கு வேண்டிய ஆடைகள், ஆபரணங்கள், சந்தனம் முதலியவற்றை வழங்கி உபசரித்தான்.

# 5. இராமனின் கானக வாழ்க்கை (ஆரண்யகாண்டம்)

## தும்புருவிற்கு சாப விமோசனம்

அத்திரி முனிவரின் ஆசிரமத்தில் தங்கிய இராமன் அடுத்த நாள் முனிவரிடம் விடைபெற்றுக் கானகத்தில் சென்றுக் கொண்டிருக்கையில் வழியில் விராதன் என்னும் அரக்கன் மின்னல் வேகத்தில் வந்து சீதையைத் தூக்கிக் கொண்டு ஆகாயத்தில் சென்றான். அவனை இராம இலக்குவனர் தடுத்து தோளை வாளால் வெட்டியும், காலால் உதைத்தும் வீழ்த்தினர். இராமன் காலால் உதைபட்ட விராதன் தன் தேவ உருவம் கொண்டு இராமனை வணங்கி "ஐயனே! நான் குபேரனுடைய அளகாபுரியைச் சேர்ந்தவன், தும்புரு என்று பெயர். தேவ சபையில் நடனமாடிய இரம்பையின் நடனம் கண்டு இச்சை கொண்டதால் இச்சாபத்திற்காளானேன். நின் பாதம் பட்டதால் சாபம் நீங்கிற்று" என்று தன் வரலாற்றை தெரிவித்து மறைந்தான் தும்புரு.

## சரபங்க முனிவருக்கு முக்தி

மூவரும் சரபங்க முனிவரின் ஆசிரமத்தை அடைந்தனர். அங்கே தேவேந்திரன் அம்முனிவரை சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்ல வந்திருந்தான். சொர்க்கத்தை விரும்பாத அவர் முக்தி நிலை (பிறப்பற்ற நிலை) வேண்டி இராமன் வரவால் மகிழ்ச்சியுற்று தன்

மனைவியோடு நெருப்பில் மூழ்கி வீடுபேற்றை அடைந்தார்.

## வாலகில்ய முனிவர்களின் வேண்டுகோள்

பிறகு மூவரும் தண்டகாவனத்தை அடைய, அங்கு மௌன விரதம் பூண்டு, தவயோகிகளும் வாலகில்ய முனிவரும் அரக்கர்கள் யாகங்களை அழித்து வருவதைத் தெரிவித்து, அதர்மத்தை அழித்து தங்களுக்கு விடுதலை வழங்க இராமனை வேண்டினர். இராமனும் பசு, அந்தணர், எளியோருக்கு வரும் இன்னலைப் போக்கி அதர்மத்தை வீழ்த்துவேன் என உறுதி அளித்து சுதீக்ஷண முனிவரின் ஆசிரமத்தை அடைய அவர் தம் செய்தத் தவப்பயன்களை எல்லாம் இராமனுக்கு வழங்கினர்.

## அகத்தியர் ஜடாயு ஆசிபெறல்

பஞ்ச வடியை நாடிச் சென்ற மூவரும் அகத்தியர் ஆசிரமத்தை அடைந்து ஆசிபெற்று வருணாஸ்திரத்தை வழங்கி விடை கொடுத்தனுப்பினார். தன் தந்தையின் அன்பு நண்பனான ஜடாயு என்னும் கழுகினைக் கண்டு சந்தித்து உரையாடினர். ஜடாயு தன் நண்பரின் பிள்ளைக்களைக் கண்டு மகிழ்ந்து நண்பர் தசரதன் மாண்டதைக் கேள்வியுற்று வருந்தி தான் எப்போதும் அவர்களுக்குத் துணையாக இரும்பதாகச் சொல்லி பிரியா விடை கொடுத்து அனுப்பினார். மூவரும் பஞ்சவடி என்னும் இடத்திற்கு வந்தனர்.

## மின்னலென வந்தால் மின்னல் கொடியாள் சூர்பனகை

பஞ்சவடியில் பர்ண கசாலாசயை இலக்குவன் கட்ட அதில் இராமனும் சீதையும் தங்கினர். இலக்குவன் இரவு பகலாக காவல் காத்து வரும் ஒரு நாள் கொடிய அரக்கியும், இராவணின் தங்கையுமான சூர்ப்பனகை எதேச்சையாக இராமனைக் கண்டு அவன் அழகில் மயங்கினாள். தான் ஒரு அழகான பெண்ணாக வடிவு கொண்டாள். நெஞ்சத்தில் வஞ்சக நஞ்சைத் தேக்கி மயில் சாயலுடன் அன்னம் போல் நடந்து வந்தாள் என இலக்கிய நயமுடன் குறிப்பிடும் கம்பன்

பஞ்சி யொளி விஞ்சு குளிர்பல்லவம் அனுங்க
செஞ் செவிய கஞ்சநிகர் சீரடிகள் ஆகி
அஞ் சொல்இள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்

என்ற பாடல் மூலம் தெரிவிக்கின்றான்.

இராமனைக் கண்டு காதல் கொண்டு காம உரையாடி அவனைக் கட்டித்தழுவ நெருங்கினாள். அது சமயம் வெளியே வந்த சீதையைக் கண்டு அவள் அழகைக் கண்டு அதிரிச்சி அடைந்தாள் சூர்பனகை. அவள் இருக்கும் வரை தன்னை இராமன் விரும்பமாட்டான் என்பதால் அவளைத் தூக்கிச் செல்ல திட்டமிட்டாள். இராமன் தான் ஒரு ஏகலத்தினிவிரதன் என்றும், தம்பி இலக்குவன் ஒரு கோபக்காரன் என்பதால் அவளுக்குத் துன்பம் நேரும் என்றும் எச்சரித்து சூாப்பனகையை துரத்தி அடித்தான் இராமன். அன்று இரவெல்லாம் இராமன் நினைவாக இருந்த சூர்ப்பனகை

பர்ணசாலைக்குப் பக்கம் வந்து சீதையைத் தனிமையில் இருப்பதைக் கண்டாள். இராமன் தடாகத்தில் நீராடிக் கொண்டிருக்க, சீதைக்குத் தொலைவிலிருந்து காவல் காத்த இலக்குவனைப் பார்க்காமல் அவளைத் தூக்கிச் செல்ல முயன்றாள்.



**வஞ்சிக்குகிடைத்த பரிசு**

இதைக் கண்டு சீற்றமுள்ள இலக்குவன் வாளை உருவி பெண்ணைக் கொல்வது பாவம் என நினைத்து சூர்ப்பனகையின் மூக்கு, இருகாதுகள், இரு கொங்கைகளையும் அறுத்து வீசினான். அப்போது அங்கு வந்த இராமன் சூர்ப்பனகையின் நிலைகண்டு வியப்புற்றான். அவளை யார் என்று கேட்க! நேற்று நின்னிடம் வந்தவள் தான் நான்" என்றாள். "அப்படியென்றால் நின் அழகு!" என்று கேட்ட இராமன் "உன் தம்பியால் சீர் குலைந்து விட்டதே" என்றாள் சூரப்பனகை. உன் தம்பி யாவது என்னை மணந்தால் உங்களுக்கு பல உதவிகள் செய்வேன்" என்றாள் சூர்ப்பனகை. அவள் இலக்குவனின் கோபத்துக்கஞ்சி உயிர் தப்பினால் போதும் என்ற எண்ணத்துடன் ஓடினாள் சூர்ப்பனகை. தன்னை அவமானப்படுத்திய இந்த மானுடர்களை சும்மா விடக் கூடாது என்று நினைத்தாள சூர்ப்பனகை. தன் பகுதியை ஆண்டு வந்த கானிடம் ஓடினாள்.

**கான் வீழ்ந்தான்**

சூர்ப்பனகையின் அவலக் கோலத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றான். தன் பெரும் படையைச் சேர்த்துக் கொண்டு இராமன் இருக்கும் இடம் வந்தான். போருக்கும் தயாரானான். இராமன் இலக்குவனை சீதைக்குக் காவலாக இருக்கச் சொல்லிவிட்டு அம்புகளைத் தொடுத்து கரன படைகளைச் சிதறடைத்தான். காகுத்தன் இராமனின் அம்பு கரனின்

கழுத்தை வெட்டிச் சாய்த்தது. சூர்ப்பனகை, கரனின் உடலைக் கட்டிக் கொண்டு அழுதபின் இராவணனை நோக்கிச் சென்றாள்.

**இராவணன் மாட்சி**

இலங்காபுரியின் பேரரசனாகத் திகழ்ந்தவன் இராவணன். இவன் பிரம்ம தேவனின் பேரன் விச்ரவாசுவின் மகன். இவனுக்கு கும்பகர்ணன், விபீஷணன் என்ற இரு தம்பிகளும் சூர்ப்னகை என்ற தங்கையும் இருந்தனர்.

**இராவணனின் ஆண்மை**

தேவரையும், யாவரையும் வென்று அரக்கர் குலத்தை வாழவைப்பதைத் தன் இலட்சியமாகக் கொண்டு, அவர்களிடமிருந்த அபூர்வ பொருட்களைக் கவர்ந்து அதை அனுபவித்து வருவதை விரும்புபவன். தன் அண்ணன் குபேரனமிடருந்த புஷ்பக விமானத்தைக் கவர்ந்து கொண்டவன். சூர்ப்பனகையின் கணவனையே போரில் கொன்றவன். தேவதச்சனைக் கொண்டு இலங்கையை தேவலோகம் போன்று மாற்றியமைத்தவன். இராவணின் வீரமும் எட்டு திக்குகளிலும் பரவியிருந்தது. அஷ்டதிக் கஜங்களுடன் மோதி தந்தங்கள் மார்பில் குத்திக் கொள்ள, மீளஎடுக்க முடியாமல் மார்பிலே ஒடிந்துவிட்டதால் அதை பூண்பிடித்து அலங்காரமாக ஏந்திக் கொண்டவன். சீல வழிப்பாட்டின் மூலம் பலவரங்களைப் பெற்றவன். ஒரு சமயம் கயிலை

மலையையே தூக்க நினைத்து அசைத்துப் பார்த்தவன். அது சமயம் சிவபெருமான் தன் ஒரு கால் பெருவிரலால் அழுத்த பத்துத் தோள்களும் மலைக்கடியில் சிக்கிக் கொண்டதால் வலிபொருக்க முடியாமல்! இரா' என்று கத்தினான். அவ்வொலி திக்கெட்டும் கேட்டது. "இரா" என்று கத்தியதால் இராவணன் என்ற பெயர் ஏற்பட்டது. அங்கே வந்த நாரதர் சொன்ன யோசனைப் படி சாமவேதம் கானம் செய்து சிவனருள் பெற்று மீண்டான். வீணை வாசிப்பதில் வல்லவன். வீணையைக் கொடியாக பெற்றவன். சிவபெருமானை நேரில் சந்திக்கச் சென்ற போது தடுத்த நந்தியை 'குரங்கு மூஞ்சியே" என்று பழித்ததால் நந்தி கோபமுற்று "உன் இலங்கை நகர் அந்தக் குரங்குகளாலேயே அழியும்" என சாபம் கொடுத்தார். சிவபெருமானிடம் பெற்ற தவவலிமையால் தருக்குற்று தேவர், முனிவர், தவசீலர்களைத் துன்புறுத்தி வந்தான். நவக்கிரகங்களை அடக்கி ஆண்டான்.

### இராவணன் குடும்பம்

இராவணன் மூத்தத் தம்பி கும்பகர்ணன் சிவபெருமானை நோக்கி கடுந்தவம் செய்து சிவக் காட்சியைக் கண்டு நித்தியதத்துவம் (அழியாவரம்) பெற எண்ணி அவசரத்தில் நித்திரை தத்துவம் தரவேண்டும் என்ற கேட்டு விட்டான். சிவனும் தந்து விட்டார். அது முதல் அவன் ஆறுமாத உறக்கமும், ஆறுமாதம் எதிரிகளை வதைப்பதிலும் காலம் கழித்து வந்தான். இளைய தம்பி விபீஷ்ணன் அரக்கர்

குலத்தில் பிறந்தாலும் நீதி நெறிப்படி வாழ்ந்தவன். தவறுகளைத் திருத்தத் தயங்காதவன். இராணவனின் மகன் இந்திரஜித்து மாயச்செயலில் வல்லவன். இந்திரனை வென்றவன். இளையமகன் அதிகாயன். மனைவி மண்டோதரி ஒரு கற்புக்கரசி. எல்லா வளங்களும் நலன்களும் பெற்று வாழ்ந்த இராவணனுக்கு சில குறைபாடுகளும் இருந்தன. தன்னை விட மிஞ்சியோர் யாரும் இருக்கக் கூடாது. சிறப்பான சில பொருள்களை வலிந்து கவரும் ஆணவமும், அகந்தையும் என்றும் இராவணனை ஆட்டிப்படைத்தன. இவன் கீதையில் குறிப்பிட்டபடி ரசோ குணத்தவன்.

**சூர்ப்பனகையின் சூழ்ச்சி**

இராவணன் மணிமண்டபத்தில் கம்பீரத் தோற்றத்துடன் கொலு விற்றிருந்த சமயம் இலக்குவனால் அங்கஈனம் செய்யப்பட்ட சூர்ப்பனகை கண்ணீரும் கம்பலுமாய் அவல ஒலி எழுப்பிய வண்ணம் இராவணன் காலடியில் வீழ்ந்தாள். அவளின் தோற்றத்தைக் கண்டு ஆத்திரம் கொண்டவனாய் "இச்செயல் செய்தவர் யார்?" என்று கர்ஜித்தான், "காட்டில் திரியும் இரு மானிடர்கள் இப்படி என்னை மானபங்கம் செய்துவிட்டனர்" என்று தெரிவித்து விம்மி விழுந்து எழுந்து புரண்டாள். அத்துடன் கரன்மாண்ட செய்தியும் தெரிவித்தாள் சூர்ப்பனகை. மேலும் ஆத்திரமடைந்த இராவணன்' அவர்கள் இவ்வாறு செய்ய நீ செய்த குற்றமென்ன?" என்று கேட்டான். அழகை விரும்பு இயல்பு கொண்ட அண்ணன்

இராவணின் மனோ பாவத்தை உணர்ந்த சூர்ப்பனகை "அண்ணா! அந்த மானிடருடன் ஒரு பெண் இருக்கின்றாள். பேரழகி அவளுக்கு ஈடும் இணையும் சொல்ல இந்தப் பதினான்கு உலகிலும் யாரும் இல்லை. அவள் உனக்குத் தான் உரியவள் என்று நான் அவளை உன்னிடம் தூக்கிவர முயன்றேன்" அப்போது அங்கு வந்த இராமனின் தம்பி இலக்குவன் என்னை இவ்வாறு அங்க ஈனம் செய்தான் என்றாள்.

**இராவணனின் காமநோய்**

இப்பொழுது இராவணன் சூர்ப்பனகையையும், அவள் அ[illegible]லக் குரலையும் நினைக்கவில்லை. சீதையே அவன் கண்ணெதிரே தெரிந்தாள். அவளின் அழகைக் கற்பனையாகக் கண்டான். பிற எல்லாவற்றையும் மறந்தான். அவளை எப்படியும் அடைந்தே தீரவேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். அன்று இரவெல்லாம் அவனுக்கு உறக்கமே வரவில்லை. காமத்தீயில் வீழ்ந்து துடித்தான். அவளுடன் உள்ள இராம இலக்குவனரை போரிட்டுக் கொன்று சீதையை அடைவது கால தாமதம் ஆகும் என்பதால் ஏதாவது சூழ்ச்சி செய்து சுந்தரியை தூக்கி வந்து விடலாம்' என்று நினைத்து சூழ்ச்சியில் வல்ல தன் மாமன் மாரீசன் தங்கி இருந்த இடத்திற்குச் சென்றான்.

**மாரீசன் அறிவுரை**

தன்னிடம் வந்த இராவணனைக் கண்ட மாரீசன் வந்த செய்தியைக் கேட்க பஞ்சவடியில் இராம

இலக்குவர்களுடன் வந்துள்ள சீதையை யான் அடைய நீர் உதவி செய்யவேண்டும்” என்று தெரிவித்தான். மாரீசன் அயர்ந்து போனான்” கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே’ என்னும் பழமொழிக் கேற்ப நீ மதிகெட்டுப் பேசுகின்றாய். வந்துள்ளவர்கள் சாதாரண மனிதர்கள் என்று எண்ண வேண்டா. தர்மத்தை நிலை நாட்டி அதர்மத்தையே ஒழிக்க வந்தவர்கள். நீ கொண்டுள்ள பிறர்மனைவியை அடைய விரும்பும் உன்னால் இந்த அரக்கர் குலமே அழியும். உனக்குத் தீராப் பழியே கிடைக்கும். ஆகவே உன் சலனத்தைப் போக்கிக் கொள் என்று கூறி உரைகள் பல சொன்னான். ஆத்திரமடைந்த இராவணன் “நான் சொன்னபடி செய்யாவிட்டால் உன்னைக் கொல்வேன்” என்று மிரட்டினான். இராவணன் கையால் மாள்வதை விட் இராமன் அம்பால் சாவதே மேல் என்று எண்ணிய மாரீசன் ஒருவாறு சம்மதத்தித்து “தன் பணியாது?” ஒரு பொன்மானாக வடிவெடுத்து சீதை உள்ள இடத்தில் செல்ல வேண்டும். உன்னைப் பிடிக்க வருவார்கள் இருவரும். நீர் அவர்கள் கைக்குள் சிக்காமல் ஓடினால் இராம இலக்குவனர் உன் பின் தொடர்வார்கள். தனிமையில் உள்ள சீதையை யான் பார்த்துக் கொள்கின்றேன்” என்றான் இராவணன். உடனே செயல்படுத்தினாள் மாரீசன்.

**சீதை முன் மாயமான்**

மாரீசன் மாய மானாக வடிவெடுத்து, சீதையின் கண்ணுக்குத் தெரியும் படி திரிந்தான். அந்த அற்புத

மானைப் பிடித்துத்தரும்படி இராமனை வேண்டினாள் சீதை. தம்பி இலக்குவன், அது சாதாரண மானாகத் தெரியவில்லை, அரக்கர்களின் சூழ்ச்சியாக இருக்குமோ என்று ஐயப்படுவதாகத் தெரிவித்தான். இராமன் தம்பியை சீதைக்குக் காவலாக விட்டு விட்டு மானைத் தொடர்ந்தான். மான் மாயா ஜாலங்காட்டி வெகுதூரம்



ஓடிற்று. பின் வானில் தாவிக்குதித்ததால் சந்தேகப்பட்ட இராமன் கணையைத் தொடுத்து மானை வீழ்த்தினான். அடிபட்டமான், இராமன் குரல் போன்றே "இலக்குமானா! சீதா!" என்று பெருங்குரல் கொடுத்து அலறியபடி கீழ்மே அரக்கன் வடிவில் வீழ்ந்து மடிந்தது.

இதைக் கண்ட இராமன் "இதில் ஏதோ சூழ்ச்சி உள்ளது. இவன் என் குரல் போல் ஏன் சத்தமிட வேண்டும். சீதைக்கு இதனால் கேடுவரலாம் என ஐயுற்று வேகமாக பஞ்சவடிக்குத் திரும்பினான்.

இதற்கிடையில், கணவர் அபயக்குரல் கேட்டு கண்கலங்கினாள் சீதை. இலக்குவனை உடனே உதவிக்குச் செல்லும்படி கூறினாள். "அண்ணனுக்கு எந்த இன்னலும் ஏற்படாது என்று எடுத்திச் சொல்லியும் கேட்காத சீதை, இலக்குவனின் மனம் புண்படும்படி பேசவே உடனே அங்கிருந்து புரப்பட்டான்.

**போலிச் சாமியார் வடிவில் இராவணன்**

பர்ணக சாலையில் சீதை தனித்திருந்த சமயத்தை எதிர் நோக்கியிருந்த இராவணன் கழுத்திலே உருத்திராட்சமாலை, காவி உடை, ஒரு கையிலே கமண்டலம், இன்னொரு கையில் திருஓடு, ஜடாமுடி, நெற்றியிலே திருநீர். காலிலே பாகாட்சைகள் வீணை இசைத்து வேதம் பாடியபடி ஒரு சிவனடியார் கோலம் பூண்டு சீதையான பாணக சாலைக்கு வநதான், என்று கம்பர் குறிப்பிடுகின்றார். ஆன்மீகம் என்ற போர்வையில் இராவணனைப் போன்ற கபடதாரி சாமியார்கள் இன்றும்

உலவிக் கொண்டுதான் இருக்கின்றார்கள், இந்த உலகத்தில். டெல்லியில் தங்கி பல அரசியல் தலைவர்களை தன் சீடர்களாகக் கொண்டு தனியாட்சி நடத்தி வந்த வடநாட்டு சாமியார் ஒருவரின் கபடநாடகம் அண்மையில் வெளிவந்ததும் மேலும் பல கபடதாரிபோலிச் சாமியார்கள் தமிழகப் போலீசாரால் சிறை வைக்கப்பட்டதும் நாம் அறிந்த ஒன்றாகும். கடவுளை ஏமாற்றித் திரியும் போலிச்சாமியார்கள் நிச்சயம் ஒரு நாள் அடையாளம் காணப்பட்டு தண்டிக்கப்டுவார்கள் என்பது நிச்சயம் என்பது இராவண போலிச்சாமியாரால் உணரலாம்.

## சீதை வரவேற்பு

இந்தக் கோலத்துடன் சிவ நாமத்தை உச்சரித்தபடி வந்த இராவண சன்னியாசியைக் கண்ட சீதை அவன் போலி வேடத்தை உண்மை என நம்பி வணங்கி வரவேற்றாள். இராவணன் சீதையைக் கண்டு அவள் அழகை ஆசைக் கண்களால் பருகினான். இருபது கண்கள் போதாது ஆயிரம் கண்களாக இருக்கக் கூடாதா" என்று ஏங்கினான். சீதையுடன் உரையாட விரும்பி, "அம்மா! இந்த ஆசிரமம் யாருடையது? இங்குள்ள முனிவர் யார்?" என்று கேட்டான். அதற்கு சீதை, "சுவாமி இங்கு தசரத குமாரர்களான ரகுகுல வீரர் தம் தம்பியோடு தங்கியுள்ளார். சிற்றன்னையின் கட்டளைப்படி வனவாசம் செய்து வருகின்றார். நான் ஜனகர் மகள் ஜானகி", என்று தெரிவித்து மேலும்

"தாங்கள் யார்? தாங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள்?" என்று கேட்டாள். தான் அங்கு தங்கி தவம் செய்வதாகவும், இலங்காபுரி சென்று இராவணனைச் சந்தித்து வந்ததாகவும், இராவணனின் பெருமைகள் பலவற்றை அறிந்து வந்ததாகவும் தெரிவித்து அவைகளைப் பெருமையாகச் சொன்னான்.

சீதை "அரக்கனாம் பாதக எண்ணங் கொண்ட இராவணனின் இலங்காபுரிக்கு ஏன் சென்றீர்கள்?"



என்று கேட்டாள். இராவணனின் பிரதாபங்களை எடுத்துச் சொன்னான் போலிச் சாமியார். தன் கணவனின் ஆற்றல் திறனை எடுத்துச் சொன்னாள் சீதை. இதைப் பொறுக்க முடியாத இராவணச் சாமியார் தம் சுய வடிவில் சீதையின் முன் நின்றான். அஞ்சி ஓடினாள் வஞ்சிக் கொடியாள் சீதை. அவளைத் தீண்ட பயந்த இராவணன் பிரம்மன் தனக்குத் தந்த சாபமான "விருப்பமில்லாத பெண்ணைத் தீண்டடினால் தீங்கு வரும்" என்பதை நினைந்து சீதை இருந்த இடத்தை மண்ணோடு பெயர்த்து ரதத்தில் வைத்துக் கொண்டு காற்றில் பறந்தான். சீதை வனத்தில் இருந்த அனைத்துப் பொருட்களையும் கூவி தனக்கு உதவ வேண்டினாள். சீதையின் அபயக் குரல் கேட்டு ஓடி வந்த ஜடாயு என்னும் கழுகு இராவணன் வாளால் அடிபட்டு கீழே விழுந்தது. புஷ்பக விமானத்திலிருந்து இலங்கை நகரை அடைந்த இராவணன் சீதையை அசோக வனத்தில் சிறை வைத்தான்.

**இராமன் இலக்குவன் சந்திப்பு**

மாரீசனைக் கொன்று திரும்பிக் கொண்டிருந்த இராமனும், சீதையால் அனுப்பப்ட்ட இலக்குவனும் வழியில் சந்தித்துக் கொண்டார்கள். "தம்பீ! நீ எதற்காக வந்தாய்?" என்று கேட்டான் இராமன். "அண்ணி தீக்குளிப்பதாகச் சொல்லவே நான் வந்தேன்" என்றான். நடந்ததை இராமன் சொல்ல இருவரும் பர்ண சாலையை நோக்கி விரைந்தனர்.

**சீதை எங்கே**

பர்ணசாலை இருந்த இடமே தெரியவில்லை. மண்ணோடு பெயர்த்திருந்த தடயம் தெரிந்தது. இருவரும் சீதையைத் தேடி அலைந்ததார்கள். அங்கு பூமியில் தேரின் தடயங்கள் தென்பட்டன. அது தென் திசை நோக்கி அமைந்திருந்தது. வழியில் வீணைக் கொடி ஒன்று விழுந்து கிடந்தது.

**ஜடாய முக்தி**

இன்னும் சிறிது தூரம் சென்றதும் வில் முறிந்து கிடந்ததைக் கண்டனர். மேலும் சிறிது தூரத்தில் வீழ்ந்து கிடக்கும் ஜடாயுவைக் கண்டு ஒடிச் சென்று அணைத்துக் கொண்டனர். இராம இலக்குவர்கள் ஜடாயுவின் நிலை கண்டு அழுது புலம்பினர். ஜடாயு "புண்ணிய சீலர்களே! இறக்கும் சமயம் உங்கள் தரிசனம் கிடைத்ததைப் பெரும் பாக்கியம் என்று கருதுகின்றேன். இராவணன் சீதையை மண்ணோடு தூக்கிக் கொண்டு சென்றுள்ளான். அந்த அரக்கர் குலத்துக்கே அழிவு காலம் நெருங்கி விட்டது" என்று தெரிவித்தார். "எந்த இடத்திற்குச் சீதையை இராவணன் கொண்டு சென்றான்" என்று இராமன் கேட்டான். அதற்கு பதில் கூற முடியாமல் தவித்த ஜடாயுவின் ஆவி பிரிந்தது. துக்கத்தில் ஆழ்ந்த இருவரும் தந்தை எனக் கருதி இறுதிக்கடன்களை முறைப்படி செய்து முடித்தனர். பின்னர் தங்கள் தேடும் பணியைத் தொடங்கினர்.

## இலக்குவனும் அயோமுகியும்

இராமனும் இலக்குவனும் அந்த காட்டின் வழியில் சென்று கொண்டு இருக்கையில் அந்தி மாலை வந்தது. இலக்குவன் அண்ணனுக்கு படுக்கை அமைத்து கொடுத்தான். ஆனால் இராமனுக்கு உறக்கம் வரவில்லை. சீதையின் பிரிவாற்றாமையால் அழுது கொண்டே இருந்தான். அந்த இரவில் இலக்குவனுக்குத் தண்ணீர் தாகம் ஏற்பட்டது. தண்ணீரைத் தேடி சென்ற போது அயோமுகி என்ற அரக்கி இலக்குவனை எடுத்துக் கொண்டு ஆகயாத்தில் பறந்து சென்றாள். இலக்குவனுக்கு மயக்கம் ஏற்பபட்டது. நீண்ட நேரம் தம்பி இலக்குவன் வராமையால் இராமன் அக்னியால் திரம் வீசி வெளிச்சம் உண்டாக்கி கொண்டு அவனை தேடிச் சென்றான். மயக்கம் தெளிந்த இலக்குவன் அரக்கியின் மூக்கு காதுகைள அறுத்து விட்டு அவளிடம் இருந்து தப்பி அண்ணனை நோக்கி வந்தான் இருவரும் ஒரே இடத்தில் சேர்ந்து வர இருவரும் கட்டி தழுவிக் கொண்டனர்.

## கவந்தன்

இருவரும் கவந்தன் என்பவனுடைய வனத்தை அடைந்தனர். கவந்தன் என்னும் அரக்கன் தன்னுடைய இருபெரும் கரங்கைள வளைத்து பிடித்து அதற்குள் அகப்படும் அனைத்தையும் உணவாக உட்கொள்வது வழக்கம். ஒரு நாள் இராமனும், இலக்குவனனும் அவன்

கரத்தில் அகப்பட்டு கொண்டனர். அவர்களை தின்ன நினைக்க அவர்கள் இருவரும் அவன் இருகைகளை ஆளுக்கு ஒன்றாக வெட்டினர். இராமனின் கரங்கள் அவன் மீது படவும் கவந்தன் தன் உருவம் நீங்கி புது வடிவம் பெற்றுவந்தான். தான் ஒரு கந்தர்வன் சாபத்தால் இராமன் கரம் பட்டவுடன் விமோச்சனம் கிடைத்தது. சபரி என்ற பக்தையை சந்தித்து சுக்ரீரவன் என்ற வானர மன்னனின் நட்பு பெறுங்கள், உங்களுக்கு உதவியாக இருக்கும் என்று சொல்லி விடைபெற்று சென்றான் அந்த கவந்தன்.

**சபரியின் பக்தி**

இராமனும் இலக்குவனும் மாதங்க முனிவரின் ஆசிரமத்தை அடைந்தனர். அந்த இடத்தில் சபரி என்னும் பெண் துறவி இராமன் மீது பக்தி கொண்டவளாக இருந்தாள். இராமன் என்றாவது ஒரு நாள் வருவான் என எண்ணியிருந்தாள். "இன்றோ நாளையோ வருவான்" என அவன் வரவுக்காக காய், கனிகளைப் பறித்து அதைச் சுவைத்துப் பார்த்து நல்லனவற்றை எடுத்து வைத்து இருந்தாள். வயதாயினும் இராமனின் தரிசனம் கிடைக்கும் என்று தீராத் வேட்கை கொண்டிருந்தாள்.

**எச்சில் பழத்தை இச்சி உண்ட இராமன்**

இத்தகைய பக்தை இராமன், இலக்குவன் இருவரும் வருவதை கண்டவுடன், அவர் பாதங்களில் விழுந்து வணங்கி பணிவுடன் தான் சேர்த்து வைத்து

இருந்த கனிகளை இராமனுக்கும் இலக்குவனுக்கும் கொடுத்தாள், அந்த எச்சில் கனிகளை இச்சி உண்ட இராமனுக்கு இதமாக இருந்தது. பூரித்து போன சபரியின் முன் சிவன், பிரம்மா, இந்திரன் மூவரும் காட்சியளித்து "உன் தவம் பலித்தது. இராம தரிசனம் கிடைத்தது. உனக்கு முக்தி நிச்சயம்" என்று வாழ்த்தி சென்றனர்.

### சபரியின் முக்தி

சபரியின் உபசரிப்பால் பூரித்துப் போன இராமன் சிறிது நேரம் தனது துன்பங்களை போக்கிக் கொண்டான். பின்னர் இராமன் சபரியிடம் சுக்கீரிவன் இருக்கும் மலைக்கு வழி கேட்டு அவளிடம் இருந்து விடை பெற்றுக் கொண்டு பம்பை என்ற பொய்கை உள்ள இடத்துக்கு வந்து சேர்ந்தான். பம்பை நதியில் நீராடி விட்டு கிஷ்கிந்தையை நோக்கி நடந்தனர்.

### கிஷ்கிந்தையில் இராம இலகுவனர்

இராம இலக்குவர் நெடும் பயணம் செய்து ரிஷ்ய முக மலைப் சாரலை அடைந்தனர். அங்கு தங்கியிருந்த வாலியின் தம்பி சுக்ரீவன் தம்மை நோக்கி வரும் இருவரும் தம் அண்ணனின் ஆட்களாக இருக்குமோ என்று ஐயுற்றான். குகைக்குள் சென்று ஒளிந்து கொள்ள முயன்றான். அதைக் கண்ட அனுமன் "நீங்கள் அஞ்ச வேண்டாம். அவர்கள் யாரென்று அறிந்து வருகின்றேன்" என்று தெரிவித்து இராம இலக்குவர்களை எதிர் நோக்கி அனுமன் வந்தான்.

## அனுமன் வந்தான்

வெகு தூரத்தில் இருந்து பார்த்து அனுமனுக்கு அவர்கள் மீது பக்தி தோன்றியது. அருகில் வந்ததும் பணிவுடன் வணங்கினான். நீ யார்? என்று கேட்ட இராமனுக்கு அவன் சொன்ன பதில் அனுமனைச் சொல்லின் செல்வனாகக் காட்டியது. சுக்ரீவன் பற்றியும் தன்னைப் பற்றியும் மிகவும் பணிவுடன் தெரிவித்து "தங்கள் வரவால் தம் மன்னன் சுக்ரீவனின் துன்பம் தொலையும்" என்று தெரிவித்தான். தான் ஒரு குரங்கு குலத்தவர் என்று சொல்லி முடித்தான். இராமனுக்கு தன் விஸ்வருபத்தைக் காட்டினான். அனுமனின் விஸ்வ ரூப வடிவம் கண்ட இராம இலக்குவனர்கள் பெரிதும் மகிழ்ந்து வியப்புற்றனர். இராமன் இலக்குவனிடம், "தம்பீ! இவ்வனுமன் ஆற்றல் நமக்கு பலவிதங்களில் பயன்படும. இவன் நட்பு நமது தேடும் பணிக்கு பெரிதும் உதவும்" என்று மகிழ்வுடன் தெரிவித்தான்.

## சுக்ரீவன் சரண்

ஆஞ்சநேயன் மூலம் வந்தவர்கள் யார் என்பதை அறிந்த சுக்ரீவன் இராம இலக்குவர்களைத் கண்டதும் இவர்கள் தேவரோ மூவரோ? மற்றெவரோ? தெரியவில்லை. இவர்கள் தோற்றத்தில் அறம், வீரம், பண்பாடு ஆகிய மூன்றும் இணைந்து உருவெடுத்தது போல் தோற்றமளிக்கின்றார்கள். இவர்கள் வருகையால் மானுடம் வெறது" என்று எண்ணிய படி அருகில் வந்து அவர்களை வணங்கினான்.

சுக்ரீவா! சபரியை சந்தித்த போது நீ இங்கு இருப்பதாகவும், தங்களை சந்தித்தால் என் துன்பம தீரும் என இங்கு வந்தோம். நாங்கள் சீதையைப பிரிந்து துன்பத்தில் இருக்கின்றோம். அத்துயரம் உம்மால் தீரும் என்று நம்பி உன் உதவி நாடி வந்தோம் என்றான் இராமன். அதற்கு சுக்ரீவன் "ஐயனே நான் தங்களிடம் சரணடைகின்றேன். எம் அண்ணன் வாலிக்கு பயந்து மாதங்க முனிவர் சாபத்தால் இந்த மலைக்கு வராத இடத்தில் தங்கியுள்ளேன். தாங்கள் தான் என்னை வாழவைக்க வேண்டும்" என்றான் சுக்ரீவன்.

## இராமனின் சூளுரை

சுக்ரீவா! உன் பகைவர் எங்கிருந்தாலும், யாராய் இருந்தாலும் அவர்கள் எமக்கும் பகைவர். நின் நண்பர்கள் எனக்கும் நண்பர்கள். உன் சுற்றம் என் சுற்றம். இனிவரும் துன்பங்களையும், இதுவரை வந்த துன்பங்களையும் விலக்கி நும்மை காப்பாற்றுவோம் என்று சூளுரைத்தான் இராமன். சுக்கிரீவனின் வானரப்படை இம்மொழிகேட்டு ஆர்ப்பரித்து மகிழ்ந்தனர்.

## இராம இலக்குவர்களுக்கு விருந்தளித்தல்

அன்பின் அடையாளமாக சுக்ரீவன் இராம இலக்குமணர்களுக்கு காய், கனி, கிழங்கு வகைகளைத் தந்து விருந்து உபசரித்தான். அதில் அன்பு மிளிர்ந்தது. தனியாக விருந்துபசாரம் செய்தான். அப்போது இராமன்

சுக்ரீவரை நோக்கி, "நீயும் என்னைப்போல் மனைவியைப் பிரிந்து துயர் அடைந்தனையோ! என்று வினவினான்.

**வாலியின் வரலாறு**

சோக வடிவில் சுக்ரீவனுக்கு அருகில் நின்ற ஆஞ்சனேயர் அருகில் வந்து "பெருமானே! இவருடைய அண்ணன் வாலி ஒரு பெரும் வீரன். ஏழுகடலை அன்றாடம் தாண்டி சிவ பூசை செய்து திரும்பும் ஆற்றலுடையவன். சிவ பெருமானிடம் தன்னை எதிர்ப்பவர் வலிமையில் பாதியைப் பெறும் வரம் பெற்று உரத்துடன் உறுதியுடன் கிட்கிந்தையை ஆட்சி செய்து வந்தான்.

**மாயாவி மாய்ந்தான்**

தன் குலவைரியான மாயாவி என்னும் அரக்கனுடன் நீண்ட நாள் போரிட்டும் வெற்றி தோல்யின்றி இருக்கையில் மாயாவி ஒரு குகை வழியே செல்ல, வாலியும் அவ்னைத் துரத்திய வண்ணம் சென்றான். இளவரசனான சுக்ரீவனை குகையின் வாயிலில் காவல் வைத்து விட்டுச் சென்றான். பல மாதங்கள் கடந்தும் வாலி வராமையால் அதை பெரும் பாறைகளால் மூடிவிட்டு கிட்கிந்தைக்கு வந்தான். வானரங்கள் ஒன்று சேர்ந்து, வற்புறுத்தி சுக்ரீவனை கிட்கிந்தைக்கு மன்னனாக மகுடம் சூட்டினர். சில தினங்களுக்குள் வாலி மாயாவியை மாய்த்து விட்டு,

கிஷ்கிந்தைக்குத் திரும்பினான். தன் ஆட்சி பீடத்தில் தம்பி சுக்ரீவன் சதி செய்து அமர்ந்து விட்டான் என நினைத்து மிகுந்த கோபத்துடன் அவனுடன் போரிட வந்தான். நிகழ்ந்ததை எவ்வளவு எடுத்துச் சொல்லியும் அவனைக் கொல்வதையே குறியாகக் கொண்டான். உயிருக்கு பயந்த சுக்ரீவன் தன் அண்ணனிடமிருந்து தப்பி இந்த மலையில் தங்கி வாழ்ந்து வருகிறார். அத்துடன் அவர் மனைவி உரிமையையும் வாலி அபகரித்துக் கொண்டான்" என்று முடித்தான் ஆஞ்சனேயன். இதைக் கேட்ட இராமன் மிகுந்த சீற்றமடைந்து "சுக்ரீவா! வாலிக்கு எவ்வளவு பலமிருந்தாலும் அவனைக் கொன்று அரசையும் மனைவியையும் மீட்டுத் தருவேன்" என்று கூறினான் இராமன். சுக்ரீவன் இதைக் கேட்டு மகிழ்ந்தாலும் ஒரு அய்யத்தை வெளிப்படுத்தி இராம இலக்குவர்களை அழைத்துக் கொண்டு ஏழு மாமரங்களைக் காட்டி இவைகளை ஒரு அம்பினைச் செலுத்தி ஏழு மரங்களையும் ஊடுருவிக் கடந்து செல்லும் படி செய்ய முடியுமா எனத் தெரிவிக்க அடுத்த நிமிடமே செய்து முடித்தான் இராமன். சுக்கிரீவனும் வானரங்களும் பெரிதும் மகிழ்ந்தனர். சுக்கிரீவன் முழு முதற்கடவுளே அறம் காக்க இராமன் வடிவில் இங்கு வந்துள்ளது என்று மகிழ்ந்துப் பாராட்டினான்.

வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மாலின் மேல்
ஐயன் நீ! ஆழிமேல் ஆழிவாழ் கையன் நீ

செய்ய தீ அனைய அத்தேவும் நீ! நாயினேன்
உய்ய வந்து உதவினாம் உலகம் முந்து உதவினாய்

என்று பாடி, ஆடி இராமரை வணங்கினான்.

**துந்துபி மலை**

அடுத்து துந்துபி மலையைக் காட்டி "அஃது யாது?" என்று கேட்ட இராமனிடம் சுக்ரீவன் "துந்துபி என்ற அரக்கன், வாலியோடு போர் செய்து தோல்வி அடைந்தான். அவன் மாமிச மலைபோன்ற உடலை வாலி சுழற்றி வீச அவன் உடல் எலும்பும் கூடாய் உயர்ந்துள்ளது. அங்கு தவம் செய்து கொண்டிருந்த மாதங்க முனிவர், "இதை வீசியவன் இங்கு வந்தால் அழிந்து மடிவான்" என்று சாபமிட அதற்கு பயந்து வாலி அங்கு வருவதில்லை என்று தெரிவித்தான் சுக்ரீவன். அந்த எலும்புக் கூட்டை இராமன் தன் ஒரு விரலால் தூக்கி வீச அது விண் வரை ஓங்கிச் சென்று கீழே விழுந்தது. வானரப்படை இராமனின் ஆற்றல் திறனைக் கண்டு ஆர்ப்பரித்தனர்.

**சுக்ரீவன் காட்டிய அடையாளம்**

அனைவரும் குகைக்கு சென்றனர். அங்கு சுக்ரீவன் இராமனிடம் சில தினங்களுக்கு முன் வானவீதியில் ஒரு பெண்ணை ஒருவன் தேரில் ஏற்றிச் செல்ல அந்தப் பெண் கீழே போட்ட சில அணிகலன்கள் இவை என்று அவைகளை காட்டினான். அதைக் கண்டு புலம்பிய இராமனை சுக்ரீவன் தேற்றினான். அந்த சமயம் அனுமன், "ஐயனே முதலில் வாலியை வதம்

செய்தால் நமக்கு துணைபுரிய அவனிட முள்ள எழுபது வெள்ள வானரப்படை நமக்குக் கிடைக்கும்" என்றான். அவன் கருத்தை ஏற்று அனைவரும் வாலி தங்கி இருந்த அரண்மனைக்கு முன் சென்றனர்.

**வாலி கண்ட பெருவாழ்வு**

"சுக்ரீவா! நீ வாலியை போருக்கு அழைப்பாய்" என்றான். அதன் படி சுக்ரீவன் ஆர்ப்பரித்து எழ அது சமயம் தன் மனைவி தாரையுடன் இருந்த வாலி சுக்ரீவன் குரல் கேட்டு, வீரிட்டுப் புறப்பட தயாரானான். தாரை! வாலியைத் தடுத்து "உன் தம்பிக்கு இராமன் துணை புரிய வந்துள்ளதாக நம் ஒற்றர் மூலம் அறிந்தேன். ஆகவே இப்போது போருக்குப் போக வேண்டாம் எனத் தடுத்தாள். அதற்கு வாலி, "தாரை! என்ன பேச்சுப் பேசினாய், பெருமைக்கும் அருமைக்கும் உரிய இராமன் ஏன் என்னுடன் போருக்கு வரவேண்டும். இராமனைப் பற்றி இப்படி இழிவாகப் பேசிவிட்டாயே" என்று தெரிவித்து போருக்குக் கிளம்பினான். தம்பியுடன் மோதினான். அண்ணனிடம் அடிபட்ட சுக்ரீவன் தாங்க முடியாமல் வாலியிடமிருந்து தப்பி இராமனிடம் வந்தான். மறைவிலிருந்த இராமர் இருவருக்குள் அடையாளம் தெரியாமையால் தான் அம்பைத் தொடுக்க அஞ்சினேன் என்று சொல்லி ஒரு கொடி மாலையை அவன் கழுத்தில் சூட்டி அனுப்ப அவன் மீண்டும் வாலியுடன் மோதினான். சமயம் பார்த்து இராமன், வாலியின் மார்புக்கு நேராக

அம்பைத் தொடுக்க அது வாலியின் மார்பில் பதிந்தது. உடனே வாலி, "ஓ! என்று அலறிய படி மண்ணில் சாய்ந்தான். தன்னைத் தாக்கிய அந்த அம்பை தன் இருகரங்களால் இறுகப் பற்றிக் கொண்டு உறுவிச்செல்லும் அம்பை பற்றி உற்றுப் பார்க்க அந்த அம்பின் மீது "இராமன்" என்று எழுதப்பட்டிருந்தைக் தன் கண்ணில் கண்டான்.

"மும்மை சால் உலகுக் கெல்லாம் மூல மந்திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும் பதத்தைத் தானே
தம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமம் தன்னைக் களால் தெரியக் கண்டான்"

"என்ன! அயோத்தி இராமனா இச்செயல் செய்தான்! அறத்தின் நாயகன் அரசைத் துறந்தவன் வில்லறத்தையும் துறந்தானா?" என வருந்தினான் வாலி.

**வாலியின் வாதம்**

இதற்குள் இராம இலகுவர்கள் வாலியின் முன் வந்தனர். இராமனைக் கண்ட வாலி ஆத்திரத்துடன் "வாய்மையும் மரபும் காத்து, தன்னுயிர் துறந்த வள்ளல் தசரதனின் மகனா நீ? பரதனுக்கு முன்பு தோன்றினாயே! தேவியை பிரிந்ததால் பித்த முற்றாயா? அரக்கன் செய்த தீமைக்கு குரங்கு இன அரசனைக் கொல்ல மனுநீதி இடம் தருகிறதா? என்னிடம் என்ன பிழை கண்டாய் என் மீது அம்பு தொடுக்க. அயோத்தி அரசைத் தம்பிக்குத் தந்தாய்.

இங்கு அண்ணனைக் கொன்று தம்பிக்கு அரசைத் தருகிறாய்? இது போல் இன்னமும் உள்ளதா? முடிந்ததா? இருவர் போரிடும் போது கோழை போல் ஒளிந்து அம்பை விடலாமா என வாதிட்டான் வாலி.

**இராமன் தந்த பதில்**

அதற்கு இராமன், "ஒரு தவறும் செய்யாத உன் தம்பி எவ்வளவு எடுத்துச் சொல்லியும், நாட்டை உனக்கே தர முன் வந்தும் அதை ஏற்காது தம்பியைக் கொல்லவும் நினைத்தாய். தம்பி மனைவியையும் உன் மனைவியாக்கிக் கொண்டாய்! இது எந்த அறத்தில் சேரும்? உன் தம்பி என்னை சரணடைந்துத் தன்னைக் காக்கும்படி வேண்டினான். நானும் காப்பதாக உறுதி அளித்தேன். உன்னை நேரில் பார்ததால் நீயும் என்னை சரணடையக் கூடும் என்பதினால் தான் நான் உன்னை மறைந்திருந்துத் தாக்க வேண்டியதாயிற்று. மேலும் நீ அறத்தை மறந்தாய். ஆணவம் கொண்டாய் ஆகவே உன்னை தண்டித்தேன் என்றான் இராமன். "ஐயா நீர் சொல்லும் தர்ம ஒழக்கமெல்லாம் விலங்கினத்தைச் சேர்ந்த எங்களுக்குப் பொருந்தாது என்பதை தங்கள் உணர வில்லையா?" என்றான் வாலி.

"வாலி! நீ இவ்வாறு உரைப்பது சிறுதும் பொருந்தாது நீ அறநெறி உணர்ந்தவன். விலங்குத் தன்மை உடலைப் பொறுத்தது இல்லை. அறிவைப் பொருத்தது தான். நீ தர்மத்தைப் பேசுகிறாய். ஆனால் விலங்கு என்று சொல்லிக் கொள்கிறாய். முதலையிடம்

அகப்பட்ட கஜேந்திரன்" ஆதி மூலமே என்று கூவியதே அது விலங்கா, இராவணனை எதிர்த்த ஜடாயு விலங்கா! நீ தேவேந்திரன் புதல்வன். அறநெறி வழுவலாமா? என்றான் இராமன்.

இவ்வுரையைக் கேட்ட வாலி ஞானத் தெளிவு பெற்று தன் மனத்தெளிவால் இராமன் யார்? என்பதைக் தெளிந்து தன் குற்றங்களை உணர்ந்தான். கீதையில் கண்ணன் "எல்லா நிகழ்வுக்கும் யானே மூலப் பொருள்" என்று விசயனுக்கு உணர்த்தியதைப் போல் தன்னறிவால் உணர்ந்து

மூவர் நீ முதல்வன் நீ முற்றும் நீ மற்றும் நீ
பாவம் நீ தருமம் நீ பகையும் நீ உறவும் நீ

என்று முழுமுதற்பொருளே அறங்காக்க இவ்வுலகில் இராமனாக அவதாரம் செய்துள்ளது என்று தெளிந்து துதி செய்தான். தன் அருகில் சகோதரப் பாசத்தால் உந்தப் பெற்ற சுக்ரீவன் அண்ணன் வாலியின் மீது விழுந்து அழுதான். "வெற்று அரசு (கிட்கிந்தை) சுக்ரீவனுக்குக் கொடுத்து வீட்டு அரசு (முக்திப் பேறு) எனக்கு அளித்தான்" என்று இராமனை வாழ்த்தி வணங்கினான் வாலி. மகன் அங்கத்னை இராமன் கையில் ஒப்படைத்து, அனுமனின் ஆற்றலை இராமனுக்குத் தெரிவித்தான் வாலி. வாலியின் கைப்பிடியிலிருந்த அம்பு நழவி உடலை ஊடுருவிச் சென்று மீண்டது. வாலியின் உயிர் பிரிந்தது. மனைவி

தாரை செய்தி கேட்டு ஓடோடி வந்து வாலியின் உடல் மீது விழுந்து ஒப்பாரி வைத்துப் புலம்பினாள்.

**சுக்ரீவனுக்கு முடிசூட்டு விழா**

இராமன் இலக்குவனிடம் கிஷ்கிந்தைக்கு அரசனாக சுக்கிரீவனுக்கு முடிசூட்டிட இலக்குவனை அனுப்பிவைத்தான். அனுமன் புண்ணிய தீர்த்தங்கள் பலகொண்டு வந்து தர சாத்திர முறைப்படி இலக்குவன் சுக்கிரீவன் முடிசூட்டு விழாவை முடித்து வைத்தான். பின்பு சுக்கிரீவன் இராமனிடம் வந்து ஆசி பெற்றான். மாரிக் காலம் துவங்கிவிட்டதால் சீதையைத் தேட மாரிக்காலம் கழித்து படையுடன் வரும்படி தெரிவித்து பல அரச நீதிகளைச் சொல்லி அனுப்பினான்.

**இலக்குவனின் சீற்றம்**

கார்காலம் கடந்து நீண்ட நாட்களாக சுக்கிரீவன் இராமனுக்கு உதவ வரவில்லை. தம்பி இலக்குவனை அழைத்து "வாலியைக் கொன்ற அதே அம்பு தன்னிடம் உண்டு என்பதை நினைவுபடுத்த சுக்கிரீவனிடம் அனுப்பினான். இலக்குவனின் ஆவேச நடையைக் கண்ட வானரப்படைகள் அஞ்சி கிஷ்கிந்தையின் கோட்டை வாயிலை கற்களைக் கொண்டு அடைத்துவிட்டன. இலக்குவனின் உதைப்பில் அவைப் பொடிப் பொடியாக சிதறி விழுந்தன. சுக்கிரீவன் மது அருந்தி மயங்கிக் கிடந்தான். இந்நிலையில் இலக்குவன் கோபத்தைக் கண்ட

அனுமன், தாரையை அழைத்து தன் தோழிகளுடன் சென்று இலக்குவனின் கோபத்தைக் தணிக்க தோழியருடன் அனுப்பி வைத்தான். தாரையின் விதவைக் கோலத்தைக் கண்ட இலக்குவன் அயோத்தியில் தன் தாய்மார்களும் இதே கோலத்தில் தான் இருப்பார்கள் என்று எண்ணினான். அவன் கோபம் தெளிந்தது. தாரை இலக்குவனைச் சமாதானம் செய்தாள். சுக்கிரீவன் மது மயக்கம் தெளிந்து இலக்குவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.

**வானரப்படை வந்தது**

சுக்கிரீவன் அனுமனைக் கொண்டு அனைத்து வானரப் படைகளையும் ஒன்று சேர்த்துக் கொண்டு இராமன் இருக்குமிடம் சென்று பணிந்தான். மதிமயக்கத்தால் ஏற்பட்ட காலதாமதத்திற்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். இராம இலக்குவனர் வானரப்படை வீரர்கள் ஒவ்வோரு அணித் தலைமையின் கீழ் வரிசை வரிசையாக நின்றது கடல் அலைகள் போல் காட்சி அளித்தது. "இப்படை தோற்கில் எப்படை வெல்லும்" என்று இராம இலக்குவர் எண்ணினர்.

திசை தோறும் தேவியைத் தேட படைகளை அனுப்புவதென முடிவாயிற்று.

அதன்படி மேற்கு திசைக்கு சிஷபனும் வடக்கு திசைக்குத் சதவலியும் கிழக்கு திசைக்கு வினதனும், தெற்கு திசைக்கு ஆஞ்சநேயனும் படைகளுடன் சென்றனர். இராமன் அனுமனிடம் ஒரு கணையாழியைக்

கொடுத்து அங்க அடையாளங் களையும், சீதையின் மறக்க முடியாத செயல்கள் பற்றியும் சொல்லியனுப்பினான். ஆஞ்சனேயன் இராமன் திருவடிகளை வணங்கி விடைபெற்றான். அவன் படையில் அங்கதன், ஜாம்பவான் ஆகியோரும் இருந்தனர்.

## சம்பாதி

வானரப்படை பல மலைகளையும், ஆறுகளையும் கடந்து செல்லுகையில் மகேந்திர மலையில் ஜடாயுவின் அண்ணன் சம்பாதிக் கழுகு இறகுகள் இன்றி பறக்க முடியாது தவித்ததைக் கண்டனர். சம்பாதியின் வேண்டு கோளை ஏற்று வானரப்படைகள் இராம நாமத்தைச் சொல்லச் சொல்ல இறகுகள் முளைத்ததைக் கண்டு அதிசயித்தனர். அது இராவணன் இருக்கும் தென் திசையைக் காட்டி விட்டுப் பறந்து சென்றது.

# 6. அனுமனின் இலங்கைப் பயணம் (சுந்தர காண்டம்)

### அனுமனுக்கு வந்த தடைகள்

தென்திசை நோக்கிப்பயணம் செய்த அனுமன் படைகள் கடற்கரைக்கு வந்தன. இலங்கைக்குச் செல்ல இக்கடலை எப்படி தாண்டுவது? யார் தாண்டுவது? என்று மலைத்தும் திகைத்தும் இருந்த சமயம் சாம்பவான் “உங்கள் ஆற்றலை நீங்கள் அறிய மாட்டீர்கள். நீரே இக்கடலை கடக்கவல்லிர் இராம நாமம் ஜபித்தும் கடலைத் தாண்டுவீர்களாக” என்று அனுமனிடம் கூற அனுமனும் விஸ்வருபம் எடுத்து வான வீதியில் கடலைத் தாண்டிச் சென்றான். தனக்குத் தடையாக உயர்ந்து வளர்ந்த மைந்நாக மலையை உடைத்துத் தள்ளியும், தேவர்கள் தன்வலியை சோதிக்க அனுப்பிவைத்த சுாசை என்பவனின் வாயில் நுழைந்து, வெளிச் சுவாகத்தில் வெளி வந்து வென்றும், அங்கார தாரை என்ற அரக்கியின் வாயில் நுழைந்து வயிற்றைக்கிழித்து வெளிவந்து அழித்தும் வந்த தடைகளை இராம நாம மகிமையால் வென்றான் அனுமன். கடலைக்கடந்து இலங்கையை அடைந்தான் வனபழம், வளமும் கொண்ட இலங்கை நகரைக்கண்டு ஆச்சிரியமும், அதிசயமும் அடைந்தான். பவளமலையில் நின்றபடி பொன்னாலான மாளிகைகள், மணியால் ஆண மண்டபங்கள் உயர்ந்த மாடிகள், தேவர்கள் செய்யும் பணிகள், அசுரமாதர்தம் உல்லாசம்,

அரக்க வீரர்களின் சல்லாபம், ஆகியவைகளை அனுமன் நோக்கினான்.

**இடையில் வந்தாள் இலங்காதேவி**

இலங்கையைச் சுற்றி இருந்த மதிற்சுவர்களை பலகொடிய அரக்கர்கள் காவல் புரிந்து வந்தனர். வேறு புறமாகக் கடக்க முயன்றபோது இலங்கையைக்காவல் புரிந்து வந்த "இலங்கா தேவி" கண்டுவிட்டாள். பல ஆயுதங்களால் அனுமனைத் தாக்கினாள். அவைகளை அனுமன் பொடிப்பொடியாக்கி கன்னத்தில் ஓங்கி ஒரு அரை கொடுத்தான். அவள் கீழே விழுந்து தான் பிரம்மன் ஆணைப்படி காவல் புரிந்து வருவதாகவும், தான் ஒரு குரங்கால் அழைக்கப்படும்போது இலங்கை அழியும் தருணம் என்றும் அப்போது தான்பிரம்மலோகம் வந்து விடும்படி சொல்லி உள்ளதையும் தெரிவித்து மறைந்தாள் லங்கிணி என்றும் அந்த இலங்காதேவி பிறகு அனுமன் சிறிய வண்டளவு உருவம் கொண்டு எந்தத் தடையுமின்றி இலங்கை நகர மாளிகைக்குள் சென்றான்.

**குறட்டையில் கும்பகர்ணன்**

ஒரு மாளிகையில் நுழைந்த போது மாமிச மலையே படுத்துக் கிடப்பது போல் ஒரு பெரிய உருவம் உறங்குவதைக் கண்டான். தேவமாதர் பாதம் வருட, சேவகர்கள் பலர் பணி விடை செய்ய அவன் விட்ட குறட்டையில் பெருமூச்சில் அகப்பட்ட பொருளெல்லாம் ஒரு நாசியில் நுழைந்து மறு நாசியில் வெளிவந்து

கொண்டிருந்தன. பத்துத் தலை இன்றி ஒரே தலையை உடையவனாய் இருந்ததால் அது இராவணன் அல்ல. அவன் தம்பி கும்பகர்ணனாக இருக்கலாம் என நினைத்தான்.

## விபீஷணன்

பின்பு அனுமன் அடுத்த மாளிகைக்குள் நுழைந்த போது அங்கு அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்த அரக்கனைக் கண்டான். அனுமனுக்கு "நல்ல நீதிமானாகவும் காணப்படும் இந்த மனிதன் இராவணன் தம்பி விபீடணனாக இருக்கலாமென ஊகித்தான். அடுத்து இந்திரஜித் தூங்கும் மாளிகைக்குள் நுழைந்தான். அவனுடைய வலிய தோளையும், வாகான உடலமைப்பினையும் கண்ட அனுமன் இவன் ஒரு பெரும் வீரனாக இருக்க வேண்டும் என எண்ணினான். இப்படி சீதை இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்க வேண்டி மாடங்கள் கூடங்கள் மாளிகைகள், அரங்குகள், அம்பலங்கள், ஆலயங்கள் சாலைகள், சோலைகள் என அனைத்து இடங்களிலும் அனுமன் தேவியைத் தேடித் தேடி இளைத்தான்.

## மண்டோதரியின் மாட்சிமை

அனுமனின் தேடும் படலம் தொடர்ந்தது. மண்டோதரியின் மாளிகைக்குச் சென்ற அனுமன் அங்கு படுத்து உறங்கிக் கொண்டிருந்தப் பெண்ணைப் பார்த்து அதிசயித்துப் போனான். அவள் ஒரு கற்புக்கரசிகளில் ஒருவராக இருக்கும் இராவணன்

மனைவி மண்டோதரியாக இருக்க வேண்டும். மயன் மகளும், நல்ல குணவதியாகவும் காணப்படுகிறாள். நல்ல அழகியாகவும் உள்ளாள். இத்தகைய அழகிய மனைவியை வைத்துக்கொண்டு மாற்றான் மனைவியை விரும்பும் இராவணனின் பெண்ணாசையையும், அதனால் அரக்கர் குலமே அழியப்போகின்றதே என்று சிந்தித்தான்.

**இராவணனின் எழில் துயில்**

அங்கிருந்து கிளம்பி அடுத்திருந்த மாளிகையில் புகுந்தான் அனுமன். இராவணன் மாளிகையில் அவனுக்காக இரவு முழுதும் அந்தப்புரத்து ரோசா மலர்கள் போன்று ஏங்கிய வண்ணம் தூங்கும் எண்ணற்ற எழிலரசிகளைக் கண்டான். பத்துத்தலைகளும் இருபது திண் தோள்களும் பஞ்சணையில் கிடக்கத் துயிலில் ஆழ்ந்திருந்தான் அரக்கப் பேரரசனான இராவணன். இராவணன் மாளிகையில் சில ஆடல் மகளிரின் ஆடைகள் காமத் தீயால் விலகிக் கிடக்க பிதற்றிக் கொண்டிருந்த காட்சியையும் அது ரதி தேவி பாடும் சுதி பேதமாகவும், மன்மதனின் பூங்கணையிலிருந்து புறப்படும் மாங்குயில் கீதமாகவும், எழிலரசிகளின் ஏற்றமிகு நாதம், பூ மணங்கமழும் புன்னகை விருந்து, காமக் கோட்டத்தின் கனிரசம் கலந்த மருந்து இதுவே இராவணனுக்கு வேதம் என உணர்ந்தான் அனுமன். தம் அண்ணல் இராமன் தேவியைப் பிரிந்துத் தூங்காமல்

இருக்கக் காரணமான இந்த இராவணனைக் கண்டு கோபமுற்ற அனுமன், "அவனைக் கொன்று விடலாமா. என்று எண்ணினார். ஆனால் அது கடமை அல்ல. இவனைக் கொல்வதற்கு என்றே அம்பு நம் இராமனிடம் உள்ளது" என்று எண்ணி எங்கும் தேவியைக் காணாது இறுதியாக அசோக வனத்தை அடைந்தான்.

**கண்டனன் சீதையை**

ஒரு அசோக மரத்தின் கண்ணுக்குத் தெரிந்த எல்லா இடங்களிலும் பார்த்துக் கொண்டு வந்த அனுமனுக்கு ஒரு மரத்தின் கீழ் சில அரக்கர்கள் கொடிய ஆயுதங்களுடன் காவல் புரிவதைக் கண்டான். அங்கு யார் உள்ளார்கள் என்று பார்க்க அருகாமையில் இருந்த அசோக மரத்துக்குத் தாவினான். அங்கு சோகமே வடிவெடுத்து போன்று அழுக்கான ஆடைகளும், அழுக்கு படிந்த மேனியளாகவும் துன்பத்தில் திளைத்த நங்கையைக் கண்டான். தோற்றப் பொலிவும், ஆழ்ந்த சிந்தனையும் கொண்டுத் திலங்கும் இடம் மாதரசியாக இருக்கலாம் என்று அனுமன் சிந்தித்துக் கொண்டிருந்த போது தனக்கு உதவியாகவும் தேறுதல் சொல்லும் தோழியாகவும் திகழ்ந்த விபீடணனின் மகள திரிசடையிடம் "திரிசடை! என் இடப்புருவம் துடிக்கிறது. இது நல்லதா" என்று கேட்டாள் சீதை. திரிசடையும், "ஆம்ாம் அம்மா. நானும் என் பெரியப்பா இராவணன் தலைகளில் எண்ணெய் வழிய சிவப்பு ஆடை அணிந்து கழுதை மீதேறி தென் திசை நோக்கி செல்வதாகக் கனவு

கண்டேன் என்றாள். இந்த உடையாடலைக் கேட்ட அனுமன் மரக்கிளையில் இருந்த வாரே தேவியை நன்றாகப் பார்த்து அது சீதை தான என்று தெளிந்தான. இதைத் தாங்க முடியாத சீதை ஓ வென்று அழத்துவங்கி விட்டாள். இந்த நேரம் சீதையிடம் திரிசடை ஆறுதல் மொழிகள் கூறி தன் கனவு விரைவில் பலிக்கும் என்று தேறுதல் கூறினாள். அரக்கியரையும் சிறிது அடக்கி வைத்தாள்.

**சீதை முன் அனுமன்**

இராவணன் பேசிய மொழிகள் அவள் மனத்தை வாட்டி வதைத்தது. தன் கணவர் இதுவரை வராததால் இனியும் வரமாட்டார், பிறன்மனைப் பட்டவளை ஏற்க மறுத்து வராமல் இருக்கிறார். இனி அவரை எதிர் நோக்கிப் பயனில்லை" என முடிவு செய்து கொண்டு சுருக்கத்திக் கொடி ஒன்றால் தூக்கிட்டுக் கொள்ள முயற்சிகள் செய்தாள். இவைகளைக் கண்ட அனுமன் 'ராம்' 'ராம்' என்று கூறியபடி தொப்பென்று சீதை முன் குதித்தான்.

கண்டனன் அனுமனும் கருத்தும் எண்ணினான் கொண்டனன் துணுக்கம், மெய் தீண்டக் கூசுவாள் அண்டர் நாயகன் அருள் தூதன் யானெனத் தொடை வாய் மயிலைத் தொழுது தோன்றினான், என்று அனுமன் தோன்றும் போதே தொழுது கொண்டு தோன்றினான் என்பார் கம்பன். தம்முன் குதித்த அனுமனை அரக்கர்களின் மாய வடிவில் வந்தவனாக இருப்பானோ

என ஐயுற்றாள் முதலில் பின் அவன் தன் கணவர் பெயரைச் சொன்ன தால் நல்லவனாகவும் இருக்கலாம் என நினைந்து "வீரனே! நீ யார்?" என்று கேட்டாள். அதற்கு அனுமன் "தான் இராமனிடமிருந்து தங்களைத் தேடி வந்திருப்பதாகத் தெரிவித்து அவள் நம்பும் படியான இராமன் தெரிவித்த "கண்டேன் சீதையை கண்டேன் தேவியை" எனக் கூறி கூத்தாடினான்.

## இரவில் வந்தான் இராவணன்

அனுமன் சீதையைக் கண்ட களிப்பில் இருந்த சமயம் தூரத்தே அரக்கர் கூட்டம் விளக்குகள் ஏந்திய படி, தேவமகளிர் சூழ்ந்து வர இராவணேஸ்வரன் சகலவித அலங்காரங்களுடன் சீதையின் இருப்பிடம் தேடி வந்து கொண்டிருந்தான். நடப்பது என்ன என்பதை அனுமன் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். தன் தாயனைய தேவிக்கு ஏது இன்னலும் ஏற்படாதிருக்க "வாழி சானகி, வாழி இராகவன், வாழி நான்மறை! வாழி அந்தணர்! வாழி நல் அறம்!" என்று வாழ்த்தினான்.

இராவணன் தன் படைகளையும், பக்க வாத்தியங்களையும் தூரத்தில் நிறுத்திவிட்டு ஜானகியின் அருகில் வந்து அவளைப் பலவாறாகப் புகழ்ந்துத் தன்னை விரும்பி ஏற்றுக் கொள்ளும் படி மன்றாடினான். பத்துத் தலைகளும் இருபது திண்தோள்களும் மண்ணில் தோய இருபது கரங்களால் கும்பிட்டு அவளை கெஞ்சினான்.

**சீதையின் சீற்றம்**

இராவணனின் தகாத செயல்களைக் கண்டு நாணி கோபக் கனலில் ஒரு துரும்பை எடுத்து அதனுடன் பேசுவது போல, "அடா அற்பப்பதறே! கற்புக்கரசியிடம் பேசத் தகாத வார்த்தைகளைப் பேசினாய்! உனக்கு அறம் இல்லை. ஆற்றலும் இல்லை. இல்லையெனில் என்னை மாயத்தால் ஏமாற்றி ஏன் கொண்டு வந்தாய் என் கணவரின் அம்புக்கு நீ ஆளாவது நிச்சயம். நீ தீயைத் தீண்டுகிறாய். அறத்தைத் சாடுகிறாய். ஆகவே நினக்கு அழிவு நிச்சயம் என்று ஆத்திரத்துடன் ஆவேசமாகப் பேசினாள்.

இராவணன் தன் வீராப்புகளையும் சொல்லி "இன்னும் சிலகாலம் கழித்து வருவதாகவும் அப்பொழுதுத் தனக்கு இணங்காவிடில் கொன்று விடுவேன்" என்று மிரட்டிவிட்டு அங்கிருந்து பரிவாரங்களுடன் கிளம்பினான். பலவந்தமாக எந்தப் பெண்ணைத் தீண்டினாலும் அவன் தலை சுக்கல் சுக்கலாக நொறுங்கிவிடும். ஆகவே என்னை வந்து பலவந்தம் செய்யமாட்டான். எப்படியும் ஒரு மாத காலத்திற்குள் என்னை என் கணவர் மீட்டுச் செல்வார். அரக்கர் குலமும் அழியும் என்றாள் சீதை. இதைக் காட்டும் கம்பன் பாடல்

அல்லல் மாக்கள் இலங்கையது ஆடுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவேன் அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினென்

என்பதாகும்.

## சூளாமணி

இராமனுக்கு செய்தி செல்லப் பணித்த சீதை வழங்கிய சூளாமணியைப் பெற்றுக் கொண்ட அனுமன் சீதையை மூன்று முறை வலம் வந்து வணங்கினான். சீதா தேவி அவனைப் பலவாறு வாழ்த்தி எந்த இடைஞ்சலும் உன்னை ஒன்றும் செய்யாது என்று வாழ்த்தி விடைகொடுத்தனுப்பினாள்.



**அசோக வனம் அழிவு**

தான் இலங்கைக்கு வந்ததிற்கு அடையாளமாக சில அரக்கர்களையாவது மாய்க்க வேண்டும் என்று தீர்மானித்தான். அசோக வனதனையும் சில மாட மாளிகைகளையும் அழித்து தரை மட்டமாக்கினான். செய்தி அறிந்த இராவணன் மிகவும் ஆத்திரம் அடைந்தவனாய் தன் படைவீரர்களில் சிறந்த சம்புமாலியை படைகளுடன் அனுப்ப அனுமன் அவர்களை வென்று ஒழித்தான். அடுத்து வந்த பஞ்ச சேனாகிபகிகளையும், இராவணனின் இளைய மகன் அக்ககுமாரனையும் சேனைகளுடன் கொன்றொழித்தான். ஆத்திர முற்ற இராவணன் தானே படையுடன் புறப்படத் தயாரான போது, அவன் மூத்தமகன் இந்திரசித்துத் தன் தந்தையைத் தடுத்துத் தானே போருக்குப் புறப்பட்டான்.

வார்த்தைகள் அனைத்தையும் தெரிவித்து தான் இராமனிடமிருந்து பெற்று வந்தத் கணையாழியைக் காட்டினான். மேலும் தன் விஸ்வரூபத்தைக் காட்டினான். அதைக் கண்ட சீதை பெரிதும் மலைப்பும் திகைப்பும் அடைந்து கணையாழியைத் தன் கண்களிலும் மார்பிலும் ஒத்திக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

**சீரஞ்சிவியாய் வாழ்க மகனே!**

தக்க நேரத்தில் நல்ல செய்தி சொன்ன அனுமான சிரஞ்சிவியாக இருப்பாய் என்று உளமாற வாழ்ததினாள். சீதை ஒரு மாத காலத்திற்குள் அரக்கனை கொன்று

தன்னை மீட்டுச் செல்லாவிட்டால் தான் உயிர் விடுவேன் என்ற செய்தியை இராமனுக்குத் தெரிவித்து வரும்படி சீதை தெரிவித்தாள். உயிர் துறக்க நினைத்த தருணத்தில் தன் உயிருக்குரிய கணவனால் அனுப்பப்பட்டு உயிர் மீட்ட உத்தமனான அனுமனுக்கு தன் கயிற்றில் இருந்த சூடாமணியைக் கொடுத்து அதை இராமனிடம் என்னைச் சந்தித்தற்கான அடையாளமாகக் கொடுக்கும்படி தெரிவித்தாள்.

### அனுமன் வேண்டுகோள்

அதை பத்திரமாக வைத்துக் கொண்ட அனுமன் "தாயே! நான் சென்றபின் அரக்கியர்கள் தங்களைக் கொடுமைப்படுத்தலாம். ஆகவே தாங்கள் என் தோள் மீது அமர்ந்து கொள்ளுங்கள். எதத்னை இடுக்கண் வந்தாலும் தங்களை பத்திரமான இராமரிடம் கொண்டு போய் சேர்ப்பேன்" என்றான் அனுமன்.

### சொல்லால் சுடுவேன்

அதற்கு சீதை "குழந்தாய்!" உன்னால் இது முடியாததல்ல. நான் சாபமிட்டால் இந்த இலங்கையே எரிந்து சாம்பலாகும். அதனால் தன் கணவரின் கோதண்டத்திற்கு இழுக்கு நேரம் என்று வாளாவிருக்கின்றேன். மேலும் உன் விருப்பப்படி நடந்தால் இராவணன் வஞ்சம் போல் நீயும் வஞ்சித்து எடுத்துச் சென்றால் என்கணவருக்கு களங்கம் உண்டாகுமே என்பதை யோசித்துப்பார், முன் பெற்ற சபாத்தின் படி.

## இந்திர சித்துவின் பிரம்மாஸ்திரம்

அனுமனை இந்திரசித்து பல மாயப்போர்களால் வீழ்த்த முயன்றான். ஆனால் அனுமன் சளைக்க வில்லை. இந்திரசித்துவின் படை தேர் ஆகியவைகளை அனுமன் அழித்துவிட்டான். வேறு இரதம் இன்றி இருந்த இந்திரசித்து தன்னிடம் சிறப்பாக இருந்த பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்தினான். அதன் மூலம் அவன் உடல் முழுதும் கட்டுகளா அமைய அனுமன் அஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டான். அரக்கர்படை ஆர்பரித்தது. இந்திரசித்து கட்டுண்ட அனுமனை இழுத்துக் கொண்டு இராவணனின் எதிரில் கொலு மண்டபத்தில் நிறுத்தினான்.

## இராவணன் முன் இராம தூதன்

அரியாசனத்தில் வீற்றிருந்த இராவணன் முன் கட்டுண்ட நிலையில் நிறுத்தப்பட்ட அனுமன்னைப் பார்த்து "யாரடா நீ குரங்கே? நீயார்? இங்கு எதற்கு வந்தாய்?" என்று கண்களில் அனல் பொறிகள் பறக்க ஆவேசமாகக் கேட்டான். அதற்கு அனுமன் "அயோத்தி மன்னன் தசரத குமாரன் இராமனின் தூதுவன். பெண்ணாசையால் காமக்கடலில் மிதக்கும் நீ என் தலைவன் இராமனின் மனைவி ஜானகியை வஞ்சகமாகக் கவர்ந்து சிறை வைத்துள்ளாய். அறத்துக்குப் புறம்பாக வாழும் நீயும் உன் குலமும் அழிவிலிருந்து மீலவேண்டுமானால் சரணடைந்தவர் களுக்கெல்லாம் அபயம் தரும் காருணய சீலரிடம

சீதையை ஒப்படைத்து தவருக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள் அவரும் நின் தவரை மன்னித்து அருளுவார். இதுவே உனக்கு உய்யும் வழி" என்று பலவாறு எடுத்துச் சொன்னான் அனுமன். தான் இராம தூதுவன் என்று எடுத்துச் சொல்லியும் ஆசனம் அளிக்காது அவமானப்படுத்தும் இராவணன் முன் இராம நாமத்தைச் சொல்லி தன்வால் சுற்றால் உயரமான ஆசனம் அமர்த்திக் கொண்டு அதில் அமர்ந்து பேசினான் அனுமன்.

இராவணன் அனுமனிடம் "இத்தகைய மாயா ஜாலவித்தைகளை அரக்கர்களாகிய நாங்களும் அறிவோம். குரங்காகிய நீயா கோமகனாகிய எனக்கு புத்தி சொல்வது? உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று தன் வீரர்களை அழைத்து இவனைத் தீயிட்டுக் கொளுத்திக் கொல்லுங்கள்" என்று ஆணையிட்டான். அரக்கர்கள் அனுமனை சூழ்ந்தனர். அப்போது இராவணனின் இரண்டாவது தம்பி விபிஷ்ணன் எழுந்து தூதுவர்களாய் வநதவாகளை யாரும் கொல்ல மாட்டார்கள். அவனை விட்டுவிடுவதே நலம் என்றான். அதற்கு இராவணனும் இசைந்து "இலங்கையை அழித்த அந்த குரங்கின் வாலில் துணிகளைச் சுற்றி தீயிட்டு ஊருக்கு வெளியே விடுங்கள் என்றான். அதன்படி வாலில் துணிகளைச் சுற்றி எண்ணெயில் தோய்த்து, கட்டுகளைக் களைந்து விட்டுவிட்டார்கள். இதுதான் சமயமென அனுமன் விண்வெளியில் தீயுடன் பறந்தபடி

இலங்கை நகர் முழுதும் தீமூட்டிவிட்டு கடலில் நெருப்பை அணைத்துவிட்டு இராமனிடம் திரும்பினான் அனுமன்.

### சீதையின் மறுப்பு

இது கேட்ட சீதை மிகவும் துயரம் அடைந்து "என் உயிரை விடுவேனே தவிர யார் பேச்சையும் கேட்கமாட்டேன். நீர் என் தந்தையா என்றே சந்தேகம் ஏற்படுகிறது!" என்று சொல்லி அழுது புலம்பினாள்.

அதுசமயம் இராவணனிடம் கும்பகர்ணன் இறந்த செய்தி தெரிவிக்கப்பட்டது. இராவணன் அசோக வனத்திலேயே புலம்பி அழ சீதை மனதிற்குள் மகிழ்ந்தாள். பிறகு இராவணனின் இளைய புதல்வன் இதிகாயன் போருக்குச் சென்று மாய்ந்தான்.

### இந்திர சித்துவின் மாயப்போர்

மாயப்போரில் வல்ல இந்திரசித்து போருக்கு எழுந்து பல அற்புத ஆயுதங்களை ஏவி வானரப் படையை நிலை குலையச் செய்தான். இலக்குவனிடம் கடும்போர் செய்ய மாலை நேரத்தில் நாக பாசத்தை ஏவி அனைவரையும் மயக்கமுறும்படி செய்தான். அதுசமயம் வந்த கருடபகவானைக் கொண்டு அனைவர் மீதும் இறகால் வீச அனைவரும் மயக்கம் தெளிந்தனர்.

### ஏவினான் பிரம்மாஸ்திரம்

மாயத்தில் வல்ல இந்திரசித்து வானரப்படை மீது பிரம்மாஸ்திரம் ஏவி இலக்குவன் உட்பட பல வானர

வீரர்களும் பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுண்டு மயங்கி வீழ்ந்தனர். அந்தக் காட்சியை சீதையை வரவழைத்துச் சீதைக்குக் காட்டவைத்தான் இராவணன். ஜானகி அழுது புலம்பினாள். திரிசடை இது வெறும் மாயம் என்று சொல்லி தேற்றினாள். உணவு தயாரிக்கச் சென்றிருந்த விபீடணன் அங்குவந்து ஆஞ்சனே யனையும், சாம்பவானையும் மூர்ச்சை தெளிவித்து அங்கிருந்து வடக்கே ஐம்பதினாயிரம் யோசனை தூரத்தில் உள்ள சஞ்சீவிமலையைச் சென்றடைந்து



அதிலுள்ள இறந்தாரை, உயிர்ப்பிக்கும் சஞ்சீவி மூலிகையையும், அங்கங்கள் பொருந்தும் மூலிகையையும் உடனே கொண்டுவர ஜாம்பவான் அனுமனிடம் தெரிவிக்க அதன்படி வடக்கே வானில் பறந்து சென்று, மூலிகை தெரியாமையால் மலையையே பெயர்த்தெடுத்துக் கொண்டு காற்றென விரைவில் திரும்பினான் அனுமன். சஞ்சீவி மூலிகையின் மகிமையால் காற்றுபட்ட மாத்திறத்தில் அனைத்து வானார்களும் இலக்குவரும் மூர்ச்சைத் தெளிந் தெழுந்தனர். இராமன் அனுமனை வெகுவாகப் பாராட்டினான். ஜாம்பவான் சொற்படி மீண்டும் சஞ்சீவிமலையை இருந்த இடத்திலேயே வைத்து விட்டு வந்தான் அனுமன்.

**மாயா சீதை**

சூழ்ச்சியில் வல்ல இந்திரஜித்து ஒரு அரக்கனை சீதை போன்று வடிவெடுக்க வைத்து இராமன் முன் வெட்டி வீழ்த்தினான். இதைக்கேட்ட இராமன் மயக்கம் அடைய, விபிஷ்ணன் வண்டு உருவம் கொண்டு இலங்கை சென்று அசோகவனத்தில் உள்ள சீதையைக்கண்டு வந்து சீதை உயிருடன் உள்ளதைத் தெரிவித்தான். இராமன் நிம்மதி அடைந்தான்.

**இந்திரஜித்தின் நிகும்பலையாகம்**

விபிஷ்ணன் இலங்கை சென்றபோது இந்திரஜித்து நிகும்பலையாகம் செய்ய சென்றுள்ளதைக் கேள்விப் பட்டு இராமனிடம் தெரிவித்தான்.

**கண்டனன் சீதையைக் கண்களால்**

கிஷ்கந்தையில் தேடிசென்ற வானரப் படைகளுக்காக காத்திருந்த இராம இலக்குவர்களிடம் எல்லாதிசைகளிலும் சீதைக்காணவில்லை என்று வானரப்படை திரும்பியது. தென்திசை நோக்கிச் சென்றபடை மட்டும் திரும்பவில்லை. அந்த திசையில் சென்ற அனுமனுக்கான நம்பிக்கையுடன் காத்திருந்த காகுத்தன் முன் அனுமன் சொல்லின் செல்வன் என்று புகழாரம் சூட்டப்பட்ட அனுமன் இராமனின் கேள்விச் சொல் வரும் முன் முகபாவத்தைப் பார்த்தபடி 'கண்டனன்' என்று சொன்னவுடன் இராமன் உயிர் உடலில் நின்றது. அடுத்து அவள் என்னிழலயள் என்று எண்ணியதற்கு "கற்பினுக்கணியை" என்றான். "இதுயாராவது சொல்லி இருப்பார்களோ" என்று எண்ணிய நேரத்தில் 'கண்களால்' "எங்கு?" "தெண்திரை இலங்கை தென்னகா" என்று கூறுகின்றான், என்று அனுமன் மதி நுட்பத்தை வெளிப்படுத்துகின்றான் கம்பன். இராமனின் மனத்தெளிவும் உள்ளத்தெளிவும் ஏற்படும் வண்ணம் சீதை உள்ள இருப்பிடித்தை ஒரு மாத இடைவெளிக்குள் தன்னை மீட்காவிட்டால் இறந்து விடுவாள் என்ற செய்தியையும் சொல்லி, அவள் தன் அடையாளமாகக் கொடுத்தனுப்பிய சூளாமணியை இராமணிடம்தந்தான் அனுமன். இராமன் பெரிதும் மகிழ்ச்சியுற்றான். சீதையைத் தேடிச் சென்று திரும்பிய வானரப்படை ஏழுபது வெள்ளம் வீரர்களை சீதையை

சிறைமீட்க இலங்கை நகர்மீது போரிட ஆணையிட்டான் சுக்கிரீவன். முரசு முழுங்கியது. வானப்படை ஆர்ப்பரித்துச் சென்றது. ஆஞ்சனேயன் வேண்ட இராமன் அவன் தோள் மீதும், அங்கதன் வேண்ட இலக்குவன் அவன் தோள் மீதும் ஏறிக்கொண்டு சுக்கிரிவனின் வானரப்படைகளுடன் இலங்கையின் தென் கடற்கரை நோக்கிச் சென்றனர்.

பன்னிரண்டாம் நாள் படை தென் கடற்கரையை அடைந்தது எழுபது வெள்ளம் வானர சேனை வீரர்களின் ஆர்பரிப்பையும், வீரத்தையும் கண்ட தேவர்கள் இப்படை தோற்கில் எப்படை வெல்லும் என்று பூமாரி மொழிந்து வாழ்த்தினர். கடல் அருகில் வந்த இராமனை கடலானது "நான் தந்த இலக்குமியாகிய தவப்பாவை சீதையை இழந்து வந்த இராமனைக் கண்டு துயருற்று இராமன் பாதங்களைத் தழுவி கழுவிச் சென்றதுடன் தன்னிடமுள்ள முத்தையும்; பவளத்தையும் அவன் கால்களில் கொட்டி வரவேற்றது என்று குறிப்பிடுவான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அந்த வரிகள் இந்து அன்ன நுதல் பேதை இருந்தாள், நீங்கா இடர் கொடியேன் தந்த பாவை, தவப்பாவை, தனிமை தகவோ? எனத்தளர்ந்து சிந்துகின்ற நறுந்தானக் கண்ணீர் ததும்பி, திணத்து எழுந்து எந்த வள்ளல் மலர்த்தாளின் வீழ்வது ஏய்க்கும் மறிகடலே

அத்தகு துன்ப நிலையிலும் இனிநடக்க வேண்டிய பணிகள் பற்றிச் சுக்கிரீவன், ஆஞ்சனேயன் ஆகியோருடன் ஆலோசனை செய்தான் இராமன்.

**சேது அணை அமைத்தல்**

கடலைக் கடந்து இலங்கைச் செல்ல வேண்டியிருந்ததால் வருணனை நோக்கி வருண மந்திரம் சொல்லி தரும்பைப் புல் பாயில் மீது ஏழு நாள் சயனித்து தவமிருந்தான். அந்த இடம் இன்னும் தென் கோடிக்கரையில் "திருப்புல்பாணி" என்ற பெயரில் சிறு ஊராகவும், தீர்த்த கட்டமாகவும், இராமன் பூசை செய்த நவக்கிரகங்கள் தேவிப்பட்டணத்தில் கடலுக்கு உள்ளேயே உள்ளன. சுற்றுலாப் பயணிகளின் வழிபாட்டுக்குரிய ஒன்றாக இன்னும் இருந்து வருகின்றது.

**சேது அணை**

இராமன் முன் வருணன் தோன்றி கடலின் மீது பொருட்களைப் போட்டு அணை கட்டும்படி தெரிவித்துச் சென்றான். வானரப்படை உதவியால் மயன் மகனான நளன் மலைகளைக் கொண்டு நிரப்பி அணை அமைத்தான். வானரங்கள் வீசிய மலையை நளன் தப்பாது பிடித்து அணை சமைத் தான் என்பதைக் குறிப்பிட வந்த கவிச்சக்கரவர்த்தி கம்பன் தனக்கு உபசரித்த சடையப்பவள்ளலின் ஈகைத் தன்மையை அங்கக் குறிப்பிடுவது நன்றிமறவாத குணம் கொண்ட கம்பனின் உள்ளம் நமக்குத் தெரிகின்றது.

மலையை மாக்குரங்கு எஞ்சுறக் கடித்தெடுத்து எறிய வெநளன் விஞ்சையில் தாங்கினான். சடையன் வெண்ணையில் தஞ்சம் என் போர்களைத் தாங்கும் தன்மை போல் இங்கு ஒரு அபூர்வகற்பனையை வெளிப்படுத்துகிறான். குமுதன் என்ற குரங்கு மலையினை கடலில் போடவும் கடல்நீர் தெளிந்து தேவலோகம் செல்ல, அதைக்கண்ட தேவர்கள் மீண்டும் அமிழ்தம் கிளம்பியதோ என்று மகிழ்வுற்றனர்.

குமுதன் இட்ட குலவரை கூத்தரின்
திமிதம் இட்டுத் திரியும் திரைகடல்
துமிதம் ஊர்ழக வானவர் துள்ளினார்
அமுதம் இன்றும் எழும் எனும் ஆசையால்.

அணை கட்டும் பணிமுடிந்தபின் வானரப்படை அணைமீது சென்று இலங்கையை அடைந்தது.

**ஒற்றர்களை மன்னித்த இராமன்**

வானரப்படைகளின் அளவையும், ஆற்றலையும் அறிந்தவாசுகன், சாரணன் என்னும் அரக்கர்களை இராவணன் அனுப்பிவைத்தான். அவர்களும் குரங்குகள் போல் வேடம் போட்டு வானரச் சேனைக்குள் இருந்ததை வீபிடணன் இனங்கண்டு கொண்டு அவர்களை இராமனிடம் ஒப்படைத்தான். இராமன் அவர்களை மன்னித்துவிடும் படியும், இராவணனுக்கு அவர்கள் மூலம் நல்ல புத்திமதிகளைக் கூறி அனுப்பினான்.

**பாட்டன் அறிவுரை**

இராவணன் இதற்கிடையில் மந்திரிகளை அழைத்து ஆலோசித்தான். இராவணனின் பாட்டன் மாலியவான் "சீதையை விட்டால்தான் அரக்கர்குலம் பிழைக்கும்" என்று ஆலோசனை கூறினான். இராவணன் பெரும் சினங்கொண்டான்.

**நேருக்குநேர் காணல்**

வானரப்படையைக்காண விழைந்த இராவணன் உயரமான உப்பாகை ஒன்றின்மீது வானரப் படையையும், இராம இலக்குவர்களையும் நேராகக் கண்டான். அதே சமயம் இராமனும் தன் சகாக்களுடன் ஒரு மலைமீது ஏறி அதன் சிகரத்தின்மீது இருந்தபடி இராவணனையும் நேரில் கண்டார்கள்.

**சுக்கீரிவன் சாகசம்**

மலைமீதிருந்தபடி இராவணனைக் கண்ட சுக்கிரீவன் ஒரேதாவாக இராவணன் மீது தாக்க இருவரும் சிறிது நேரம் மறபோர் புரிந்தனர். அந்த சமயம் இராவணனின தலைமுடி கார் டதுதுல பதித்திருந்த பத்து கிரீடத்திலிருந்த இரத்தினம் கற்களைப்பறித்துக் கொண்டு இராமனிடம் வந்து அவற்றை இராமனின் பாதங்களில் வைத்துப் பணிந்தான். இது முதல் வெற்றி! என்று பலரும் பாராட்டினர். சாத்துவன் என்ற அசுர ஒற்றன் இராவணனிடம் வந்து வாரை சேனைகள் அளவைப் பற்றிய தகவ) தெரிவித்தான்.

# 7. இராம இராவணப் போர் (யுத்தகாண்டம்)

## இராவணனின் மந்திரா யோசனை

அனுமன் இலங்காபுரியை தீயிட்டுச் சென்றபின் இலங்கை நகர் பாலைவனம் போல் காட்சியளித்தது. இதுவே அரக்கர் அழிவுக்குக் கட்டியம் கூறுவதாக அமைந்தது இராவணன் எரியுண்ட இலங்கையை மயனைக்கொண்டு புதுப்பித்தான். ஆலோசனை மண்டபத்தில் அமர்ந்தான். அங்கு தனக்கு வேண்டாதவர்கள் எனக்கருதிய முனிவர்கள், தேவர்கள் ஆகியோரை விலக்கினான். சபையோரிடம்

சுட்டது குரங்கு, எரி சூரையாடிடச்
கெட்டது கொடிநகர் கிளையும் நண்பரும்
பட்டனர் பரிபவம், பரந்தது எவ்வேணும்
இட்டது இவ் அரியணை இருந்தது என் உடல்

என்று பேசினான் இராவணன்.

## வீரர் தம் வீரியப் பேச்சு

இராவணனன் பேச்சால் ஆத்திரமுற்ற அரக்க வீரர்களான மகோதரன், வச்சிரதந்தன், துன்முகன், பக்கன், பிசாசன் போன்றோர் “இதோ இப்பொழுதே இலங்கையைக் கடந்து சென்று மானிடப் பதர்களையும், வானரக் கூட்டத்தையும் அழித்து வருவோம் என வீராப்புப் பேசினர்.

**கும்பகர்ணன் பேச்சு**

"அண்ணா! தாங்கள் உயர்ந்த பிரம்ம குலத்தில் பிறந்து வேதங்கள் பயின்று இருந்தும் காமத்தால் வீழ்ந்து பிறன் மனைவியான சானகியை என்று சிறை வைத்தீர்களோ அன்றே வீழ்ந்தது அரக்கர் குலப்புகழ். தவறிழைத்துள்ள நாம் மானத்தையும் வீரத்தையும் பேசுவதும், மானுடரை ஏசுவதும் ஏனோ?

"பேசுவது மானம் இடை பேணுவ்து காமம்
ஏசுவது மானுடரை ஒன்று நம் கொற்றம்"

மானுடர் தேவர்களோடு இணைந்து போரிட வருமுன் நாம் கடலைக் கடந்து சென்று அந்த மானுடரையும் வானரங்களையும் வீழ்த்திவருவோம். இதுவே நாம் இப்போதைக்குச் செய்ய வேண்டியது என்றான் கும்பகர்ணன்.

அதைக் கேட்ட இராவணன் பெரிதும் மகிழ்ந்து தம்பீ! ஒன்றே சொன்னாய்! அதுவும் நன்றே சொன்னாய் என்று பாராட்டினான். இந்திரஜித்து எழுந்து "தந்தையே! இந்த அர்ப்ப மானுரையும் குரங்குக் கூட்டத்தையும் அவர்கள் பயந்து ஓடுமுன்பாக ஒழித்து வர என்னை அனுப்பிவையுங்கள் என்று கேட்டுக் கொண்டான். மகிழ்ந்தான் இராவணன்.

**விபிஷ்ணின் அற உரை**

மண்டபத்தில் இருந்த இராவணனின் இரண்டாம் தம்பியான விபிஷ்ணன் எழுந்து பேசினான்

"அன்பிற்குறிய அண்ணா! தாங்கள் அரிதில் பெற்ற தவவலிவும், வீரமும், கலைகளும் வீணாக அழியக்கூடாது, என்ற நல் எண்ணத்தினால், தங்கள் பெயரில் உள்ள உண்மை அன்பால் இதைக் கூறுகின்றேன்! தாங்கள் பலரின் சாபங்களைப் பெற்றுள்ளீர்கள். அவைகளை நிறைவேற்றவே வைகுந்த வாசனான நாராயண மூர்த்தியும் இலக்குமியும் இன்று ஸ்ரீமன் இராமனாகவும், சீதா தேவியாகவும் மண்ணில் அவதரித்து அரக்கர் கூட்டத்தை அழிக்க வந்துள்ளார்கள். இலங்கை எரியுண்டது ஒரு குரங்கினால் அல்ல. அந்த சீதையின் கற்பு நிலையே இன்று இலங்கையைக் கொளுத்தியது. இனி அரக்கர் இனத்தையே எரிக்க உள்ளது. ஆகவே இப்போதைக்கு சீதாபிராட்டியை சிறைவிடுத்து இராமனிடம் சேர்த்து அவனைச் சரண் அடைவதே நம்மை அழிவிலிருந்துக் காப்பாற்றிக் கொள்வதற்கான வழியாகும், என்று தெரிவித்தான். கலகல வென சிரித்த இராவணன் "அற்ப மனிதர்களைக் கண்டு அஞ்சிவிட்டாய்! இந்த இராமன் கூனியின் சூழ்ச்சியால் காட்டுக்கனுப்பட்டவன். தன் மனைவியை பரிகொடுத்து விட்டு நம்மை எதிர்த்துப் போரிட பயந்து காடுகளில் குரங்குக் கூட்டத்துடன் திரிந்து வருகிறான். ஒடிந்து போன ஜனகன் வில்லை உடைத்ததாலோ, மரங்களின் துளைக்கப்பட்ட சந்துகளில் அம்புகளைச் செலுத்தினதாலோ அவன் எப்படி எனக்கு இணையான வீரனாவான். உன்னைத் தவிர அவனைப் புகழ யார்

இருக்கின்றார்கள், என்று எக்காலத்துடன் கேலி செய்தான் இராவணன்.

"அண்ணா! தாங்கள் இராமனை எளிமையாகக் கருதுகின்றீர்கள். அவனோ அறத்தின் நாயகன் அதர்மத்தை அழித்து அறம் காக்க வந்த திருமால் அவதாரம். ஆணவம் கொண்ட நம் இனத்தவர் பலர் அவனால் அழிந்துள்ளார்கள். தன் பக்தன் பிரகலாதனுக்காக தூணில் நரசிங்க அவதாரம் எடுத்து இரண்யனை அழித்தவரும், தற்போது அரக்கர் இனம் அழிக்க வந்துள்ள இந்த இராம இலக்குவரும் அந்த ஸ்ரீமன் நாராயணினின் திரு அவதாரங்களே. ஆகவே நாம் அழிவதிலிருந்து மீள வேண்டுமானால் அவனைச் சரணடைவதே நல்லது என்றான் விபீஷ்ணன்.

இதைக் கேட்டு ஆத்திர முற்ற இராவணன் பொறுமை இழந்தான். சீற்றத்துடன் எழுந்து இனி இங்கிருந்தால் உன்னைக் கொன்று விடுவேன். தப்பிச் செல், என்று கர்ஜித்தான். இனியும் இந்த இடத்தில் இருப்பது ஆபத்து என உணர்ந்த விபிஷ்ணன் வான வீதியில் தன் ஆதரவாளர்களான அனலன், அனிலன், அரன், சம்பாதி ஆகியோருடன் சேர்ந்து இராமன் இருக்கும் இடத்தை நாடி வானில் பறந்து சென்றான்.

**விபிஷ்ணன் சரணாகதி**

விபிஷ்ணன் இராமனிடம் சரணடைய வந்துள்ளதை சில வானரங்கள் இராமனுக்கு அறிவித்தனர். இராமன் இது குறித்து நண்பர்களிடம்

ஆலோசனை கலந்தான். சுக்கிரீவன், சாம்பன், நீலன் ஆகியோர் "அண்ணுக்கு துரோகம் செய்து விட்டு வந்த விபிஷ்ணனை ஏற்கக் கூடாது என்றனர். அதற்கு மாறாக அனுமன் விபிஷ்ணனின் நட்பால் அரக்கர்களின் சூழ்ச்சிகளை மாயத்தையும் .அறிய உதவியாக இருக்குமாதலால் அடைக்கலம் தருவதே நல்லதாக இருக்கும்" என்றான். இராமன் அதை ஏற்று விபீடணனைத் தம்மிடம் அழைத்து வரப்பணித்தான். சுக்கிரீவன் சென்று விபிஷ்ணனைக் கட்டித் தழுவி நட்புடன் அழைத்து வந்தான்.

இராமனைக் கண்ணாரக் கண்ட விபிஷ்ணன் இருகைகளையும் சென்னி மீது வைத்து "சரணம், சரணம் ரகு ராமா!" என்று ஓடி வந்து அவன் இரு திருவடிகளையும் பற்றிக் கொண்டு பாதங்களைக் கண்ணீரால் கழுவ, அவனை தாங்கித் தூக்கிய இராமன்

இந்தா விபிஷ்ணா இலங்காபுரி ராஜ்யம்
இந்திராதி தேவர்கள் உள்ளமட்டும்

என்று தெரிவித்து மானசீகமான முடி சூட்டினான். மேலும் தசரதனுக்குப் பிறந்த நான்கு சகோதரர்களுடன் குகனோடு ஐவராகவும், சுக்கிரீவனுடன் அறுவராகவும் பின் நின்னோடு எழுவராகவும் சகோதரர்களாக ஆனோம். நும் தந்தை தசரதன் புகல் அரும் கானக வாழ்வைத் தந்து எழு புதல்வர்களால் பெருமை பெற்றான் எனக் கூறி கட்டித் தழுவிக்கொண்டான். குகனோடு ஐவரானோம் முன்பு பின்பு குன்று சூழ்வான்

மகனோடு அறுவர் ஆனோம். எம் முறை அன்பின் வந்த அகன் அமர் காதல் ஐய! நின்னொடு எழுவர் ஆனோம். புகல் அருங் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை. விபிஷ்ணன் இராமனுடன் சேர்ந்ததால் இராவணன் அழிந்தான் என்று விண்ணவரும் வானரரும் மகிழ்ச்சியுற்றனர்.

**நான்கு திசைகளிலும் வானரப்படை**

இலங்கை நகரைச் சுற்றி வானரப்படை போருக்கு ஆர்ப்பரித்து நிற்பதை அறிந்த இராவணன் தன் அசுரப் படையை போருக்குத் தயார் செய்ய ஆணை பிறப்பித்தான். திசைகள் தோறும் இருபது வெள்ளம் அசுரப்படை சென்றது. விடிந்ததும் போர் தொடங்க இருந்தது. பொழுதும் புலர்ந்தது. பொற்கோழி கூவிற்று.

**அங்கதன் தூது**

போருக்கு முன் இராவணனிடம் தூது அனுப்பவிரும்பிய இராமன் அங்கதனை அனுப்பிவைத்தான். அங்கதனைக் கண்ட இராவணன் நீ யார்? ஏன் இங்கு வந்தாய்? எனக்கேட்க "நான் வாலியின் மைந்தன் அங்கதன். இராமனின் தூதுவனாக வந்துள்ளேன். அறத்தை ஏற்று ஜானகியை விடுக. இல்லையேல் போர்க்களத்தில் நின் ஆவியை விடுக! என்று தெரிவித்தான். கோபமுற்ற இராவணன் அவனைக் கொல்லும்படி ஆணையிட்டான். அவனைப்பிடிக்க வந்த அசுரர்களைத் தூக்கிக் கொண்டு,

அவர்களைக் கொன்று இராமனிடம் வந்து சேர்ந்து, "தீயோரைத் தீர்த்துக் கட்டினால் ஒழிய திருத்த முடியாது" என்று தெரிவித்தான். இராமன் புன்னகை புரிந்தான்.

### முதற்போர்

வானரப்படை இலங்கைக் கோட்டையை முற்றுகை இட்டவண்ணம் ஆரவாரம் செய்தது. அரக்கர் படைகளுக்கும் வானரப்படைகளுக்கும் கடும் போர் நடந்தது. அரக்க வீரர்கள் பலர் மாண்டனர். பல சேனாதிபதிகள் இறந்தனர்.

### இராவணன் போரில் ஈடுபடல்

இதைக்கேள்வியுற்ற இராவணன் தானே போர்க்கோலம் பூண்டு புறப்பட்டான் போருக்கு. பல தீய சகுணங்கள் தோன்றின. ஆயினும் அவற்றை எல்லாம் பொருட்படுத்தாது அவன் மிகுந்த சினத்தோடு வானரப் படையின் நடுவே புகுந்து அவற்றைக் கொன்று குவித்தான். சுக்கிரீவனுடன். அங்கு வந்த அனுமன் இராவணனுடன் மற்போர்புரிந்து அவன் உடலில் பதித்திருந்த யானைத்தந்தங்களை முதுகு வழியாகச் சிதரும்படி செய்தான். ஆத்திர முற்ற இராவணன் ஆஞ்சனேயரைக் குத்தி மூர்ச்சையுறச் செய்தான். அடுத்து வந்த இலக்குவனையும் போரில் மூர்ச்சையுறச் செய்து அவனை இலங்கைக்குத் தூக்கிச் செல்ல முயற்சித்தான். அவனால் தூக்க முடியவில்லை. இலக்குவனை மூர்ச்சை தெளிந்து கண்ட அனுமன் அவனை இராமனிடம் தூக்கிச் சென்றான்.

## இராம இராவணப் போர்

இலக்குவன் மூர்ச்சையுற்றதைக் கண்ட இராமன் அனுமன் தோள்மீதமர்ந்து அம்புகளை விடத் துவங்கினான். இராவணன் விட்ட அம்புகளை ஒடித்துத் தூளாக்கினான். இராமன் கோதண்டத்தால் இராவணனின் குடை, கொடி, தேர், சாரதி, குதிரைகள் அனைத்தையும் சிதைத்து அவனுடன் இருந்த இருநூறு வெள்ளச் சேனைகளை அழித்து இராவணனைத் தனிமையாக்கினான். ஒரு அம்பு போதும் இராவணனைத் தீர்த்துக் கட்ட, இராவணன் நிலைகண்டு இராமன் பரிதாபப்பட்டான்.

## இன்று போய் நாளை வா

அப்போதுக் கருணைக் கடலான இராமபிரான் "இராவணா! இன்று போய் போருக்கு நாளை வா. நீ பிழைக்க வேண்டுமானால் சிறையில் வைத்துள்ள சீதையை விடுவித்து, உன் தம்பி விபீடணனுக்குப் பட்டம் சூட்டி, அவன் ஆணைப்படி நடந்தால் நீ வாழலாம். யோசித்து செய். இல்லையேல் அழிவு நிச்சயம்" என்று சொல்லியனுப்பினான். ஆள் ஐயா! உனக்கு அறைத்தன மாருதம் அறைந்த பூளை ஆயின கண்டனை. இன்று போய் போர்க்கு நாளை வா; என நல்கினான், நாடு இளங்கமுகின் வாளை தாவ று கோசல நாடுடை வள்ளல் இராமபிரானை இராவஎன் உயிர் தந்த வள்ளல் என்று குறிப்பிடுகின்றாஎ கம்பன். யுத்தகளத்திலேயே ஒரு மாபெரும் புதுமை செய்து காட்டுகின்றான் இராமன்.

## இராவணன் ஆட்சியும் வீழ்ச்சியும்

இராவணன் இலங்கையை ஆளும் தன்னேரில்லாத மன்னன். அவன் ஆற்றல் திறனை பெண் ஆசையால் இழந்து, படைகளை இழந்து தனியனாய் இலங்கை சென்றதைக் குறிப்பிடும் கம்பன்

"வாரணம் பொருத மார்பும், வறையினை எடுத்த தோறும்
நாரத முனிவர்க்காக நயம்பட உறைத்த நாவும்
தாரணி மௌலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் கனத்தே போட்டு வெறுங்கை யோடு இலங்கை புக்கான்"

என்று குறிப்பிடுகின்றார்.

அவன் திரும்பும் போது "சிறைபட்டுள்ள சீதை இதைக் கேட்டு சிரிப்பாளே" என்று உள்ளம் வெட்கிப் போனான். அடுத்த நாள் எட்டுதிக்கு வீரர்களை வரவழைத்து போருக்கு ஆயத்தப்படுத்தினான்.

## கும்பகர்ணன் வதம்

கும்பகர்ணன் ஆறுமாதம் விழித்திருப்பான். ஆறுமாதம் தூங்குவான். அப்போது அவன் நல்ல உறக்கத்தில் இருந்தான். அவனை எழுப்பும் படி வீரர்களுக்கு ஆணையிட பெரும் சிரமப்பட்டு கும்பகர்ணனை எழுப்பினார்கள். அவன் விழித் தெழுந்ததும் இராவணன் முன் தோன்றி அவனைப் பணித்து, "பெரிய போர் மூண்டு விட்டதா? அந்தச் சீதா தேவியின் துயர் நீங்க வில்லையா? குலப் புகழ் நீங்கியதா? நாம் அழியும் காலமும் வந்துவிட்டதா?" என்று வருந்திக் கூற இராவணன் மிகவும் கோபம்

கொண்டு பேசவே தமையனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வீரர்களுடன் போருக்குப் புறப்பட்டான்.

கும்பகர்ணனின் தோற்றப் பொலிவைக் கண்ட இராமன் அவனைக் கொல்ல மனமில்லாமல் விபிஷ்ணனை அனுப்பி கும்பர்கணனை அழைத்நது வரும்படி பணித்தான். விபிஷ்ணன் தமையனிடம் சென்று "இராமனைச் சரணடைந்தால் உய்வு பெறலாம்" என பல நீதிகளை எடுத்துச் சொல்லியும் வர மறுத்தான்" செஞ்சோற்றுக் கடன் முடிக்க அண்ணனுக்காக உயிர் விடுவேன், என்று சொல்லி திருப்பி விட்டான்.

**கும்பகர்ணனுடன் போர்**

இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் கடும் போர் மூண்டது. கும்பகர்ணன் தன் ஆயுதங்களால் வானரப்படையை அழித்தான். அவனுடன் போரிட்டு மூர்ச்சை அடைந்த சுக்கிரீவனை எடுத்துக் கொண்டு இலங்கைக்கு எடுத்துச் சென்றான். அதைத்தடுக்க நினைத்த இராமன் அம்பைத் தொடுத்து அவன் கோட்டைக்குள் செல்ல முடியாதபடி சரக்கூடம் அமைத்தான். இராமன் இட்ட அம்பு ஒன்று கும்பகர்ணன் நெற்றியில் பட்டு அவனை மூர்ச்சை அடையச் செய்தது. அந்த சமயம் மூர்ச்சை தெளிந்த சுக்கிரிவன் அரக்கனின் மூக்கையும் காதுகளையும் பரித்துக் கொண்டு தப்பி வந்தான்.

மூர்ச்சை தெளிந்த கும்பர்ணன் தன் மூக்கும் காதும் அறுபட்டதால் வருந்தி மீண்டும் போருக்கு வர,

அவன் கரங்களையும், கால்களையும் வெட்டி வீழ்த்தினான். கும்பகர்ணனின் வேண்டுகோள்படி அவன் தலையை அம்பினால் கொய்து கடலில் விழும் படி செய்தான் இராமன். வானரப்படை மகிழ்ச்சியால் ஆர்ப்பரித்தது.

**மாயா ஜனகன்**

இதற்குள் மகோதரன் யோசனைப்படி ஒரு அரக்கனை ஜனகனைப் போல் (சீதையின் தந்தை) உரு மாறச் செய்து அவனை இராவணன் அசோக வனத்திற்கு அழைத்துச் சென்றான். அந்த ஜனகன் சீதையை இராவணனுக்கு இணங்கும்படி வற்புறுத்தினான். வந்தவன் மாய உரு என ஐயுற்றாள் சீதை. அது சமயம் கும்பகர்ணன் இறந்த செய்தி இராவணனுக்குத் தெரிவிக்கப்பட்டது. இராவணன் புலம்பிட சீதை மனத்தினுள் மகிழ்ந்தாள். இராவணன் தன் இளைய மகன் அதிகாயனைப் போருக்கு அனுப்ப அவனும் போரில் மடிந்தான்.

**இந்திரஜித்துவின் மாயப்போர்கள்**

இராவணனின் மகன் இந்திரஜித்து மாயப்போரில் வல்லவன். தன் தந்தைக்கு அரக்கர் குலம் மீள சீதையை சிறையிலிருந்து விட்டுவிடும்படி எடுத்துக் சொல்லியும் சீற்றமடைந்த தந்தைக்காக போருக்குச் சென்று பல மாய அத்திரங்களைப் பயன்படுத்திப் போர் புரிந்தான். வானரப்படை மீது நாகபாசம் ஏவி அனைத்து வானரப்படைகளும் மயங்கி விழும்படி செய்தான். அது சமயம் கருடன் பரந்து வந்து தன் சிறகுகளால் காற்றை வீச வானரப்படை மயக்கம் தெளிந்தது எழுந்தது.

**இந்திரஜித்துவின் பிரம்மாஸ்திரம்**

இதைக்கண்ட இந்திரஜித்து பிரம்மாஸ்திரத்தை ஏவி அனைவரையும் மயக்கமடையும்படி செய்தான். வானரப்படை முழுவதையும் மாய்ந்து விட்டதாகக் கருதி இதைத்தன் தந்தைக்கு தெரிவிக்க இலங்கை சென்றான். பாடிவீட்டில் பூசையை முடித்துக் கொண்டு வந்த இராமன் இலக்குவன் உட்பட அனைவரும் மடிந்து கிடப்பதைக் கண்டு, புலம்பிய வண்ணம் மயங்கி விழுந்தான். இந்த அவலக்காட்சியை இராவணன் சீதைக்குக் காட்டினான். சீதை பெரிதும் வருந்தினாள். ஆனால் திரிசடை "இது அரக்கர் செய்த மாயம். வருந்தற்க," என்று தேற்றினாள்.

**சஞ்சீவி மலை வந்தது**

உணவு தேடிச் சென்ற விபிஷ்ணன் திரும்பி வந்த சமயம். சாம்பவானும், அனுமனும் மயக்கம் தெளிந்து எழுந்தனர். சாம்பவான் யோசனைப்படி வடக்கே ஐம்பதினாயிரம் யோசனை தூரம் பறந்து சென்று அனுமன் சஞ்சீவி மலையுடன் அங்கு வந்தான். சஞ்சீவி மலையின் மகிமையால் வானரப்படை உயிர்பெற்று எழுந்தது. மீண்டும் அனுமன் அந்த மலையை அதே இடத்தில் வைத்து விட்டுத் திரும்பினார். இந்திரஜித்துவின் நிகும்பலை யாகத்தைப் பற்றி அறிந்திருந்த வீபிஷ்ணன் இலக்குவனை அழைத்துக் கொண்டு இந்திரஜித்துவின் யாகம் நிறைவு பெறாவண்ணம் தடுத்தான். அங்கு தப்பித்துச் சென்ற இந்திரஜித்து தன் தந்தையிடம் வந்து வணங்கி "தந்தையே! சீதையை விட்டுவிடுங்கள். நம் அரக்கர் படையை வீழ்த்த அந்த இலக்குவன் ஒருவனே போதும்" என்று சொல்ல இராவணன் மிகக் கோபமுற்றான்.

### என்னையே நம்பினேன்

“என்னையே நம்பி யான் இந்த நெடும்பகைத் தேடிக் கொண்டேன். உன்னையும், முன்னோரையும், பின்னோரையும் நம்பி இந்தப் பகையைத் தேடிக்கொள்ள வில்லை” என்று கர்ஜித்தான்.

தந்தையின் செயல் மாறாது எனத் தெளிந்து மீண்டும் போருக்குச் சென்று மாயப் போர்கள் பல புரிந்தது இறுதியில் இலக்குவன் அம்பால் தலை கொய்யப்பட்டு தலையில் வீழ்ந்தான். இச்செய்தி கேட்ட இராவணன் அழுது புலம்பி தலையற்ற உடலைக் கண்டான். தாய் மண்டோதரி வந்து கதறி அழுதாள்.

### மூலபல சேனை வந்தது

இராவணன் கட்டளைப்படி அரக்கர்கள் பல திசைகளுக்கும் சென்று மூலபல சேனை முழுதும் திரட்டிக்கொண்டு வந்து இராவணனுடன் சேர்ந்து போரிட்டு வானரப்படை முழுக்க வீழ்த்த முயன்றனர். இராவணன் அம்பு ஒன்றிலே இலக்குவன் மயக்கம் அடைந்தான். அது சமயம் அனுமான் சஞ்சீவி மலையைக் கொண்டுவர இலக்குவனும் வானரப்படையும் உயிர் பெற்று எழுந்தனா. இராமன் செய்தி கேட்டு மகிழ்ந்தான். அனுமனை நோக்கி “நீ என்றும் சிரஞ்சீவியாக வாழ்க” என வாழ்த்தினார்.

### இராவணன் வீழ்ந்தான்

கடைசியாக இராவணன் ஒருவன் மட்டும் நின்றான் இலங்கையில் உள்ள அனைத்து வீரர்களையும் அழைத்துக் கொண்டு இறுதிப் போருக்கு வந்தான். இராம இராவணன் இறுதிப் போரின் முடிவைக்காண தேவர்கள் வானவீதியில் வந்து நின்றனர். இந்திரன் தன் தேரை

மாதரி என்னும் சாரதியுடன் இராமனுக்கு வழங்கி ஆசி கூறினான்.

பல நாட்கள் இராம இராவணனப் போர் நடந்தது. மகோதரன் முதலான பல அரக்கர்கள் போரில் அழிந்தனர். பல அம்புகளால் இராவணன் உறுப்புக்களை சிதைத்தும் அவை மீண்டும் வளருவதை இராமன் கண்டு தன் கோதண்டத்தில் பிரம்மாஸ்திரத்தை ஜபித்து இராவணன் மார்புக்கு நேராக விட அது இராவணனின் உடலில் பாய்ந்து உயிரைப் போக்கியது.

**ஆற்றல் அழிந்ததுவே**

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும்
எக்கோடி யாராலும் வெல்லப்படாய் எனக்கொடுத்த
திக்கோரும் உலகனைத்தும் செருக்கடைந்த புய வலியும்
நின்று மார்பில்
புக்கோடி உயிர்பருகிப்புறம் போயிற்றவன் எய்த புனிதவாளி

அறத்தை நிலை நிறுத்த வந்த இராமனின் கோதண்டம் மறத்தை வீழ்த்தியது. இதுவே இராமன் அவதார நோக்கம் முடிந்தது. பாவம் தோற்றது. தர்மம் வென்றது. தேவர்கள் பூமாரி பொழிந்து வாழ்த்தினர். மண்டோதரி அழுது புரண்டு அவன் மீதே உயிர் தறந்தார். இராவணனுக்கும் மற்றவர்களுக்கும் விபிஷ்ணன் இறுதிச் சடங்கு செய்தான்.

இராமன் ஆணைப்படி இலக்குவன் விபிஷ்ணனுக்கு இலங்கை மாநகருக்கு அரசனாக முடி சூட்டி வைத்தான். அனுமன் அசோக வனம் சென்று சீதையை இராமனிடம் அழைத்து வந்தான்.

**அக்கினிப் பிரவேசம் செய்தாள் சீதை**

இராமன் ஆணைப்படி, அலங்காரம் செய்து கொண்டு வந்த சீதையை நோக்கி "தீயில் சென்று வா" என்று சொல்ல நெருப்பில் இறங்கினாள் சீதை. தீ அவளைச் சுடவில்லை. தேவி குற்றமற்றவள் எனத் தெரிவித்தான். தசரதன் வான வீதியில் வந்து சீதையை ஏற்கும் படி சொல்லி வாழ்த்தினான். இராமன் தந்தையிடம் தன் சிற்றன்னை கைகேயியை மனைவியாகவும் தம்பி பரதனை மகனாகவும் ஏற்கும் படி வேண்டிக் கொள்ள தசரதனும் அதை ஏற்றுக் கொண்டு மறைந்தார்.

**தேவர்கள் வாழ்த்தினர்**

அது சயமம் சிவன், பிரம்மா, இந்திரன் முதலியோர் வானவீதியில் தோன்றி அனைவருக்கும் ஆசி கூறினர். அனைவரும் அவர்களை வணங்கினர். அவர்கள் இராமனை நோக்கி, "இராவணன் ஆணவத்தை அழிக்க பூவுலகில் தோன்றிய திருமாலே நீர்தான். இவள் மகாலட்சுமி என்றனர்.

தேவர்கள் இராமனை நோக்கி "பதினான்கு ஆண்டுகள் இன்றுடன் பூர்த்தி ஆகின்றது. இன்றே நீர் பரதனைக் 'காணாவிடில், தீக்குளிப்பான்" என்று தெரிவித்தனர். உடனே இராமன் தன் தம்பியருடன் புஷ்பக விமானம் ஏறி, அயோத்தி நோக்கிப் புறப்பட்டான். விமானம் பரத்வாசா ஆசிரமம் வந்து அடைந்தது. அனுமனை உடனே அயோத்திக்கு அனுப்பி பரதனுக்குச் செய்தி தெரிவிக்கப் பணித்தான். குகனும் அங்கு வந்து இராமனை வணங்கினான்.

அனுமன் அயோத்தி நோக்கி பறந்து சென்று நந்திக் கிராமத்தை அடைந்தான். அங்கு அது நாள் வரை

இராமன் வராமையால் பரதன் தீயை மூட்டி அதில் விழ வலம் வந்துக் கொண்டிருந்தான்.

**அனுமன் குரல் வந்தது**

"வந்தேன் வந்தேன் பரதா! இரகுராமன் வந்தார். வந்தார் பரதா! என்று குரல் கொடுத்த வண்ணம் பூமியில் குதித்து அனுமன் பரதனின் அக்கினிப் பிரவேசத்தைத் தடுத்து நிறுத்தினான். பிறகு இராமன் தன் சகாக்களுடன் நந்திக் கிராமம் வந்தடைய பரதன் அனைவரையும் வணங்கி வரவேற்றான்.

**ஸ்ரீராமர் பட்டாபிஷேகம்**

பதினான்கு ஆண்டுகள் கானகத்தில் தங்கி அரக்கர் குலம் வீழ்த்தி தாயகம் திரும்பிய இராமனுக்கு நகர மக்கள் உற்சாக வரவேற்பு அளித்து வரவேற்றனர். நகர் முழுதும் அலங்கரிக்கப்பட்டது. பல்வேறு கடல்களிலிருந்தும், புனித நதிகளிலிருந்தும் புனித நீர் வருவிக்கப்பட்டது. மேலும் பல மங்கலப் பொருள்கள் யாவும் தயாரிக்கப்பட்டன. புனித நீரால் நீராட்டப்பட்ட இராமனுக்கு ஆடை ஆபரணங்கள் பூட்டப்பட்டன. அலங்காரம் செய்யப்பட்ட அரங்கில் ஊர் பொது மக்களும், அரசு அதிகாரிகளும் பல்வேறு நாட்டு மன்னர்களும் கூடி மகிழ்ச்சி ஆரவாரம் செய்து வாழ்த்த, தேவர்களும் யாவர்களும் மகிழ பிரம்மனின் மகனான குலகுரு வான வசிஷ்டர், கொடை குணம் கொண்டு புகழ் பெற்ற திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த சடையப் பவள்ளலின் மூதாதையர் முடியை எடுத்துத்தர அரசுக்கிரிடத்தை எடுத்து இராமனுக்கு சூட்டினார்.

அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடை வாள் ஏந்த
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச

ரை செறி குழலி ஓங்க வெண்ணெயூர் சடையன் தங்க
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி"

என்று இராமர் பட்டாபிஷேகக் காட்சியைப் படம் பிடித்துக் காட்டுகின்றார் கம்பர். இதில் ஒரு நயத்தை வைத்து முடிக்கின்றான். சடையப்பவள்ளலை இந்தக் காட்சிப் பாடலில் குறிப்பிடுவதன் மூலம் தனக்கு உதவி செய்த சடையப்பரை தன் கண்முன் கொண்டு வந்து நன்றிக் கடன் செலுத்தும் ஒரு கவிச்சக்கரவர்த்தியாக நமக்குக் காண வைக்கின்றது. கம்பனின் புலமையும், கற்பனைத் திறனும் நன்றி மறவாத பாங்கும் தமிழ் உள்ள வரை கம்பன் வாழ்வான் என்பதில் ஐயமில்லை.



# 8. கீதா சாரம்

எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது.

எது நடக்கிறதோ, அது நன்றாகவே நடக்கிறது.

எது நடக்க இருக்கிறதோ, அதுவும் நன்றாகவே நடக்கும்.

உன்னுடைய எதை இழந்தாய் எதற்காக நீ அழுகிறாய்?

எதை நீ கொண்டு வந்தாய்? அதை நீ இழப்பதற்கு.

எதை நீ படைத்திருந்தாய்? அது வீணாவதற்கு.

எதை நீ எடுத்துக் கொண்டாயோ, அது இங்கிருந்தே எடுக்கப்பட்டது.

எதை கொடுத்தாயோ, அது இங்கேயே கொடுக்கப்பட்டது.

எது இன்று உன்னுடையதோ, அது நாளை மற்றோருவருடைய தாகிறது.

மற்றோரு நாள் அது வேறொருவருடையதாகும்.

இந்த மாற்றம் உலக நியதியாகும்.

# 9. கீதை பிறந்த கதை

உலக அரங்கிலேயே ஆன்மீகத்தின் அடித்தள மாகத் திகழ்வது பாரதத் திருநாடாகும். பாரதப்பாட்டை கொட்டிவைத்து உருவான இரு வீரகாப்பியங்கள். இராமாயணமும் மகாபாரதமும் ஆகும். இராமாயணக் கதையின் சுருக்கத்தை முன்பு கண்டோம்.

மகாபாரதம் எண்ணற்ற நீதிக்கதைகளைக் கொண்ட ஒரு பெருங்காப்பியமாகும். அதில் ஒரு அங்க மாகத்திகழ்வது கண்ணன் விஜயனுக்கு வழங்கும் கீதை உபதேசமாகும்.

**பாரதக் கதையின் சுருக்கம்**

குருவம்சத்தில் கண்ணிழந்த பட்டத்தரசன் திருதராட்டினன் துரியோதனாதியர் நூறுவருக்கும் இளவரசன். பாண்டுவின் புதல்வர் பஞ்சபாண்டவர் ஐவரிடம் பொறாமை காரணமாக பகை மூண்டது. தங்கள் அரசுகளை பிரித்துக் கொண்டு தனித்தனியாக ஆட்சி செய்து வந்தனர். பங்காளிச் சொத்தை உறவாடிக் பிடுங்கிக் கொள்ள துரியோதனன் விரும்பினான். மாமன் சகுனியின் உபாயம் கேட்டு அவர்களைத் தங்கள் நாட்டுக்கு வரவைத்து தருமனை சூதுக்கு அழைத்தான். விதி மதியைக் கெடுத்தது. தருமன் தன் தம்பியர் உட்பட அனைவரையும சூதில தோற்றான். பின் துரியோதனன் பாண்டவரை அடிமைகளாக்கி, அவர்தம் மனைவி பாஞ்சாலியை

சபையில் துகில் உரித்து அவமானம் செய்தான். கண்ணன் துணையால் பாஞ்சாலியின் சேலைகள் வளர்ந்தது. துகிலுறிந்த துர்ச்சாதனன் சோர்ந்து போய் கீழே விழுந்தான். ஆத்திரமுற்ற பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகியோரை தருமன் தடுத்து, பெரியவர்கள் முடிவை ஏற்று பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசமும் ஓராண்டு அக்கியாத வாசமும் ஏற்று, காடுகளில் தங்கி வந்து மீண்டு தங்கள் பங்கு நாட்டை தரும் படி தூது அனுப்பினர் பாண்டவர். தரமறுத்த துரியோதனருடன் போரிட்டுப் பெற முடிவெடுத்தனர்.

முதல் நாள் போர் தொடங்கும் அன்று

பாண்டவர் சேனைகள் ஊமவும், குரு நாட்டவர் சேனைகளுடன் ஒரு புறமும் போருக்குத் தயாராக, போர்களத்தில் சந்திக்கும் சமயம். விஜயன் கண்ணனை இருபடைக்கு இடையில் அண்மையில் தேரைச் செலுத்தும் படி பார்த்த சாரதியான கண்ணனிடம் தெரிவித்தான். அவ்வாறே கண்ணனும் தேரை நிறுத்த, விஜயன் தன் எதிரே நிற்கும் துரியன் படை வீரர்களைப் பார்க்கின்றான். மனச்சலனம் அடைகிறான். இந்த நிலையில்.......

**திருதராட்டினன் விழைவு**

தன் புதல்வர்களுக்கும், பாண்டுவின் புதல்வர்கள் பாண்டவர்களுக்கும் நடக்கும் போர்க் கள காட்சிகைளை கண் இல்லாத திருதராட்டினன் அமைச்சன் சஞ்சயனை அழைத்து போர்க்களத்தின் உயரமான பகுதியில் அமர்ந்து செய்தியை

உடனுக்குடன் தனக்குத் தெரிவிக்க வேண்டினான். வியாசர் சஞ்சயனுக்கு ஞானக் கண்ணைத் தர சஞ்சயன் போர்க்கள நிகழ்வுகளை தற்போது தொலைக் காட்சியிலும் வானொலியிலும் காணும், கேட்கும் நேரடி ஒலிபரப்பு வர்ணனை போல் சஞ்சயன் திருராட்டினனுக்கு தான் காணும் விஜயன் தமது படைக்கு அர்ச்சுனன் தேரில் மனச் சலனத்துடன் இருப்பதாகத் தெரிவிக்கின்றான். அடுத்து நிகழ்வுகளையும் தொடர்ந்து உள்ளது உள்ளபடி சஞ்சயன் திருதராட்டினனுக்கு தெரிவித்துக் கொண்டேயிருக்கின்றான்.

தன் எதிரே, உறவு முறையில், தத்தை மாரை மாமன் மார், பிள்ளைகள், பேரன்மார் உடன் பிறப்பாளர்களான சகோதரர்கள் தோழர்கள், மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய குருமாரையும் கலங்கும் கண்களால் காண்டீபன் காண்கின்றான். துயரத்தால் மனம் துவண்டு இவர்களைக் கொல்ல நான் விரும்பவில்லை. அதனால் வரும் பாவத்தை விட அவர்களால் கொல்லப்படுவதே மேல் என தன் வில்லையும், அம்புகளையும் தரையில் வீசி எறிந்தான். நான் எனது என்ற அகங்கார மாயையில் மயங்கி உறவு என்ற பாசத்தால் மதிமயங்கி விஜயனை அவனின் மாயத்திரை அகன்று மீண்டும் வில் எடுத்துப் போரிட தந்திடவும் அதன் மூலம் இந்த உலக மக்கள் உண்மை ஞானத்தையும், உயர்ந்த கருமங்கள் புரிந்து வாழ்க்யையில் வளம் பெறவும், முடிவில் முக்தி பெறவும் வேண்டி அனைத்து உயிர் உயிரல்லாத வைக்கு கார்மேக

வண்ணன் கண்ணன் உரைத்த வீர தெய்வீக உரையே கீதா உபதேசம் எனப்படுகின்றது. இது பதினெட்டு அத்தியாயங்களில் தொகுக்கப்பட்டுள்ளது.



## கீதையின் கீர்த்தி

உறவினர்களைத் கண்டு போர் செய்யத் தயங்கும் அர்ச்சுனனைத் தூண்டிப் போர் மேற்கொள்ளுமாறு செய்ய கண்ணன் போரங்களையும் அவற்றிக்குத் துணையாகப் பிற புகழறங்களையும் தேர்ந்து கூறுகின்றான். விஜயனுக்கு இவ்வளவு உபதேசங்கள் இன்றி ஒரே வார்த்தையில் "போர் செய்வாய் அர்ச்சுனா" என்று சொல்லிருந்தாலே போதும். போர் கொடுத்திருப்பான். கண்ணனின் நோக்கம் அது மட்டுமல்ல. இந்த உலக மக்களும் தங்கள் கடமைகள், இறைவழிபாடு முறைகள், முக்திக்கு வழி இவைகளை உணர்ந்து தம் வாழ்வில் உய்வு பெற வேண்டும் என்ற கருணையால் உலக மக்களின் உய்வுக்காகவே என்று உணர வேண்டும். எத்தனையோ வாழ்க்கை வழிகாட்டி நூல்கள் பல வெளி வந்திருப்பினும் ஐந்தாம் வேதம் என்னும் மகாபாரதத்தின் பகுதியாக விளங்கும் பகவத் கீதை அந்த பரந்தாமனே வழங்கிய நூல். ஒளிரும் விளக்குகளுக் கிடையே உள்ள சூரியனாகத் திகழ்ந்து அறியாமையை அகற்றும் கற்பகத்தருவாக விளங்கிவருகின்றது. துரியோதனாதியர் என்னும் ஆணவம் கொண்ட மண்ணாசைக்காரர்களை அறத்தின் சக்தி கொண்டு பார்த்தனின் பார்த்தசாரதியாய் பக்கத்தில் இருந்து தீமையை அழிக்கத் தூண்டும் சமுதாய பற்றுள்ள சான்றோனாக நின்று பூபாரம் தீர்க்க வந்த பூபாலனாக கண்ணன் திகழ்கின்றான்.

புதிய சமுதாயத்தை பொலிவுடன் உருவாக்க விழையும் இளைஞர்களுக்குக் கீதை தரும் சிந்தனைத் துளிகள் உற்ற தோர் தோழனாகவும், துணை நிற்கும் கருவியாகவும், ஏற்ற ஆசானகாவும், ஆபத்தில் உதவும் தெய்வமாகவும் அமையும் என்பதில் ஐயமில்லை.

அறம் காக்கப்பட, அல்லறம் அழிய, நல்லறம் ஓங்க தூய மனச்சாட்சிப் படி கடமையாற்ற கீதையின் பாதை, இன்றைய சமுதாயத்துக்குத் தேவை என்பது தெளிவு, வன்முறையும், குண்டுக்கலாச்சாரமும் வளர்ந்து வரும் இந்த காலகட்டத்தில் கீதையின் பாதை சமுதாய மாற்றத்திற்கு நல்ல வழிகாட்டியாகத்திகழும் என்பதற்கு மாற்றுக் கருத்து இருக்க முடியாது.

உறவு, நட்பு என்று கருதி தீமைகளை கண்டிக்காமல் வாழவிட்டால் தீமைகள் பெருக வாய்ப்பு ஏற்படும். தீய சக்திகள் தொடக்கத்திலேயே கிள்ளி எறியப்படவேண்டும். குற்றவாளிகள் எவராய் இருந்தாலும் அவர்கள் அறத்திற்காக கண்டிக்க அல்லது தண்டிக்கப் படவேண்டியவர்களே என்பது கீதை காட்டும் பாதையாகும்.

"கடமையைச் செய்யுங்கள்
பயனை எதிர்ப்பார்க்காதீர்கள்"

இதுவே கீதையின் முடிவாகும்.

# 10. கீதைச் சுருக்கம்

## முதல் அத்தியாயம் (1 முதல் 47 பாடல்கள்)

### அர்ச்சுனனின் அகத்தவிப்பு (அர்ச்சுனன் விஷாத யோகம்)

குருட்சேத்திரப் போரில் நடக்கும் போர் நிகழ்வுகளை கண் இல்லாத திருதராட்டினன் அறிய விழைந்து அமைச்சன் சஞ்சயனை போர்க் களத்துக் கருகில் உயரமான இடத்தில் அமரவைத்துக் கொண்டு "தன் பக்கத்து வீரர்களும், பாண்டவர் வீரர்களும் எந்த நிலையில் உள்ளார்கள்" என்று கேட்கிறான். அதற்கு சஞ்சயன் கிருபன் தலைமையில் தம் படை வீரர்கள் முன்னணியில் யார் யார் எல்லாம் நிற்கின்றார்கள் என்று பட்டியலிட்டும், அது போல பாண்டவர் படைக்கு திருபதன் தலைமையில் நிற்கும் வீரர் தம் பட்டியலையும் தெரிவிக்கின்றான். யார் யார் எல்லாம் தம் சங்குகள் எல்லாம் முழங்கின என்பதைப்பட்டியலிடுகிறான். பின்பு அர்ச்சுனன் கண்ணனிடம் தம் தேரை இருதிறத்து படைகளுக்கு மத்தியில் முன்னிலையில் அனைவரையும் காணும் படி நிறுத்து என்று கேட்டுக் கொள்ள கண்ணனும் அதன்படி செய்து, "காண்டீபா! எதிரே நிற்கும் கௌரவரைப்பார்" என்று தெரிவிக்கின்றான். பார்த்தனும் எதிரே நிற்கும் இருபடைகளையும் நோக்குகிறான். அங்கே உறவால் தந்தைமாரை, மாமன்மாரை, பிள்ளைகளை, பேரன்மாரை, உடன்

பிறந்த சகோதரர்களை, தோழர்களை மற்றுமுள்ள மதிப்பிற்குரிய குருமார்களை கண்டு கண் கலங்குகின்றான். துயரால் துவண்டு "கண்ணா! என் எதிரே போரிட இருக்கும் உறவினரைக் கண்டு என் நெஞ்சு குழம்புகின்றது. மூன்று உலகும் எனக்குக்கிடைப்பதானாலும் கொடுமையான நானே கொல்லப்படுவதானாலும் இவர்களைக் கொல்ல என்னால் ஆகாது. சுற்றத்தைக் கொன்றா, சுகத்தை அடைவது? வெறியூட்டும் பாவத்திலிருந்து ஏன் விலகி இருக்கக் கூடாது? அல்லறத்தின் ஆட்சியின் இல்லறப் பெண்களின் கற்பு இல்லாமல் போகுமே, ஜாதிகளுக்கான அறங்களும், குலங்களுக்கான நெறிகளும் அழிக்கப்படுமே. அரசு இன்பத்தை அடைய அன்பான உறவை அழிக்கக் காரணமாவதா! களத்தில் ஆயுதம் ஏதும் இன்றி நிற்கும் என்னை கொடும்படை ஏந்திய திருதராட்டினன் பிள்ளைகள் கொல்லட்டும். அதுவே ஒரு பெருமை என்ற எமது உணர்வு வெல்வதா" என்று சொல்லி நெஞ்சம் உடைந்த உள்ளத்துடன் ஏந்திய வில்லையும் அம்பையும் எறிந்து நிலை குலைந்து தேர்தட்டின் மீது அமர்ந்தான்.

## இரண்டாம் அத்தியாயம் (1 முதல் 72 பிரிவுகள்)

### 11. நல்லொழுக்க நெறி (சாங்கிய யோகம்)

காண்டீபத்தைக் கீழே போட்டு கலங்கிய குழப்ப நிலையில் இருந்த அர்ச்சுனனிடம் கண்ணன்"

"பார்த்திபா! வீரர்கள் விலக்கப்பட வேண்டியதும், பழிக்குப் பாதை அமைப்பதுமான இந்த மனச்சோர்வு உன்னிடம் எப்படி வந்தது? கோழைத் தனத்தைக் கைவிடு. தாழும் தளர்வை விடு. உடனே வில்லை எடு. அம்பைப் பகைவர் மீது விடு" என்று சொல்ல, உடனே விஜயன் "கண்ணா! எதிரே நிற்கும் மூத்தோரான பெருமைக்குரிய பீஷ்மனையும், ஆசான் துரோணரையும் கொல்லும்படி நான் அம்பை எப்படித் தொடுப்பேன். இதனால் பெருமை எப்படி வரும். இதனால் மகிழ்ச்சி எப்படி கிடைக்கும். இவர்களை நாம் கொல்லலாம். அல்லது இவர்கள் நம்மைக் கொல்லலாம். இவற்றால் நமக்கு மேன்மை தருவது எது? என்று எனக்குப் புரிய வில்லை. இரக்கத்தைவிட முடியாமல், அறம் எது என்று அறியாமல் திகைக்கின்றேன்".

"நமக்கு எது நன்மை தருமோ, அதைத் தேர்வு செய்து நீயே எனக்குத் தெரிவிப்பாயாக. நீயே எனக்கு வழிகாட்டி, உனக்கே அடைக்கலமானேன். அறிவுரையால் ஆணையிடுக" என்று பரிவுடன் கேட்டான் பார்த்திபன்.

தன்னைச் சரணடைந்த பார்த்தனின் பக்குவப் படாதப் பேச்சைக் கேட்டு புன்முருவல் பூத்தார், பரந்தாமன். அவன் மயக்கத்தை தெளிவிக்க திரு உளம் கொண்டார். "பார்த்திபா! நீ தகுதியில்லாதவர்களுக்காக வருந்துகிறாய். ஞானியர் அறங்களை நாடிப் பேசுகிறாய். நடைமுறையை நன்கு கற்றவர்கள்

இருப்போர்க்காகவோ, இறந்தோர்க்காகவோ வருத்தப் படமாட்டார்கள். இறந்தோம் என்பது எவர்க்கும் இல்லை. உடலோடு கலந்த உயிர் என்னும் ஆத்மா மழலை, இளமை, முதுமை என வளர்தலும், பின் அடுத்த பிறவியில் மற்ற உடலோடும் இணைகிறது. ஆத்மா என்றும் அழிவதில்லை. உடல் மட்டுமே மண்ணில், நெருப்பில் அழிகின்றது. குளிரும் வெப்பமும் இன்ப, துன்பங்களைத் தோன்றச் செய்கின்றன. தோன்றும் அணு நின்று நிலை பெறாதவை. இன்பமும் துன்பமும் தோன்றுவது இயற்கை. இவ்வுலகம் நிலையற்றதற்குக் காரணமான பரமாத்மா என்றும் அழியாதது. அழிக்க முடியாதது. பரமாத்மாவிலிருந்த ஒரு சிரு பிரிவுதான் உயிர். உயிர் அழிவற்றது. உடல் மட்டுமே அழிவதற்குரியது. உயிர் பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. ஆன்ம உயிருக்கு எந்நாளும் அழிவு தர முடியாது. எவருடைய உயிர்க்காவும் இரக்கத்தால் வருந்தம் உனக்குத் தேவை இல்லை. அறவழிப் போரை விட க்ஷத்திரியனுக்கு வேறொன்றும் சிறப்பில்லை. அதனால் உனக்கு சிறப்பின்றி இகழில்லை. போர் செய்து இறந்தால் வீடுபேறு. இருந்தால் ஆட்சிப் பேறு. இன்ப துன்பங்களை இணையாகவும், வருவதும் போவதும் வாழ்வெனவும் வெற்றியும், தோல்வியும் சமமாகவும் நினைப்பாய் எழுவாய், போரிடுவாய்" என்றான் கண்ணன். மேலும் கண்ணன் காண்டீபனிடம், "பார்த்திபா, இது காரும் நீதி நெறி பற்றி அறியச்

செய்தேன். இனி உனக்கு செயல் முறை பற்றி சிறிது கூறுவேன். கேள்! இன்பத்திலும், செல்வத்திலும் பேராசை கொண்டவர்களுக்கு உறுதியான நெஞ்சம் உருவாவதில்லை. அலையான நெஞ்சத்தை அடையு பொருளைப் போற்றாதே! அதைத் தேடி அலையாதே! உடலை வளர்க்காதே! உள்ளத்தை உயர்த்து. நினக்குத் தரப்பட் கடமையைச் செய்! விளைவை எதிர் நோக்காதே! வெற்றியும் தோல்வியும் சமம் எனக் கருதி பற்றை விட்டு காரியம் ஆற்று. இந்த நடுநிலைச் செயலையே 'செயல் நெறி' (யோகம்) என்று குறிப்பிடப் படுகின்றது 'சமச்சிந்தனையிடம் சரணடைந்து நடுநிலை நின்று வினைப் பயனிலிருந்து விடுதலை பெறுவாய். மயக்க அழுக்கை உன் மதியினால் விலக்கு. மயங்கும் அறிவு அமைதி நெறியில் உறுதிபெறட்டும். அப்பொழுது நீ செயல் முறை என்னும் யோக நிலையடைவாய் என்றான் கண்ணன். இதைக் கேட்ட அர்ஜுனன். "ஆழ்ந்த ஞானம் பெற்றவனின் இலக்கணம் என்ன? தேர்ந்த அறிஞனின் நடை முறை யாது?" என்று கண்ணனைக் கேட்டனன்.

அதற்கு கிருஷ்ணன் "அடர்முடி அழகா! அர்ச்சுனா "ஆசையை நீக்கி மகிழ்ச்சியுடன் நிறைவாக வாழ்வான். அவன் துன்பத்தில் துவளாமலும், இன்பத்தில் எழுச்சிக் கொள்ள மாட்டான். அவனுக்கு அச்சமும், சீற்றமும் இருக்காது. எதிலும் பற்றுவைக்க மாட்டான் ஆமை பொறிகளை அடக்கிக் கொள்வது போல் பொறிகளுக்கும், புலன்களுக்கும் பலியாகாமல்

இருப்பான். பரந்த கடலுக்குள் விழும் ஆறுகள் கடலுடன் சேர்ந்து அடங்குவது போல், வந்து சேர்ந்த ஆசைகளை தனக்குள் அடக்கி ஒடுங்க வைப்பவனே ஞானியாவான். அவனுக்கு ஆசை. அணவம் தன்னலம் இன்றி இருப்பான. இது ஆன்மாவின் நிறை நிலை எனப்படும். இது நிலையை தன் இறுதிக் காலததுலாவது எவன பெறறாலும அவன முகதி நிலை பெறுகிறான். இதுவே ஆன்ம ஞானியின் அடையாளங்கள் என்பதை தெளிவாய்" என்றான் கண்ணன்.



# மூன்றாம் அத்தியாயம் (1 முதல் 48 பாடல்கள்)

## 12. தன் வினை மாற்றம் (கர்ம யோகம்)

விசயன் கண்ணனிடம் ஒரு சந்தேகத்தை எழுப்பி விடைகாண விரும்புகின்றான். செயலைவிட ஞானமே சிறந்ததென்று சொல்லி கொடிய செயலான போரில் ஈடுபடும் படி வலியுறுத்துவதற்குக் காரணம் தெரிந்து கொள்ளவும், “குழப்பம் உள்ள மனதினரை உயர்த்தும் வழியை உரைப்பாய்” எனக்கேட்கின்றான்.

அதற்குக் கண்ணன் அளித்த விடையின் சொல் மாலையை சுருக்கமாக தொகுத்துத் தரப்படடுள்ளது. இறையாகிய பரம்பொருளை நாடுவதற்கு மூன்று வழிகளை பகவான் உணர்த்துகின்றார். அவை ஞானவழி (ஞானமார்கம்) கர்ம வழி, பக்தி வழி. இங்கு கர்ம மார்கம் என்ன என்பதை முதலில் விளக்கப்பட்டுள்ளது. வினை என்பது செயல். ஒவ்வொருவனும் பிறந்த நாள் முதல் இறக்கும் வரை ஏதேனும் ஒரு செயலை செய்து கொண்டு தான் இருக்கின்றான். எந்த வினையைச் செய்கின்றான? எப்படி செய்தால் அந்த செயல் தூய்மை பெறும்? என்பதை ஒவ்வொருவருக்கும் உணர்த்த முனைகின்றான் பகவான்.

ஆசைகளை அடக்கி, பற்றில்லாமல், நன்னெறிப் பாதையில் நின்று இறுதி வரை தன் கடமை என்னும் பணியினை செய்வது தான் கர்ம யோகம் எனப்படும். சாதாரண வேலைக்கு புண்ணிய, பாவம் என்னும்

தளைகளுண்டு. ஆனால் பயனில் ஆசைவைக்காமல செய்யப் படும். கருமத்துக்குத் தளைகள் கிடையா.

இப்பொழுது நமக்கு ஒரு ஐயம் கூட எழலாம். ஒரு வேலையைத் துவங்கும் போது அதனால் என்ன பயன் கிடைக்கும் என்ற எதிர் பார்ப்பு இன்றி துவங்குவதில்லை. உதாரணமாக ஒரு வியாபாரம் துவங்க நினைத்தால் எந்த வியாபாரம் செய்தால் நல்ல இலாபம் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பு இல்லாமல் செய்ய முடியுமா? ஆனால் நம்மால் அன்றாட வாழ்வில் பல காரியங்கள் பயன் நோக்காது செய்யப் பட்டிருப்பதை ஆய்ந்து பார்த்தால் அறியலாம். உதாரணமாக ஒரு பிச்சைக் காரன் பசியால் வீட்டுக்கு வந்தால் உணவு அளிக்கின்றோம். ஒரு வயோதிகர் கண்தெரியாமல் நடந்து செல்பவருக்கு உதவுகிறோம். இந்த பிச்சைக்காரன் நமக்கு வருங்காலத்தில் உணவளிப் பான் என்றோ, நாம் குருடாகும் போது இந்த கண்ணில்லாதவன் உதவுவான் என்றோ யாரும் எதிர்ப்பார்த்து செய்ய வில்லை என்பதை உணரலாம்.

அடுத்து செய்யும் பணியின் பலனை பரமருக்கு அர்ப்பணித்து விட்டால் பயன் நல்லதாகவே அமையும் அதனால் உன் பணிக்கு பாப, புண்ணியம் இல்லாமல் போகின்றது. கசாப்புக்காரனும் தன்கொலை செயலை இறைவனிடம் விட்டுவிடுவதால் அதன் பாபம் அவனைத் தாக்குவதில்லை. மனச்சாட்சிப்படி தூயப் பணிகளையோ, கடமைகளைச் செய்பவன் கண்டிப்பாய்

இறுதியில் சமூகத்தால் பாராட்டப்படுவதும், அப்படி செய்யாது, ஐம்புலம் போக்குப்படி, நான், எனது என்று கருதி, ஆசையால் உந்தப்பட்டு தன் வாழ்க்கையையே இருளாக்கிக் கொள்பவர்களுக்காவே கண்ணன் அர்ச்சுனனுக்கு தன் மேல் பாரத்தைப் போட்டு, சுற்றம் என்ற மாயையிலிருந்து விலகி, ஒரு வீரனுக்கு உரிய போர்புரியும் கடமையை உணர்த்துகின்றான். இதைப்படிக்கும் நமக்கும் இந்த கீதைச் சிந்தனைகள் ஒரு தெளிவை உண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. கர்ம யோகி தன்னலம் கொள்ளாது பொது நலப் பணிகளில் ஈடுபடுவதும் கர்மயோகம் என்படும். கர்மயோகிக்கு ஈசன் எங்கும் உள்ளான். எதையும் காண்கின்றான். அவனே எல்லா செயலுக்கும் முதலானவன் என்று தெளிவு கொள்வதால் அவன் தனக்கு அன்றாடம் வரும் பிரச்சனைகளிலிருந்துத் தப்பித்துக், கொள்கின்றான். இன்ப துன்பம் சமமாக மாற்றப்பெருகின்றது. இந்த அத்தியாயத்தில் உலக நன்மைக் கருதி செய்யப்படும் வேள்வி குறித்தும் குறிப்பிடப் பட்டுள்ளது.

உயிர்களைப் படைத்த போது பிரம்மா, வேள்வியோடு மனிதனையும் படைத்து, இந்த வேள்வி செய்து அதில் பெறும் ஆவுதிகளைத் தந்து, மிஞ்சியதை தான் உண்டால், தேவர்கள் மகிழ்ந்து வேண்டிய நன்மைகள் தருவார்கள் என்று குறிப்பிடுகின்றார். அப்படி செய்யாத கருமயோகி பலன் பெற்று ஏமாற்றும் திருடன் என்று குறிப்பிடுகின்றார் அவன் ஒரு குற்றவாளியும் ஆவான்.

உணவிலிருந்து உயிர்கள் தோன்றும். உணவோ மழையில் பிறக்கும். மழையோ வேள்வியால் விளைவது, வேள்வியோ செயலால் உருவாவது. செயலோ மறையின் மலர்ச்சி, மறையோ இறைவன் படைப்பு, எனவே எங்கும் நிறைந்த மறையோ வேள்வியால் நிலைபெற்றது. எவன் இந்த சுழற்சி வட்டத்தை உணர்ந்து செயல் படுவோன் மேன்மை யடைகிறான்.

"ஓய்வின்றி உயர்ப்பணி ஆற்றிவருபவன், வாழ்வில் உயர்வு பெறுவதும், அவர்களைப் பார்த்து மற்ற எவரும் அதைப்பின் பற்றி தம் கடைமைகளைத் தூய்மையாய் நடத்தி வருவதால் தான் இந்த உலகம் நிலைத்து நிற்கின்றது என்பதைத் தெளிவாய்" என்று பரந்தாமன் அர்ச்சுனனுக்கு தெளிவு செய்தான். நமக்கும் இதுவே தெளிவு தருமல்லவா.

## நான்காம் அத்தியாயம்

### 13. ஞான கர்ம சன்னியாச யோகம்

கண்ணன காண்டிபனிடம் ஞானகர்ம வழி முறைகளைப் பற்றி சொல்லிக் கொண்டிருக்கையில் இவையனைத்தும் ஏற்கனவே என்னால் சூரிய பகவானுக்கும், அவன் தன் மகன் மனுவிற்கும் அவன் தன்புதல்வன் இச்சாவாகுக்கும் தந்துள்ளதாகத் தெரிவித்தான்.

பார்த்திபனுக்கு ஒரு ஐயம் எழுந்து "கண்ணாநீ பிறப்பதற்கு முன்பு உயிர்களின் பிறப்பிற்குக்காரணமான

சூரியன் தோன்றியவன். நீ எப்படி சூரியனுக்குச் செல்லியிருக்க முடியும்" என்றான். கண்ணன் நகைத்து, "விசயா உன் பிறப்புக்கும் எனக்கும் மாற்றம் என்றுண்டு அவற்றை அறிய வல்லவன் நான். நீ அதை அறியமாட்டாய். நான் பிறப்பற்றவன்" எப்போதெல்லாம் அறம் அழிகிறதோ அப்போதெல்லாம் நான் பிறந்து நல்லோரை ஆக்கவும், அல்லோரை அழிக்கவும் பிறப்பாய் மலரச் செய்து கொள்கிறேன். யார் எப்படி என்னனை வழிபடுகின்றார்களோ நான் அந்த நிலையில் அருள் செய்கின்றேன். வினைகள் என்னைத் தொடர்வதில்லை என்னைத் துதிப்போர் மூன்று வழிகளில் என்னை அடைய முயல்கின்றனர்.

வேள்விகள் செய்து, ஒரு மனத்தினராய் நின்று, அற்றது பற்றெனை அடங்கியவனாய் அனைத்தையும் எனக்கே காணிக்கை யாக்கி, ஆசையை அகற்றி செய்யும் முனிவர்கள் ஞானத்தை அடைந்து, வேண்டியது பெற்று நிறைவு பெறுகிறார்கள். சிலர் சிறு தெய்வங்களுக்கு வேள்வி நடத்தி சிறுபயன் பெருகின்றார்கள். ஞானத்தை வேண்டுவோர் அழியாப் பொருளான என்னை அறிந்து இறுதியில் முக்த்தி நிலை அடைந்து பிறப்பை அறுத்துக் கொள்கின்றார்கள். அழிவில்லாப் பொருள் எது என்று தெளிகின்றார்கள்.

ஒரு சிலர் மன அடக்கங் கொண்டு, நோன்பின் உறுதியுடன் மறைகளைக் கற்பதும், கற்பிப்பதுமான பணியினை வேள்வியாகக் கொண்டுள்ளார்கள்.

ஒரு சிலர் உள்ளிருக்கும் மூச்சுக் காற்றில் வெளியேற்றும் மூச்சுக்காற்றையும், வெளியேற்றுப் மூச்சுக் காற்றில் உள் இழுக்கும் மூச்சுக் காற்றையும் வேள்வியாக்குவர் மற்றும் சிலர் மூச்சுக் காற்று வெளியே செல்வதையும், வெளியே வருவதைத் தடுத்து நிறுத்தி உயிர் உரைந்து போகாத (பிராணா யாமம்) முயற்சியைப் பெரிதாக்கிக் கொள்வர். இதுவும் இறைநிலை அறியும் ஞானவழிகளாகும். பயன் கருதாது செய்யும் எல்லாப் பணிக்கும் எனக்கு அர்ப்பணம் செய்து செய்யும் போது பணிவான, அன்பானத் தொண்டு பொருள் செலவில் செய்யும் வேள்வியை உயர்த்துகின்றது. இந்த மாண்பான ஞானம் மலர்ந்தால் மயக்கம் விட்டு ஓடும். வளரும் நெருப்பு விறகை நெருப்பாக்கிச் சாம்பலாக்குவது போல் ஞானத் தீ எல்லா செயல்களையும் எரித்து சாம்பலாக்கிவிடும்.

**பக்தியோகம்**

தான் காணும் எல்லாப் பொருட்களிலும் தாம் விரும்பும் கடவுள் வடிவங்களாகக் கொண்டு, வழிபடுவதும் தனக்கு உவந்தவைகளை நிவேதனம் செய்தும் இறைவனைப் புகழ்ந்துப் பாடியும் ஆடியும் அவன் அடியார்களுக்கு, தொண்டு செய்வதில் மகிழ்ச்சி கொள்வதும் எல்லோரையும், எல்லாவற்றையும் இறை வடிவங்களாகக் கருதுவதும் ஒரு பக்தன் இயல்பாகும். இந்த விதமாகவும் இறைவன் அருளைப் பெற முடியும் என்கிறார் பகவான். கண்ணப்பன் செய்த ஆறு நாள்

அன்பு, காரைக் காலம்மையார், சூடிக் கொடுத்த சுடர்கொடி ஆண்டாள், மணிவாசகப் பெருமான், நாயன் மார்கள், ஆழ்வார்கள் பக்திமார்க்கத்தில் வந்தவர்கள் அன்றோ.

## ஐந்தாம் அத்தியாயம் (1 முதல் 29 பாடல்கள்)

### உயர்வு

### 14. துறவு நிலை (சந்யாச யோகம்)

காண்டீபன் கண்ணனிடம், "கண்ணா" "செயலைத் துறக்கும்படி முதலிலும், அடுத்து, செயலின் சிறப்பினை இரண்டாவதும் கூறினாய். இது குழப்பமாக உள்ளது. திட்டவட்டமாக நான் செய்ய வேண்டியதை எது என்று தெரிவிப்பாய்" என்று கேட்டான். அதற்குக் கண்ணன் துறவும், கர்மமும் இரண்டும் உயர்ந்ததே என்றாலும் கர்மமே துறவை விட மேம்பட்டது"

துறவு நிலை என்பது விருப்பு, வெறுப்பை நீக்கி இன்ப துன்பங்களைச் சமமாக ஏற்றுக் கொள்ளல். ஆன்மிகமும் செய்கை என்ற இரண்டையுமே ஒன்றெனக்கருதி எச்செயல்களைச் செய்தாலும் அறத்தினையும் பயனையும் எனக்கு அர்பணித்து பற்றற்று நீர் மேல் தாமரை போல் எவன் காரிய மாற்றுகிறானோ அவனே நீவ முக்தறுக்கவும், எனக்கு நெருக்க மானவனாகவும் ஆகிறான். தோற்றத்திலும், ஆடைகளிலும் துறந்தவன் போல் காணப்படுபவர்கள்

உண்மையான துறவிகள் அல்ல. அவர்கள் ஆசையால் உந்தப்பட்டு, அழிவையே தேடிக்கொள்கிறார்கள். பொறியுணர்வை ஆமை போல் அடக்கி வாழ்ந்தும் வாழாதவர்களாய், இருந்தும் இல்லாதவர்களாய் பயன் கருதாது பணியாற்றி தங்கள் செயலின் பயனையும் எனக்கே அற்பணித்து விடுவதால் அவர்கயைும் நான் ஏற்கிறேன். இதுவே சன்யாச யோகம் என்றான் கண்ணன்.

## ஆறாம் அத்தியாயம் (1 முதல் 17 பாடல்கள்)

### 15. மனப்பயிற்சி நெறி (தியான யோகம்)

இலாப நோக்கின்றி செய்யத் தக்க காரியங்களை செவ்வனே செய்பவனே துறவியும், ஞான யோகியும் ஆவான். மேலும் மேலும் தவம் செய்வதால் மனத் தூய்மையும் அமைதியும் ஏற்படுகிறது. ஆத்மாவே ஒருவனுக்கு நண்பனாகவும், பகைவனாகவும் அமைகிறது. ஆத்மாவை உயர்ந்த நோக்கத்தின் பால் செலுத்த வேண்டும். சமநிலையில் தன்னை நிறுத்திக் கொண்டு வாழ்பவன் ஜீவாத்மாவின் வடிவில் வாழும் ஒரு பரமாத்மாவாகும். மனதையும் ஐம்புலன்களையும் அடக்கி மண்ணுக்கும் பொன்னுக்கும் வேறுபாடு காணாதவன் தலைசிறந்த யோகியாவான்.

அடுத்து தவம் செய்ய வேண்டிய வழிமுறைகளையும் கண்ணன் விளக்கிக் கூறுகின்றான். சுத்தமான இடத்தில் நிலையான ஆசனம் அமைத்துக் கொண்டு அதன் மீது தர்ப்பைப் புல்லை பரப்பி அதன் மீது மான் தோலை விரிந்து அதன் மீது தவம் செய்வோன்

அமரவேண்டும். மனதையும் உள்ளத்தையும் ஒருமைப்படுத்தி, மனத்தூய்மை யடையும்படி யோகம் செய்யப் பயில வேண்டும். அப்போது உடம்பையும் தலையையும், கழுத்தையும் நேராக, அசையாது நிலையாகவைத்து, கண்கள் இரண்டும் புருவ மத்தியாகிய மூக்கின் மேற்பகுதியை நோக்கி இருக்க வேண்டும். பிரம்மச்சர்யத்தைக் கடைப்பிடித்து மனதை என்னிடம் செலுத்தி என்னையே பற்றுக் கோடாகக் கொண்டு யோகம் செய்ய வேண்டும். அப்போது மிகச் சிறந்த சுகமான தெய்வீகப் பேரின்பத்தைக் காண்பான். யோகி எப்போதும் அளவான உணவு, உறக்கம் உடையவனாக இருக்க வேண்டும். உடலில் உயிராகத் தங்கியுள்ள ஆத்மாவை பரமாத்வாக உணர்ந்து பேரானந்த நிலையில் தன்னை யழித்துக் கொள்பவனே தவத்தின் பேற்றினை அடைந்தவனாவான். அவன் எந்த நேரமும் விழிப்புடனும், துன்பத்திலும் இன்பம் காண்பவனாகிறான். அவன் அன்பால் ஆருயிர்களை தம் உயிர் போல கருதி அனைவராலும் நேசிக்கப் படக் கூடியவனாகத் திகழ்வான். அத்தகைய தவ ஆற்றலைப் பெற்றவன் என்னை முழுமையாக அடையாளம் கண்டு என் நிலைக்கு உயர்வு பெறுகிறான் என்றான் கண்ணன்.

விஜயனுக்கு ஒரு சந்தேகம் வந்தது. தவத்தை முழுமையாக செய்ய இயலாதவனுக்கு எந்த பயனும் இல்லையா என்று கேட்கிறான். உடனே கண்ணன், "காண்டீபா முழுமையாக தவம் முடித்தவன் என்னை வந்தடைகிறான்! முழுவதும் முடிக்காதவன் அவனவன்

தவ முயற்சிக் கேற்ப அடுத்த பிறவியில் ஒரு உயர்ந்த குடும்பத்தில் பிறந்து தம் தவ வலிவைப் பெருக்கிக் கொள்கிறான். பல பிறவிகளுக்குப் பின் முயன்று என்னை வந்து அடைகிறான்", என்று தியானம் செய்வதற்கான வழிகளையும், அதன் பயனையும் தெரிவிக்கின்றான். விஜயனும் தெளிவு பெறுகின்றான். நமக்கும் அது பயனளிக்கும் என நம்புவோம்.

## ஏழாம் அத்தியாயம் (1 முதல் 28 பாடல்கள்)

### 16. அறநெறி விளக்கம்(ஞான விஞ்ஞான யோகம்)

மனிதனை விலங்கினத்திலிருந்து வேறுபடுத்து வது அறிவு. இந்த உலகில் அழிவுறுவது எது? அழிவே இல்லாதது எது என்பதை உய்த்து அறிந்து உணர்ந்து கொள்வதை ஞானம் என்கின்றோம். அறிவினால் நீ உணர்வது ஆன்மீக ஞானம். இவற்றை ஒருவன் உணர்ந்தால் மற்ற எல்லாமே உணர்த்தப்படும் என்பதை உணர்வாய்.

பல்லாயிரம் மனிதர்கள் என்னைக் காண முயற்சி செய்கின்றார்கள். அதில் ஓரிருவர் தான் என்னை அறிகின்றார்கள். எண் கணங்காளான பஞ்சபூதங்கள் மனம், அறிவு, அகங்காரமாக நான் தெரிந்துள்ளேன். அனைத்தும் நானே. என்னைவிட மிக உயர்ந்தது வேறில்லை. இதை உணர்ந்த ஞானிகள் என்னை சரணடைகிறார்கள். எல்லாப் பொருள்களும், கோள்களும் நானே. எனக்கு எந்த வித ஆசையோ,

பற்றோ, பிறப்பு, இறப்போ இல்லை. ஆனால் நானே ஆசையை உண்டாக்கி மாயையில் வீழ்த்துகிறேன். என்னை சரணடையாதவன் மூடனே. தவம் செய்து புண்ணியத்தைப் பெற்றவன், பாபங்களிலிருந்து விடுபட்டு என்னை ஒருவனையே வணங்குகின்றான். மூன்று குணங்களாக இருப்பவனும் நானே, என்று என்னை அறிந்து என்னிடம் சரணடைந்து, போரைத் துவக்கு" என்றான் கண்ணன்.

## எட்டாம் அத்தியாயம் (1 முதல் 26 பாடல்கள்)

### 17. எங்கும் நிறை இறை (அக்ஷரப் பிரம்ம யோகம்)

பலவிதமான யோக நெறிகளைக் கேட்டுவந்த விஜயன் பரந்தாமனை நோக்கி, "கண்ணா! பலர் எனக்குப் புரியாதபடி, 'பிரம்மம்', அத்தியாமம், கர்மம், அதிபூதம், அதியக்ஞம், ஆத்மஞானம், பூதஞானம், தேவ ஞானம், யாக ஞானம் என்று பேசிக்கொள்வதின் பொருள் என்ன? இறுதிக் காலத்தில் உன்திருவடியை அடைய வழி என்ன?" என்று கேட்டான்.

அதற்குக் கண்ணன், "என்றும் அழிவில்லாத பரம் பொருளே பிரம்மம். அந்தப் பிரம்மத்தைக் காணும் நிலையே அத்தியாமம். இதுவே ஆத்ம ஞானமாகும். இயங்கும் பொருள் இயங்காப் பொருள், உயிர் குணங்களை உருவாக்கும் இயற்கை 'கர்மம் என்று சொல்லப்படும். அழிவுபடும் இயற்கையே அதிபூதம் என்றும், பூதஞானம் உடலில் இயங்கும் உயிர்,

தத்துவமே அத்வைதமாகிய தேவ ஞானம். தம் ஆத்மாவில் பரமாத்மவைக் காண்பதே 'அதியக்ஞும்' என்னும் ஞானம் ஆகும்.

"இறுதிக் காலத்தில் உயிர் விடும் சமயம் எவன் யாரை நினைக்கிறானோ, அடுத்த பிறவியில் அவன் அதுவாகவே பிறப்பான். அது சமயம் என்னை நினைத்தால் பிறப்பை ஒழிக்கும் முக்தியை அடைகிறான். எல்லாமாக இருக்கும் என்னை யார் ஞானத்தால் உணர்கிறானோ அவனே பரம ஞானியாவான்.

உடலில் உள்ள ஒன்பது வாயில்களை மூடி உள்ளுக்குள் மனதைச் செலுத்தி 'ஓம்' என்ற பிரணவத்தைச் சொல்லிக் கொண்டு தியானம் செய்து என்னை வழிபடுபவன் இறுதியில் என்னையே அடைகிறான்.

பிரம்மனுக்கு ஆயிரம் யுகம் ஒரு பகல். ஆயிரம் யுகம் ஒரு இரவு. பிரம்மனுக்கு பகல் வரும் போது (அவ்யக்தம்) பொருள்கள் வெளிப்படும். இரவு வந்தால் மீண்டும் அந்த மறை உலகத்திற்கே சென்று விடும். இதையே பிறப்பு இறப்பு சுழற்சிக்கு உட்படுகிறது. இந்த சுழற்சிக்கு சரண் உற்றவர்க்கு பிறப்பு இறப்பு இல்லை என்பதைக் தெளிவாய். என்னையே நினைத்து தொடுப்பாய் அம்பை."

மேலும் சொன்னான் ஒரு தேவ இரகசியத்தைக் கண்ணன். ஒருவர் நெருப்பு, ஒளி, பகல், சுக்ரபட்சம், உத்தராண்யம் ஆகியவைகளில் உயிர் துறப்போர்க்கு பிறப்பு இல்லை. அதற்கு மாறான நேரத்தில் இறந்தால் மறுபிறவி உண்டு என்பதை அறிவாய்" என்று தெரிவித்தான். மேலும் உடம்பையே ஒளி வடிவாக்கி, பர ஒளியில் கலப்பது ஒரு வழி. இது வடலூர் அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமி வாழ்வில் நடந்தது. பூத உடலை ஒளித்திருநாளில் நீத்து, ஆன்மாவை பர ஒளியில் கலப்பது மற்றொரு வழி இதற்கு உதாரணம் திருமுருக கிருபானந்த வாரி சுவாமிகள் முடிவு. மண்ணில் பிறந்து விண்ணில தணிகையில் ஆவி துறந்தவர்.

## ஒன்பதாம் அத்தியாயம் (1 முதல் 41 பாடல்கள்)

## 18. மூலப்பொருளும் மறைபொருளும்

## இராஜ வித்யா ராஜ குஷ்ய யோகம்

### நன்மை தரும் ரகசியம்

இதுவரை அனைத்து யோகங்களையும் அறிந்து தெளிவுற்ற விசயனிடம் கண்ணன் ஒரு தேவ இரகசியத்தை வெளிப்படுத்துகிறான். ஒளி வடிவில் இல்லாதது போல் இருக்கும் பரம் பொருள் நானே. ஐந்து பூதங்களுக்கும், அனைத்து ஜீவராசிகளின் காற்று போல் எங்கும் வியாபித்துள்ளேன். ஆனால் எதிலும் அடங்காமல் இருக்கின்றேன். உலகத் தோற்றங்களுக்கு

முதலாகவும் முடிவாகவும் இருந்து இயக்குகிறேன். பிரளயகாலங்களில் எல்லா உயிர்களும் என்னுள் ஒடுங்குகின்றன. பின்பு அவைகளை மீண்டும் படைப்பவனும் நானே. எந்தக் கருமங்களும் என்னைக் கட்டுப்படுத்துவதில்லை. என் இயக்கத்தில் இந்த உலகம் சிறப்புடன் செயல்பட்டு வருகின்றது.

என்னை சாதாரண மனிதனாக நினைத்து என்னை அவமதித்து மூடத்தனமாக வாழுகின்றார்கள் சிலர். ராட்சஸ ஆஸுசி, மோகினி ஆகிய தன்மைகளைப் பெறுகிறார்கள். சில மதுரத்து மாக்கள் என்னை தன் ஞானத்தால் மூல முதல்வன் என்று அறிந்து ஒன்றிய மனதுடனும், பக்தியுடன் தொழுது எப்போதும் உபாசித்து வருகிறார்கள். சிலர் ஞான வேள்விகள் செய்தும், அத்வைதியாக நினைத்தும் பல்வேறு வடிவங்களாகவும், வெவ்வேறு பெயரிட்டும் வழிபடுகிறார்கள். வேள்வியும் வேள்விப் பொருள்களும் அதன் பயனும் நானே என்பதை உணர்வாயாக. உலகத்தைப் படைப் போனும், காப்போனும் அழிப்பானும் கதியாகவும், விதியாகவும், மதியாகவும், நிதியாகவும் நானே இருக்கின்றேன். அனைத்து உடல்களில் உள்ள உயிரும் நானே. தன்னை வழிபடுவோர் விண்ணுலக வாழ்வைப் பெறுகின்றனர். பின்னர் அவர்களே பயனைத் துய்த்து பின் பூமியில் பிறக்கின்றார்கள்.

மக்களில் தேவர்களை வழிபடுவோர் தேவர்களையே அடைகின்றனர். என்னை ஒரு இலையோ, பூவோ, பழத்தையோ, நீரையோ படைத்து பயபக்தியுடன் அளிப்பதை மனநிறைவோடு ஏற்றுக் கொண்டு மகிழ்கின்றேன். எனக்கு அர்ப்பணிக்கும் பொருளை ஏற்று அவனுக்கு முத்தியைத் தருகின்றேன். என் பக்தர்களிடம் நான் விரும்பி உரைகின்றேன் இழிபிறவியினர், பெண்களுக்கும், வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும், பிராமணருக்கும், க்ஷத்திரியர், இராஜரிஷிகள் ஆகியோருக்கும் பரகதி தருகின்றேன்.

இவைகளை அறிந்த நீ என்னை வழிபட்டு என் கட்டளையை ஏற்று, வில்லை எடு அம்பை விடு என்றான் கண்ணன்.

## பத்தாவது அத்தியாயம்

## 19. இறை நலம் விபூதி யோகம் (1 முதல் 42 பாடல்கள்)

கண்ணன் உரைகளை ஆழ்ந்து கேட்ட அர்ச்சுனனுக்கு இறைநலம் குறித்து சொல்ல விழைத்தான். "பார்த்திபா! கேள்வியறிவில் மகிழும் உனக்கு நின் நலம் கருதி இதைக் கூற விழைகிறேன். யான் தேவர்கள், மா முனிவர்களைத் தோற்றுவிப்பன் ஆதலால் அவர்கள் என்னைப் பற்றி முழுதும் அறியமாட்டார்கள். அண்டசராசரங்களையும், அதற்குறிய பண்புகளையும், உயிர்களின் உணர்வுகளையும் யானே படைத்தனன். மாமுனிகள் எழுவர், மனுக்கள் நால்வரும்

என்னிடம் தோன்றியவர்களே. இவர்களின் தொடர்ச்சியே மனித உயிர்கள். என்னை அடையும் பக்தர்கள் எப்போதும் எல்லோரிடமும் என்னைப் பற்றியே பேசி நினைக்கிறார்கள். தவயோகிகள் என்னையே வழிபடுகின்றார். அவர்கள் நெஞ்சில் நான் உறைகிறேன். அவர்கள் அதனால் ஒளிபெறுகிறார்கள், என்றான் கண்ணன்.

அதற்கு பார்த்திபன் உன்னை முழுமையாய் அறிய ஆவல் கொள்கிறேன். நீ உலகில் எப்படி ஓங்கியிருக்கிறாய் என்று அறிய விழைகிறேன். என்றான் விஜயன்.

கண்ணன் புன்முறுவல் புரிந்து, "விஜயனே! யான் எல்லா உடல்களில் உள் உயிராகவும், உள்ளங்களாகவும், மனமாகவும், செயலாகவும் இருக்கின்றேன். மாதங்கள் பன்னிரண்டு வடிவங்களில் தை மாதத்திற்குறிய திருமாலாகத் திகழ்கின்றேன். ஒளிர்பரப்பில் சூரியனாகவும், காற்றுக் கடவுளரில் நான் மரீசையாகவும், விண்மீன்களில் நிலவாய், வேதங்களில் சாம வேதமாய், வானவருள் இந்திரனாய், ஐம்புலன்களைவிட மேலான மனமாய், உயிருக்கு உணர்வாய் பதினொரு சிவவடிவங்களில் சங்கரனாய், பொருளைக் காக்கும் குபேரனாய், எட்டு வசுக்களில் நெருப்பாய், மலைகளில் மேரு மலையாய், புரோகிதருள் வியாழன், படைத்தலைவருள் முருகனாய், நீர் நிலையில் கடலாய், முனிவருள் பிருகு முனியாய், சொற்களில் ஓம், அசையாப் பொருளில் இமயம், மரங்களில் அரசாய், வானவருள்

நாரதன், கந்தர்வர்களில் சித்திர நாதன், சித்தருள் கபிலன், குதிரைகளுள் உச்சை சிரவஸ், யானைகளுள் ஐராவதம், மாந்தருள் நானே மக்கள் தலைவன்.

நாகர்களில் அனந்தன், நீர்வாழ்வில் வருணன் முன்னோருள் அர்யமான், அடக்குவதில் எமன் பிள்ளைகளில் பிரகலாதன், விலங்குகளில் சிங்கம் பறவைகளுள் கருடன், கருவிகளில் காற்று, எந்தும் படைஞருள் இராமன், மீகளில் மகாம், ஆறுகளில் கங்கை, படைப்பின் முக்காலமும் மடமை நீக்கும் கல்வியும், சொற்களில் சொற்போருடன் எழுத்துக்களில் அகரம், இணைப்புச் சொற்களில் இரட்டைக்கிளவி, காலம், வினைப்பயன், இறப்பு செல்வம், பெண்களில் பெண்மை, நினைவு, அறிவு மனவலிவு, சாமவேத இசைகளில் 'பிருகத்' இசை, செய்யுள் வளங்களில் 'காயத்திரீ' சந்தம் மாதங்களில் மார்கழி, பருவங்களில் வசந்தம், சூழ்ச்சி, புகழ் மொழி, முயற்சி, உண்மை.

யாதவருள் வாசுதேவன், பஞ்ச பாண்டவருள் அர்ச்சுனன் முனிவருள் வேத வியாசர், அறிவுக்கு சுக்கிரன், தண்டிக்கும் செங்கோல்,வெல்வதில் அறம், செயல்களில் பேசாமை ஞானிக்கு ஞான ஒளி, விளைவனவற்றின் விதை அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகியவையாவும் நானே என்பதை பூரணமாக நம்புவாயாக. எவை பெருமை மிக்கதாக விளங்குகின்றதோ எவை உண்மையும், வன்மையும் கொண்டதாக விளங்குகின்றதோ, அவை அனைத்தும்

என் ஒளியாலும், அருளால் அமைந்தவை என்பதை அறிவாயாக. இப்படி எடுத்துச் சொன்னால் நீளும். சுருக்கமாகச் சொல்லப் போனால் என் ஆற்றலின் ஒரு பகுதியாய் தான் அகிலம் அனைத்தையும் தாங்கி, அனைத்து இயக்கங்களையும் நடத்திக் கொண்டிருக்கின்றேன் என்றான் கண்ணன்.

## பதினொன்றாம் அத்தியாயம்

### 20. முழுமுதல் இறை நிலை (விஸ்வரூப தரிசனம்) 1 முதல் 55 சொல் மாலை சுறுக்கம்)

**விஜயன் விண்ணப்பம்**

கண்ணன் தன் உண்மை சொரூப நிலையை உணர்த்திய பின் மனத் தெளிவு கொண்ட விஜயன் கண்ணனின் விஸ்வரூப உண்மை இறைத் தோற்றத்தைக் காண வேண்டும் என்று விண்ணப்பித்தான் அவரும் விருப்பத்தைக் கருணையுடன் ஏற்று அதை பூதக் கண்ணால் காண முடியாதாகையால் ஞானக் கண்ணைத் தந்து தன் விஸ்வ ரூபவடிவத்தை விண்ணுக்கும் மண்ணுக்கும் உயர்ந்து நின்று காட்ட, அதில் விஜயன் பதினான்கு உலகையும் அசையும் அசையாப் பொருள், அனைத்து உயிரினங்கள் தேவர்கள், உயிர்த் தொகுதிகள் அனைத்தையும் கண்ணாரக் கண்டான். ஆயிரம் சூரியப் பிரகாசத்துடன் கூடிய ஆயிரம் சூரியர்களின் ஒளியில் திகைத்தான். கண்டுத் திகைத்தான். அவ்வடிவம் தூய மாலைகள் அணிந்தும், மணப்பொருள் பூசப்பெற்றும்,

திசையெங்கும் திருமுகங்களும் பெற்று காணப்பட்டது. சஞ்சயன் திருதராட்டினனிடம் இதை தெரிவித்தான்.

அந்த விஸ்வரூப காட்சியைக் கண்ட விசயன் அதிசயித்துப் போனான். அவனை அறியாமல், "இறைவா! உம் உடலில் வானவர், பல் உயிர் தொகுதிகள், பிரம்மன் முனிவர்கள், தெய்வீகப் பாம்புகள் எல்லாம் தெரிகின்றது. தங்கள் பேருருவைக் காணும் இடமெல்லாம் காண்கிறேன், விண்ணும், மண்ணும், விளங்கும் இடைவெளியிடம் நின்தனை அறிந்த முனிவர்கள், சித்தர்கள், உருத்திரர், ஆதித்யர், வசுக்கள், சாத்தியர், விசுவ தேவர், அசுவனி தேவர், சூட்டையே அருந்தும் சூரர்களான உஷ்மபவர், கந்தர்வர், யட்சர், அசுரர் ஆகியோர் நின்னைத் தொழுது மகிழும் காட்சியைக் காண்கின்றேன்.

உன் உரையால் பெற்ற அடக்கம் ஒழிந்து அச்சம் குடி கொண்டது. உன் கோரவாய்க்குள் கௌரவர்களும் அவர்தம் படைகளும், நமது படைவீரர்களும் விட்டில் பூச்சி போல் விழுந்து நசுங்கி அழும் காட்சி எனக்கு பயத்தைத் தருகின்றது. "ஐயனே! மூல முதலும் முடிவும் நீயென உணர்ந்தேன். நின்னை முற்றுமாக உணர விரும்புகின்றேன், என்றான் விஜயன்.

கண்ணனும் காண்டீபனிடம், "விஜயனே! உலகை அழிக்கும் ஒரு பெரும் ஆற்றல், நான். என்னைக் காலம் என்பர். உலகை ஒடுக்கி ஒழுங்குறச் செய்வது என் பணி. போரிட நீ மறுத்தாலும் எதிரிப்படை எப்படியும் அழிந்தே

தீரும். எதிரில் உள்ள பலர் என்னால் கொல்லப்பட்டவராயினர். இனி நீ என் கருவியென செயல் படுவாயாக, என்று சொல்ல, அர்ச்சுனன், அளப்பெறும் ஆற்றல் பெற முழுமுதற்பொருளான உன்னை உணராது இது காரும் உன்னைத் தோழனாகவும் சாரதியாகவும் எண்ணி மரியாதைக் குறைவாகப் பேசியிருந்தால் மன்னிக்க வேண்டும் ஐயனே", என்று பணிந்து "நின் விஸ்வரூபத்தை முழுதும் கண்டு என் கண் கூசுகின்றது. அச்சம் தோன்றுகின்றது. ஆகவே தயவு செய்து நான்கு கரங்களுடன் சாதரணக் கண்ணனாகக் காட்சி யளிப்பாய்" என்று வேண்ட அவரும் அவ்வாறே செய்தார்.

விஜயனைத் தெளிவித்தும், கண்ணால் காண வைத்தும் ஞானத் தெளிவைத் தந்து "வில்லை எடுத்துப் போர் தொடு" என்றுப் பணித்தார்.

## பன்னிரண்டாம் அத்தியாயம் - 1 முதல் 20 பாடல்கள்

### 21. இறைநெறி (பக்தியோகம்)

விஸ்வரூபம் கண்டு திகைத்து அர்ச்சுனனுக்கு சிறு ஐயப்பாடு எழுந்தது. தவநிலையை மேற்கொண்டு ஐம்பொறிகளை அடக்கும் ஞானியர் வழிபாடு ஒரு சிலருக்கே அமையும். அது முடியாதவர் எங்கும் நீ நிறைந்துள்ளதாய் எண்ணி பக்தியுடன் வழிபடுகின்றனர். இதில் எது சிறந்தது? என்று கண்ணனைக் கேட்க (அவனுக்காக அன்றி நமக்காகவும்)

கண்ணன், "அசையா நெஞ்சோடு, நம்பிக்கையுடன் என்னை வழிபடுவோர் யாரோ அவர் தவநிலை உணர்ந்தவராவார். (யோக மார்கம்)

"ஐம்பொறிகளை அடக்கி, நடுநிலை உள்ளத்துடன் எல்லா உயிர்க்கும் நன்மை செய்வோரும் என்னை அடைகின்றனர். அதற்கு முயற்சியும் பயிற்சியும் தேவை. அப்படி செய்பவர் பிரம்மத்தைக் காணலாம்". (ஞான மார்கம்)

"செய்யும் எல்லா செயல்களையும் எனக்குக் காணிக்கையாக்கி, எல்லா பொருள் களையும் என்னிடம் கலந்த மனத்துடன் பக்திகொண்ட பக்தனை இறப்போடும் கூடிய வாழ்க்கைக் கடலிருந்து விரைவில் கரையேற்றிக்காக்கின்றேன் (பக்திமார்க்கம்) இதுவே சிறந்த வழி" என்றான் கண்ணன். மேலும் சொன்னான் கண்ணன்

"என்மீது மனதை இணைப்பாய். இணைக்க பயிற்சி செய், அதுவும் இயலாவிடில், எனக்காகவே பணிகளைச் செய்வாய். அதைத் தொடர்ந்து செய். அதுவும் முடியாவிட்டால் என்னிடம் அடைக்கலமாவாய். பயிற்சியை விட ஞானம் சிறந்தது. ஞானம் கொண்டு தியானம் செய். தியானத்தைவிட பணிகளின் பயனைத் துறந்து கடமையைச் செய்.

எவ்வினையும் வெறுத்துப் பகைக்காதே, மாறாக அன்பும் அருளும் புரி 'யான்', 'எனது' என்ற ஆணவத்தை அகற்று. இன்பமும் துன்பமும் சமம்

எனநினை. எப்போதும் பொறுமையாய் இரு. உறுதியான நெஞ்சத்துடன் அறிவையும், அகத்தையும் என்னிடம் சேர்த்து என்பால் தீராத அன்பு பூண்டு வாழும் பக்தன் நான் விரும்பும் அன்பனாகிறான்" என்று கண்ணன் பக்தி நிலையே உயர்ந்தது என்று பார்த்திபனுக்கு தெளிவு படுத்தினான்.

## பதின் மூன்றாம் அத்தியாகம் (1 முதல் 34 பாடல்கள்)

### 22. உடலும் உயிரும்
### (க்ஷேத்ர, க்ஷேத்ரக் ஞனிபாக யோகம்)

அர்ச்சுனன் கண்ணனிடம் "கண்ணா இயற்கை, உள்ளொளி (மனச்சான்று) இடம் தான் தங்குமிடத்தை அறிவது, அறியும் திறம் அரியப்படும் பொருள் ஆகியவற்றை அறிய விரும்புகிறேன் என்றான்.

அதற்குக் கண்ணன், "இருப்பிடம் என்பது உடலே ஆகும். உடலில் தங்கியிருப்பது உயிராகும். அந்த உயிராய் உழல்பவன் நானேயாகும். ஐம்பூதங்கள், ஆணவம், அறிவு மூலமான இயற்கை புலன்கள் ஐந்து. செயல்படும் பொருள்கள் ஐந்து என்னும் பத்து இயந்திரங்கள். மனம் ஒன்று. ஐந்து பொறிகள் விரும்பு, வெறுப்பு, இன்பத்துன்பம், உடல் அமைப்பு, உணர்வு, உறுதி என, உடலும், அதன் தோற்றங்களும், சொல்லப்படுகிறன்றன. அமைதி, அன்பு, பொறுமை தூயசிந்தை, ஆசிரியர் தொண்டு, தூயமனம், அயரா முயற்சி, அடக்கம் 'நான்', 'எனது' என்ற ஆணவம் அற்றநிலை, பக்திப் பயிற்சி தூய்மை, தனித்திருத்தலில்

விருப்பம், தொடர்ந்து, உண்மைப் பொருளைக் கண்டறிதல் இவையே 'ஞான ஒளி' எனப்படும். அல்லவை அஞ்ஞான இருளாகும்.

எங்கும் இருந்து, எல்லாம் ஆற்றி, பஞ்ச பூதங்களாக இருந்து, எல்லாவற்றை ஆக்கவும் அழிக்கவும் கூட்டவும் வல்ல, ஒளிகளுக்கு ஒளியாய், அறிவாய், அறியத்தக்கதாய் உள்ள பரம்பொருளை உணர்ந்த என் பக்தனே என்னை அடைகிறான்.

இயற்கையும், உள்ளொளியும் தொடக்கம் இல்லாத மூலமாகும். ஆன்மாவிற்கு ஏற்பவே உயிர்கள் இன்ப துன்பங்களை ஏற்கின்றன. இன்ப துன்பம் கொண்ட பிறவிகளுக்கும் பெற்ற இயல்புகளே காரணங்கள் ஆகின்றன. உள்ளொளியாம் ஆன்மா, அனைத்தையும் காண்பதாக, எற்பதாக, சுமப்பதாக, சுவைப்பதாக தலைமை ஏற்பதாக இறைவனாய் விளங்குகிறார்.

அந்த இறையாற்றலை சிலர் மனப்பயிற்சியால் தெளிந்து தம் உள்ளொளியைத் தாமே காண்கின்றனர். வேள்வி போன்ற அறிவியல் ஆய்வுப் பயிற்சியால் பயிற்சி செய்ய முடியாதவர் ஆன்றோர் சொல் கேட்டு அந்நெறியில் நம்பிக்கை பூண்டு அதையே தவமாகக் கொண்டு எம்மை பக்தி வழியில் அடைகின்றார். எங்கும் நிறைந்து, எல்லா உடல்களிலும் உயிராய் உலவும் என்னை அறிந்தவர்களுக்கு இருப்பிடமாகக் கொண்ட உயிரும், தன் இருப்பிடமான உடலை ஒளி பெறச் செய்கிறேன்.

இப்படி உயிரின் இடமான உடலையும், முழுதும் உணர்ந்து ஓங்கித் தோன்றிய அனைத்தும் இயற்கையில் ஒடுங்கி ஒரு நாள் மறையும், அறிவால் என்னை உணர்பவரே என்னை வந்தடைகின்றனர்" என்றார் கண்ணன்.

## பதினான்காம் அத்தியாயம் - 1 முதல் 27 பாடல்கள்

### 23. மூன்று பண்புகள் (குணத்ரய விபாக யோகம்)

அர்ச்சுனன் மூன்று குணங்கள் பற்றி கேட்டபோது கண்ணன் விஜயனிடம், “பரத குலத் தோன்றலே! மூல இயற்கையே கருவகம். உயிர் அங்கு கருவாகி உருவாகிறது. இதைச் செய்பவன் யானே. கருவகத்திலிருந்து பிறக்கும் உயிர் வடிவங்களுக் கெல்லாம் மூல இயற்கை தாயாகவும், கருவடைச் செய்கின்ற யான் தந்தையாகின்றேன்.

குணங்களை மூன்றாக வகைப்படுத்துகிறேன். இறைப்பண்பு, மனிதப்பண்பு, தாழ்ந்த பண்பு என்னும் இம்மூன்று குணங்களும் மூல இயற்கையில் படைப்புகளாகும். மூன்றும் அறிவற்ற ஆன்மா என்றும் உயிரை அழியும் உடலோடு இணைக்கின்றன.

**சத்துவ குண இயல்பு** - உயர் பண்பு, குற்றமற்றது ஒளிமிக்கது, சுறுசுறுப்பானது இன்பத்திலும் ஞானத்திலும் கட்டுப்படச் செய்கிறது; இன்பத்தை சேர்க்கும் இயல்பினது, ஐம்பொறிகளுடன் அறிவினாலும் ஒளி அரும்பி மலரும் போது இறைமை யானது ஓங்கி வளர்கிறது. ஞானம் மலர்கிறது. உறுதியாக இருப்பாய்.

**ரஜோகுண இயல்பு** - மனிதப் பண்பு, ஆசையே வடிவானது. பற்றும் பாசமும் அதிகமிருக்கும் பேராசை ஓங்கி நிற்கும, செயலகளை கடடுபபடுததாது. யான 'எனது'என்ற ஆணவம், பிடிவாதம் இருக்கும். வினைகளில் மிகுதியான ஈடுபாடு, அமைதியற்ற நிலை இந்த பண்புகளைக் கொண்டிருக்கும். துரியோதனன், இராவணன் போன்றோர் உதாரணம்.

**தாமச குணம்** - இயல்பு தாழ்ந்த பண்பு மடைமையில் உருவாகிறது. உயிர்களை மயக்கிவிழ்த்தும் உணர்வுகளை அலட்சியம் செய்யும் சோம்பலும் உறக்கமும் அதிகமிருக்கும்.

ஒவ்வொருவரிடமும் இந்தமூன்று குணங்கள் இருந்தாலும், அதில் எதில் மேலொங்கி செயல்படுகின்றதோ அந்த நிலையில் உயிர்கள் செயல்படும்.

இதில் உயர்ந்த சத்துவ குணத்தின் ஒளி, ரசோகுணத்தின் செயல், தாமச குணத்தின் மயக்கம் தன்னிடம் உள்ள போது வெறுப்பதோ, விலகியோ இல்லாமல் எப்பக்கமும் சேராது. இன்ப துன்பம் சமம், விருப்பு, வெறுப்பு, இகழ், புகழ், சமம் என்று கொண்டு வாழவான். அவனே குணங்களைக் கடந்த அரியவனாகிறான். நெறிமாறா பக்தியோடு எவன் என்னை வழிபடுகிறானோ அவனே முக்குணங்களையும் கடந்து அடிறயாற்றலுக்கும், வீடுபேற்றுக்கும், அறத்திற்கும், நிகரில்லா

பேரின்பத்திற்கும் நிலைக்களம் ஆகிறான் என்று தெளிந்து என் பால் பக்தி செய்து உய்க" என்றான் கண்ணன்.

## பதினைந்தாம் அத்தியாயம் - 1 முதல் 20 பாடல்கள்

### 24. மாந்தரில் ஓர் மாமணி (புருஷோத்த யோகம்)

கண்ணன் விஜயனிடம் தான் யார்? என்பதை விளக்குகிறான். ஒரு மனிதனாகப் பிறந்து தேர் சாரதியாக அமர்ந்த கண்ணன் தான் இப்படி இருப்பதால் புருடர்களில் உத்தமனாகிறேன் என்ற தெய்வீகச் சிறப்பை இந்த அத்தியாயத்தில் விளக்குகிறான்.

வாழ்க்கையை ஒரு புதுமையான அரசமரமாக உருவகப்படுத்துகிறான். சாதாரண அரசமரம் அடியில் வேர், இடையில் இலை, மேலே கிளை இப்படி இருக்கும். ஆனால அந்த புதுமை வாழகை அரச மரத்தின் வேர் மேலாகவும் ஐம்புல உணர்வும் தளிரான இலைகள் நடுவாகவும் செயல்கள் என்னும் கிளைகள் கீழாகவும் பரவி இருக்கும். வாழ்க்கை மரத்தின் வடிவம் கண்களால் காணப்படாதது. அதற்கு முளைவிடும் தோற்றமும், நிலைத்தலும், முடிதலும் இல்லை. விந்தையான இந்த அரசமரத்தை, பற்றில்லாமை என்ற வாளால் வெட்டி விட்டு, வாழ்க்கையின் விதை மூலம் எதுவோ அதைக்கண்டு, அதனிடம் சாண்பூண்டு பிறகு திரும்ப முடியாத சீர்மை உலகை அடைய வழி தேட

வேண்டும். அழியா நிலையை அடைய ஆணவம் மயக்கத்தை அகற்றி, ஆசை ஒழித்து, இன்ப துன்பங்களை அழியா நிலையை அடையலாம்.

வாழ்க்கை உலகில் அழியாத என் தோற்றமே உயிராக உலவுகின்றது. மனமாகச் செயல்படுகின்றது. எல்லா உயிர்களிலும் இறையே இருந்து இயக்குகின்றது என்பதை நானிலமே அறியும். எனது பேரொளி சூரிய ஒளியாக உலகை ஒளிரச் செய்கின்றது. நிலவின் தனியாய் நிறைகிறது. நெருப்பின் வெப்பமாய்த் திகழ்கிறது. நிலவாய் நிலவி பயிர்களை வளர்க்கிறேன்.

உயிர்களின் உடலில் நான் வயிற்று நெருப்பாக வாழ்கிறேன். உள் மூச்சு, வெளி மூச்சுத்துணையால் கடித்தல், விழுங்கல், சுவைத்தல் ஆகிய நால்வகை உணவைப் பக்குவமாக்கி செரிக்கவைக்கிறேன். நான் உயிர்களின் உள்ளத்தே நினைவாகவும், அறிவாகவும் நான் இருக்கின்றேன். அழித்தல், நிலைத்தல் என்ற இரு நிலையைப் பெறறு, மாறுதல் இல்லாததும் எங்கும் நிலை பெற்ற பொருளாக உள்ள நானே இந்த இருநிலைகளைக் கடந்தவன். நான் உலகிலும், உயர் மறைகளிலும் போற்றும் தூயோன் எனப்போற்றப்படுகிறேன். அனைத்துமாய் இருப்பது நானே என்பதை உணர்வாயாக. ஆழ்ந்த சிந்தனைக்குரிய, இதுவரை எவராலும் அறியப் படாது புதிய கருத்துக்களை உனக்குச் சொன்னேன்.

இவற்றை அறிந்தவனே ஞானி ஆகிறான். அர்ச்சுனா! செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய "சீறி எழு. அம்பை விடு" என்றான் கண்ணன்.

## பதினாறாம் அத்தியாயம் - 1 முதல் 24 பாடல்கள்

### 25. இறைமைப்பண்பும், அரக்க இயல்பும் (தெய்வாசுர சம்பத் விபாக யோகம்)

கண்ணன் விஜயனிடம் மனிதர்களில் உள்ள இருதரப்பினரின் இயல்புகளை எடுத்துச் சொல்லி தெளிவிக்கின்றான். இறைமைப் பண்பை எப்படி உணரலாம்? என்ற வினாவிற்கு பதில் தரும் விதமாக அமைந்துள்ளது கண்ணனின் இந்த உரை.

**இறைமைப் பண்பின் இயல்பு**

இறைப்பண்பின் இலக்கணம் பயமின்மை, மனத்தூய்மை உயர் ஞானத்தைப் போற்றுதல், நேர்மையுடன் நடந்து கொள்ளல், ஈகை குணம், மன அடக்கம், வேள்வி, மறை ஓதுதல், தவநெறியில் வாழ்தல், சீவகாருண்யம், உண்மை உரைத்தல், அருளுடமை, இளகிய கருணை உள்ளம், மன உறுதி, பொறுமை முயற்சி, தூய்மை, அமைதி, அடக்கம் ஆகியன கொண்ட உள்ளத்தவராய் வாழ்தல் ஆகியனவாகும்.

**அரக்கமனப்பண்பின் இயல்பு**

மேல் குறிப்பிட்ட இயல்புகளுக்கு மாறாக 'தான்' என்றும் அகம், பகட்டு, நானே என்னும் தற்புகழ்ச்சி,

சீற்றம், கடுஞ்சொல், மடமை, நல்லது, தீயதை உணராதவர், தீயோழுக்கம், பொய்மை, காமம், உளநலம் இழப்பு, கொடுஞ் சொல் கூறல், உலகினைப் பழித்தல், சிறுமைகள் செய்யல், பேராசை, குடிப்பழக்கம், சிற்றின்பங்களில் மகிழ்தல், கொலை வெறி, ஆணவம் தகுதியானவர்களை அவமதித்தல். பிறரை மதிக்காத ஆணவப் போக்கு, முறையில்லாத வேள்விகள் புரிதல், இறுமாப்பு, இறையைப் பழிப்பதும் பகைப்பதும், இரக்கம் இல்லாமை, காமம், ஆசை, கோபம் ஆகிய மூன்றும் உயிர்களின் உள்ளொளி ஒழிக்கும் தீமைகள் ஆகிய மூன்றையும் ஒழித்தால் முக்தி கிடைக்கும் என்பதை உணர்வாய் சாத்திர விதிகளைப் பாராது, ஆசையே ால்லாம் என்ற அறிவுடன் செயல்களைச் செய்பவன் சிந்தனையில் வெற்றி அடைந்ததும் இல்லை. அடையப் போவதும் இல்லை. தக்கதை அறிய சாத்திர நூலறிவு தேவை என்பதை உணர்வாய், அதுவே அறிய செயலாற்ற துணை புரியும் என்பதை அறிவாய் அர்ச்சுனா" என்றான் கண்ணன்.

## பதினேழாம் அத்தியாயம் - 1 முதல் 28 பாடல்கள்

### 26. நன்னம்பிக்கை, மூன்றின் நலம் (சிரத்தாத்ரய விபாக யோகம்)

காண்டீபன் பரந்தாமனிடம், "பரந்தாமா! ஒருவன் வேத விதிகைள மீறி, அதே சமயம் மிகுந்த உறுதியுடன் வேள்விகளைச் செய்கின்றான். அவனுக்கு எந்த

நிலைகிட்டும். ஒளி நிலையா (சத்துவம்) அல்லது கிணர்ச்சி நிலைய (ராஜஸம்) அல்லது இருள் நிலையா (தாமஸ) என்று கேட்டான்.

அதற்கு பரந்தாமன் கூறுகிறார் : மனிதருக்கு இயற்கையாக உள்ள நம்பிக்கைள் மூன்றாகும். சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் குறிப்பாக தூயநிலை, ஆசைநிலை, மயக்க நிலை.

தங்கள் இயலுபுக்கேற்ப நம்பிக்கை ஏற்படுகிறது. மனிதரே நம்பிக்கை மயமானவர் தான் எவன் எந்தப் பொருளில் முழுமையான நம்பிக்கை வைக்கின்றானோ அவன் தானே அப்பொருளாகிறான். சாத்வீகி என்னை நம்புகிறான் ராஜஸ நிலையினர் தேவதைகளையும், அரக்கர்களையும் நம்பி வணங்குகிறார்கள். ரசோ குணத்தவர் மூதாதையர்களையும் பேய் பூதங்களையும் நம்பி வணங்குவர்.

ஒரு சிலர் வேத முறைப்படி செய்வதை விட்டு கடுமையான தவம் மேற்கொண்டு, வீணான ஆடம்பரம், அகங்காரம் உடையவராய், பேராசையால் கோரமான தவம் செய்து தங்கள் உடலைத் துன்புறுத்திக் கொள் வதுடன், அகத்தில் உறையும் என்னையும் துன்பத்தில் ஆழ்த்துகின்றனர். இது அசுரத்தன்மைதாகிய இயல்பு என்று அறிவாய்.

உணவு பழக்கம், யாகமும், தானமும ஆகிய மூன்றும் அவரவர் இயல்புக்கேற்றபடி அமைகின்றது.

தாம் உண்ணும் உணவு ஆயுளை நீடிக்கச் செய்வதாகவும், உடல் உள்ள வலிமை பெருக்கச் செய்வதாகவும், வியாதிக்கு வித்திடாததாகவும் என்றும் இன்பம் தருவதாகவும் உள்ள உணவை சத்துவ குணத்துவரான முதல் நிலையினர் விரும்புகின்றனர்.

ரஜோ குணம் உடையவர் விரும்பும் உணவு வகைகள் கசப்பது, புளிப்பது, கைப்பு மிக்கது, உலர்ந்தது மிகவும் வெப்பமானது, காரம் உடையது, பசி எடுக்காமல் செய்வது ஆகும்.

மூன்றாம் நிலையான தாமஸ குணத்தவர்கள் உண்ணும் உணவு வகைள் பழையது, வேகாதது சுவையற்றது, அழுகியது, கெட்டுப் போனது, எச்சில் அசுத்த அடைந்தவைகளை விரும்பி புசிப்பர்.

அவர்கள் செய்யும் யாகத்தின் தன்மை எத்தகையது என்பதை பின் விளக்குகிறார் கண்ணன். இலாப நோக்கே இல்லாது, சாத்திர விதி முறைப்படி கடமை உணர்வுடன், தூய முறையில் செய்வது சாத்வீகி செய்யும் யாகத்தன்மையதாகும்.

பலனைக் குறித்து, வீண் ஆடம்பரத்துக்காக எந்த நோக்கமும் இன்றி செய்யப்படும் வேள்வியின் பெயர் ராஜஸம்.

விதிமுறை இன்றி, அன்னதானமின்றி, மந்திரம் சொல்லப் படாமல், தட்சிணை வைக்காமல் நம்பிக்கை இன்றி செய்யப்படும் வேள்வி தாமஸ வேள்வியாகும்.

அடுத்து தவத்தின் இயல்புகளைச் குறிப்பிடுகிறான் கண்ணன்.

**உடலால் (சரீரத்தால்) இயற்றப்படும் தவம்**

தேவர், அந்தணர், குருமார், மேதைகள் இவர்களுக்கு பூசை செய்தல், செய்யும் தவம் தூய்மையாகவும், நேர்மையாகவும், வாய்மையாகவும், கொல்லாமை கொண்டதாகவும், பிரம்மச்சர்யத்தை மேற்கொண்டு செய்யப்படும் சரீரத்தவம் என்பர்.

**வாக்கினால் செய்யப்படும் தவம்**

கோபத்தை விளைவிக்காததும், வாய்மை இனிமை உடையதாயும், நலம் பயப்பதானவைகளைச் சொல்லல். கல்விப் பயின்றுக் கொண்டு செய்யப்டும் தவம் வாக்குத் தவம் என்பர்.

**மனத்தினால் செய்யப்படும் தவம்**

உள்ளத்தெளிவு, மகிழ்ச்சி, மோனம், சுய கட்டுப்பாடு எண்ணத் தூய்மை கொண்டவை மனத்தவம் எனப்படும். சாத்வீகத்தவம் என்பது பயன் கருதாது, இறைவன் நான் என்று உணர்ந்து, தூய எண்ணத்துடன் மேலான நம்பிக்கையுடன் இயற்றப்படும் தவம் சாத்துவீகத் தவம் எனப்படும்.

வீண் ஆரவாரத்துடன் மதிப்புக்காகவும் பெருமையை வெளிப்படுத்தும் விதமாக செய்யப்டும் தவம் ராஜஸ தவம் என்று சொல்லப்படும்.

**தானம்**

மூன்றினைப் பகுத்திக் காட்டுகிறான் கண்ணன். எதிர்ப்பார்ப்பு இன்றி, ஈதல் என் கடன் எனக் கருதி தகுந்த இடத்தையும், காலத்தையும் மனதில் எண்ணி தனக்கு எந்த வித உதவியும் செய்யாதிருந்தாலும் அவனது நடத்தை அறிந்து செய்வது சாத்வீக தானமாகும்.

**ராஜஸ தானம்**

பலனை எதிர்ப்பார்த்து, சந்தேகத்தோடு, பெருமைக்காக உள்நினைப்புடன் செய்யப்படும் தானம் ராஜஸதானம்.

**தாமஸ தானம்**

பொருந்தாத இடத்தில், பொருந்தாக் காலத்தில், தகுதி அற்றவர்களுக்கு, அலட்சியப் போக்குடன் தூக்கி எறிந்து முணு முணுத்திக் கொண்டே பிச்சை இடுவது தாமஸ தானமாகும்.

**பிரம்மத்தின் பெயர்கள்**

‘ஓம்’ ‘தத்’ ‘ஸத்’ என்ற மூன்று சொற்களும் பிரம்மத்தைக் குறிக்கின்றது. இந்த சொற்களை அந்தணர்களைக் கொண்டு வேதங்களும், யாகங்களும் என்னால் படைக்கப்பட்டன.

எனவே வேத பாராயண முறைப்படி வேதத்தை உணர்ந்தவர்கள் தாங்களால் இயற்றப்படும் யாகம்,

தவம், தானம், செய்யப்படும்போது 'ஓம்'என்ற சொல்லே முதலில் கூறப்படுகின்றது.

முத்திநிலையடைய விரும்பும் ஞானிகளும், மோனிகளும், சான்றோரும் வேறு எந்த எதிர் பார்ப்பும் இன்றி தாங்கள் ஆற்றும் யாகம், தானம், தவம் செய்யும் போது 'தத்' என்ற சொல்லை முதலில் குறிப்பிட வேண்டும் என்கிறான் கண்ணன்.

அடுத்து 'ஸத்' என்ற சொல்லுக்கு உள்ளது, நன்மை என்ற பொருள்கள் கொண்டதைத் தாம் இயற்றும் எல்லாவித சுப காரியங்கள் தொடக்கத்தின் போதும் தொடக்கத்தில் சொல்லப் படவேண்டும் என்பது கீதையின் வாக்கு. மேலும் யாகம், தவம், தானம் மற்ற தொடர்புடைய புண்ணியப் பணிகளின் துவக்கத்திலும் 'ஸத்' என்ற சொல்லே பயன்படுத்தப் படுகின்றன.

"நம்பிக்கையின்றி மேற்சொன்ன சொற்கள் இன்றி செய்யப்படும் யாகம், தானம், தவம் செய்தல் 'அஸத்' எனப்படும்". இது பயனற்றது என்று உணர்வாயாக என்றான் கண்ணன்.

## பதினெட்டாம் அத்தியாயம் - 1 முதல் 78 பாடல்கள்

### 27. வீடுபேறாம் வெற்றிப் பாதை (மோக்ஷ சந்யாச யோகம்)

பாரதப் போரை பதினெட்டு நாட்கள் நடத்தி பூபாரம் தீர்க்க வந்த பூபாலனிடம் இறுதியாக, பதினெட்டாம் அதிகாரத்தில் 'துறவு', 'தியாகம்' என்ற

செயல்களுக்கு விளக்கம் அளிக்கும் படி வேண்ட பரந்தாமன் கூறலுற்றார்.

“பயன் கருதாப் பணியே துறவு. செய்த காரியங்களில் கிடைத்த பயனைப் பிறருக்கு நல்குவதே 'தியாக' மாகும். தேவ நிலையாகிய என் நிலையில் யாகம், தானம் தவம் ஆகிய செயல்களைத் துறப்பதைத் தவிர்க்க வேண்டும். ஏனெனில் இவையே அறிவில் நல்ல தெளிவை அறிஞர்களுக்கு ஏற்படுத்துகின்றது. பயன்கருதாது தானம், யாகம், தவம் இயற்றுவதே என் கொள்கையாகும்.

தாமச குணம் பெற்ற கீழோர் தம் அறிவு மயக்கத்தால் கடமையைக் கைவிடுவர். நீ நின் உன்னதமான கடமையாற்ற மறுக்கலாமா?”

இராஜஸ குணம் உடையவர்களான ஆசையிருந்த கிளர்ச்சியாளர் செய்ய வேண்டியதை எண்ணிக் கைவிடுதலை அவர்களுக்குத் தியாகமாகும்.

தன் செயலினை நன்கு உணர்ந்து அறத்தின்படி, பற்றை நீக்கி, பலன் நோக்காது செயல் புரிவோனின் தியாகமே சாத்வீகமாகும். இவனை அறிஞர் போற்றுவர். அற்புதமான தியாகி அவனேயாகும். தானே எதையும் நாடிச் செல்லாமலும், வந்ததை வேண்டாம் என ஒதுக்குவதுமில்லை.

உடலில், உயிரோடு உலவும் மனிதன் தன் தொழிலை முழுமையாக துறப்பது என்பது இயலாததாகும். ஆனால் அந்தத் தொழிலின் பயனைத்

துறப்பதே பரிசுத்தமான தியாகமாகும். நிலையில்லா மனத்தவர்கள் செய்கின்ற பணி தியாகமாகாது. பயன் பெறா பாவிகளே யாவர்.

சித்தாந்தங்களும், வேதாந்தங்களும் தெளிவாகவும் விளக்கமாகவும் சொல்லும் தொழில்கள் ஐந்து. அவை (இடம்) செய்பவனான மனிதன் (கருவி) கருவிகள், அகக்கரணங்கள் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) புறக்கரணங்களான பலன்களும், பூதக்கருவிகளும் (கரணங்கள்) 'தைவம்' என்ற இயற்கை நிலை ஐந்து ஆகும்.

மனிதன் உடம்பாலும், சொல்லாலும், மனத்தாலும் எந்தக் காரியத்தைக் தொடங்கினாலும், நன்மை, தீமை, எது நடந்தாலும் இவ்வைந்துமே செயல்களுக்கு முதன்மையாகும். தான் ஒரு செயலை தானே செய்கிறேன் என்று சொல்பவன் மடையன் மட்டுமல்லாது பக்குமற்றவனுமாவான்., ஆணவம், அகந்தை, பற்று இல்லாமல் ஒழுகுபவன் மிக எண்ணிக்கையிலான மனிதர்களைக் கொன்றாலும் அவனைப் பற்றாது. உண்மை அறிவு, அறிவால் காணும் பொருட்கள், பொருட்களைக் காணும் மனிதன் மூன்றும் தூண்டினால் தான் 'செயல்' உருவாகும். சேரும் கருவி அதனால் செய்யப்பட்ட கருமம், அவனது செயல் மூன்றும் செயலின் மூலம் என்று உணரலாம்.

பொருள்கள் வெவ்வேறாக இருந்தாலும் அனைத்திலும் ஊடுருவி இருக்கும் ஆத்மா ஒன்றே என

வெருப்பையும் விலக்கிய தூய செயல்கள் சாத் வீகச்

உணர்ந்தவன் சாத்வீக ஞானியாவான். அதற்கு மாறாக ஒவ்வொன்றிலும் தனித்தனியாக இருப்பதாக நினைப்பவன் ராஜஸ அறிவுடையவனாகக் கருதப்படுவான்.

தான் அறிந்தது கடுகளவே உலகம் என்று எண்ணிக் கொண்டு அதையே உடும்பு போல் பற்றிக் கொண்டு, புதிய உண்மைகளை அறிந்து கொள்ள சிந்தனை தோன்றாது. தாழ்ந்த மனப்பான்மையைத் தாங்கும் உள்ளம் எதுவோ அதுவே தாமச அறிவு ஆகும்.

பயன் நோக்காதும், பற்றுமில்லாமல் விருப்பு வெருப்பையும் விலக்கிய தூய செயல்கள் சாத் வீகச் செயல் எனப்படும்.

பயனை எதிர் நோக்கி, மரியாதை இன்றி ஆணவத்துடன், அரிதாக முயன்றுசெய்யும் செயல் இராஜச செயலாகும். தான் பெற்ற ஆற்றலை, இழப்பை, பிறருக்கு துன்பம் ஏற்படுத்தும் பொய்ப்பைப் பெறும் செயல்கள் யாவும் தாமசச் செயல் எனப்படும்.

**சாத்வீகச் சான்றோன் இயல்பு**

பயன் பாராமல் பற்றின்றி, ஆணவம் ஒழித்து, தொடர்ந்த முயற்சி, எழுச்சி, ஊக்கம், வெற்றியில் வெறியும், தோல்வியில் தோய்வின்றி அனைத்தும் சமமென உணர்ந்து செயல்படுபவன் சாத்வீகச் சான்றோன் எனப்படுவான்.

செயலில் பயனை எதிர்ப்பார்த்து, பெற்றன எவர்க்கும் ஈயான் ஆகி, பிறரைத் துன்பப்படுத்துவதை தொழிலாகச் செய்து, எதிலும் தூய்மை இன்றி வாழும் பண்பாளர்கள் இராஜச் செயலர் எனப்படுவர்.

நிலையில்லாத மனம், தீய ஒழுக்கம், வஞ்சகம், ஆணவம், தீய செயல்களை வளர்ப்பவன், முயற்சி இல்லாதவன், சோம்பலாய் இருப்பவன், தன்னம்பிக்கை இல்லாமை, மறதி, தாழ்ந்த இயல்புடையவன் தாமசமாக கருதப்படுகிறான்.

அறிவு, ஆற்றல், உறுதி மூன்றுதான் செயலுக்கு மூலம் என்று உணர்வாய்.

**அறிவு**

நல்லதை உடனே செய்தலும், தீயதை விரைவாய் விலக்கலும் தகுந்ததை செய்து, தகாததை விடுதலும், அஞ்ச வேண்டியதற்கு அஞ்சியும், அஞ்சாததற்கு நெஞ்சம் நிமிர்ந்த ஆண்மையும் பெற்றுச் சிறப்பவர்க்கு வீடுபேறு நிச்சயம். இத்தகைய ஆய்ந்த அறிவே சாத்வீக அறிவு எனப்படும். 31

பாவகாரியங்களை அறமாக செய்தலும் அறத்தை அல்லறமாக நினைப்பதும், செய்யத்தகாத காரியங்களை விரும்பிச் செய்வதும், செய்ய வேண்டியவற்றை வெறுத்து ஒதுக்குவதும் இராஜச அறிவு எனப்படும். மூடத் தன்மையில் மூழ்கி

அதர்மத்தை தருமமாக எண்ணுவதும் எதையும் அறத்தின் இயல்புக்கு மாறாகக் கருதுவதும் தாமஸ அறிவாகும். 32

**துணிவு (அ) தைர்யம்**

உள்ளம், உயிர், புலன்கள் இவற்றின் செயல்களை தவிர்க்க முடியாது. துதிக்க வல்லதாகிய, மனவுறுதியே சாத்வீகத் துணிவு என்பர். 33

எதிலும் பற்றும், பாசமும் வைத்து, பலனை எதிர் நோக்கி பணத்தின் மீதும், பாவையர் மீதும் ஆசை வைத்து, பார்க்கும் பொருளை எல்லாம் விரும்பி அதன் பொருட்டுத் துணிவு கொண்டு செயல்படுவது. 34

எப்போதும் தூங்கிக் கொண்டு, பயந்த உள்ளத்தினராய், எதைப் பார்த்தாலும் துன்பப்படுபவன், எதிலும் தோல்வி, துன்பம் காண்பவன், மனதை மாற்றிக் கொள்ளாதவன், அகந்தையும், ஆணவமும் கைவிடாதவன், பெற்ற துணிவு தாமஸத் துணிவு எனப்படும். 35-36

**மூவகை சுகங்கள்**

தான் விரும்பிப் பெற்ற பொருள் துவக்கத்தில் உனக்கு நஞ்சு போல் கசத்தாலும் அடுத்தடுத்து அதுவே தேவார்தமாக இனிக்கும். காரணம் உன் மன உறுதியில் கிடைத்த சுகமானதால் இதைச் சாத்வீக சுகம் என்பர். 38

இயங்குவது அந்தணர் கடமையாகும். 42

முதலிலேயே அமிர்தமாய் இனித்து முடியும் போது கசப்பாக அமைந்து நன்மை போல் முதலில் தோன்றினும் தீமையில் முடியும் சுகத்தை ராஜஸ சுகம் என்று குறிப்பிடப்படும். 39

முதலிலும் முடிவிலும் மயக்கமே தருவது, எப்பொழுதும் தூக்கம் தருவது, சோம்பலை மிகுத்து நினைவாற்றல் குறைந்து சோம்பலையே சுகமெனக் கொள்ளும் சுகம் தாமஸ சுகமாம். 40

அடுத்து நான்கு சாதியம் (வருணம்) அவரவர் அறிவுக்கேற்ப தொழில்கள் அளவால் அமைக்கப் பட்டன. அந்தந்த வருணந்தவனின் கடமைகளை கண்ணன் விளக்குகிறான். 41

**அந்தணர்**

துடிப்பை அடக்கி, புலன்களை வென்று, பொறுமை காத்து தூயதவம் செய்து, ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஞானியாகி, அனுபவத்தை உள்ளடக்கி ஆத்திக தெய்வீக உணர்வோடு இயங்குவது அந்தணர் க டமையாகும். 42

**க்ஷத்திரியர்**

ஆண்மை, வீரம், அறப்போர், புறமுதுகு காட்டாதத் தன்மை ஆளுமை, ஆதிக்கம், திறமை இந்தக் கருமங்கள் அனைத்தும் இயல்பாக க்ஷத்திரியருக்கு உரியன. 43

**வைசிய தர்மம்**

உரு தொழில் செய்தல், பயிர்களைக் காத்தல் வணிகம் புரிதல் வைசிய தர்மமாகும். 44

**சூத்திரர்**

மேற்குறிப்பிட்ட மூன்று இனத்தார்க்கும் சேவை செய்யும் தர்மம் சூத்திரர் தர்மமாகும். 45

தத்தமக்குரிய தொழில்களில் நல்ல நம்பிக்கையுடன், நித்தம் விளைக்கும் உண்மை மிகுந்தவன் குணமிக உடையோன். எந்த வகையில் சித்தியைப் பெறுகிறான்? பார்த்திபா! அதையும் நீ கேட்பாயாக. 46

இந்த உயர் குணங்கள் யாவும் ஒருவனிடத்து இருந்தே பிறந்தது. இவ்வையகம் அனைத்திலும் நிறைந்திருக்கும் கடவுளைத் தமக்குரிய கருமத்தால் வழிபாடு செய்யும் மனிதன் ஈடேறுகிறான். 47

பிறருக்குரிய அறத்தை மிக நன்றாகச் செய்வதை விட தனக்குரிய அறத்தை சிறு குறையுமின்றிச் செய்வதும் நல்லதேயாகும். இயற்கைத் தொழிலைச் செய்தால் என்றும் பாவமே அடையமாட்டான். 48

தனக்கு உரித்தான இயல்பான தொழில் குறை உடையதே ஆயினும் அதைக் கைவிடல் ஆகாது. நெருப்பைப் புகை சூழ்ந்திருப்பதைப் போல் எல்லா தொழில்களையும் குறைகள் சூழ்ந்துள்ளன. 49

எங்கும் வீழ்ச்சி அடையாத அறிவுடையோனாய் தன்னைத் தன்னுள் அடக்கி பயனை எதிர் நோக்காது, பின்னர் செயலினால் பெரிதுயர்ந்த வெற்றியைத் துறவினால் எய்துவான். 50

[illegible]மாக (இறைநிலை எய்த) பெற வேண்டிய இயல்பு குணங்கள்.

நேர்மையும், சக்தியும் கொண்ட நல்ல அறிவுடையோனாகவும், கட்டுப்பாடு கொண்டவனாக வும், பலன் உணர்வுகள் அற்று, விருப்பு வெறுப்புக் களை எறிந்து விட்டு (49)

தனிமை நாடுகின்றவனாய், ஆசைகள் அற்றவனாய், வாக்கையும், உடலையும், மனதையும் வென்றவனுமாய், தியான யோகத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு எப்போதும் பற்றின்றி இருப்போனாய். (50)

அகங்காரம், வலிமை, காமம், கோபம் பிச்சை யேற்றல், இவற்றை விட்டு மமகாரமாகிய உடமைப் புணர்ச்சியை நீக்கி, சாந்த நிலையைக் கொண்டவன் பிரம்மமாகத் தகுதியுடைவன் ஆவான். (51, 52, 53)

இயற்கை, ஈஸ்வரன், பிரம்மம் எல்லாம் ஒன்றே. இதில் நிலைபெற்றோன், ஆனந்த முடையவன் மட்டுமல்ல துன்பமிலாதவனாவான். எதிலும், எக்காலத்திலும், எக்காரணம் கொண்டும், பற்றின்றி வாழ்வான் உலக உயிர்களை எல்லாம் சமமாக நினைந்து

காக்கும் உன்னதமானவன் அவன் மிக மிக உயர்ந்ததாகிய என் பதம் அடைகிறான். (54)

கண்ணன் என்ற பெயர் தாங்கி, கணக்கில்லா வடிவம் கொண்ட என்னைப் பார்த்து பக்தியினால் களிப்பவன், கண்ணனை முழுவதுமாகக் கண்டுஅவனும் கண்ணனும் ஒருவனே என உணர்ந்து கொண்டு அவனுடனே கலந்து மகிழ்ந்து வாழ்வான். (55)

கண்ணனின் திருவடிகளை தஞ்சமாகக் கொண்டு, அந்தக் கண்ணனின் அருளாலேயே என்று நினைப்பவன், எக்காலத்திலும் அமர நிலை பெற்று மகிழ்வான். (56)

உன்னை கண்ணனுக்கே காணிக்கை யாக்கிவிடு. முதலில் என் கொள்கையும் கண்ணனே. என் அறிவும் அக்கண்ணனே என்று கூறி என்னையே அண்டி, என்னைத் துதித்து என்னுடனேயே இரு. (57)

என்னை நினைத்தால் உனக்கு துயரமே இல்லை. நீ எந்தத் துயரையும் கடந்து செல்வாய். அகந்தையால் ஆணவத்தால் இதை நீ அறிய மறுத்தால் உனக்கு அழிவும் கேடும் விளைவது திண்ணம். (58)

நீ உன் அகத்தை மிகுந்து போர் செய்தலை தவிர்க்க முயன்றால், உனது அந்த முயற்சியிலும் பலன் விளையப் போவதில்லை. ஏனெனில் உன்னுடனேயே பிறந்தது போர்க் குணம் உன்னைப் போர் செய்யவே தூண்டும். (59)

*குந்தியின் மைந்தா! கோலவில் விஜயனே! இயற்கையிலேயே நீ வீரன். இன்று புத்தி மயங்கி போரை வெறுத்தால் அந்த முயற்சியும் அழிவது உறுதி. உன்னையே மறந்து அந்தக் தொழிலினைச் செய்வாய். அதுவே என் சக்தி கண்ணனின் சக்தி. (60)*

சக்கரக்குதிரையில் ஏறிய பாவை போல எல்லா உயிர்க் குலங்களையும் இயக்குபவன் இறைவனாகிய நானே. இறை மாண்பு என்பதும் இதுவே. அவன் ஒருவனே இந்த உயிர்க் குலங்களில் அடங்கி இருக்கின்றான். (61)

*'தனஞ்செயா! தேகத்தாலும், மனத்தாலும் ஒவ்வொரு விநாடியும் நீ பகவான் என்று சொல்லப்படும் என்றன் காலடிகளிலேயே சரணடைவாயாக உனக்கு அமைதியும் சொர்க்கமும் கிடைக்கும். (62)*

*பரம ரகசியமான ஒன்றை உனக்குச் சொல்கிறேன் உனக்கு மட்டும் தான் இத்தனை ரகசியங்களையும் கூறியுள்ளேன். என் சொற்களை செய்வதோ செய்யாததோ என் கடமை. (63)*

*ஏ! பாண்டவ புத்திரனே! இன்னு மொரு ரகசியம் உண்டு. நீ எனக்கு நண்பன் என்பதாலும் நல்லவன் என்பதாலும், என் பக்தன் என்பதாலும் நலம் பயக்கும் ரகசியத்தை உனக்குச் சொல்வேன். (64)*

*கணவன் காலில் மனைவி விழுவது போல என் கால்களில் நீ விழுந்து விடு. இப்படி செய்தால் என்னை அடைவாய். இது சத்தியம். உண்மை. (65)*

*நீ என்ன கடமையை ஏற்றுக் கொண்டிருந்தாலும் என்னை சரணடை. நான் உன் சிக்கல்கள் எதுவாயினும் தீர்த்து வைக்கின்றேன். உன் பாவங்களை நானே துடைக்கிறேன். (66)*

*ஆருயிர் நண்பா! இந்த இரகசியத்தை, தத்துவம் அறியாதவரிடத்தோ, பக்திநெறியறியா பாவி களிடத்திலோ விரிவுரை செய்ய வேண்டிய அவசியம் உனக்கு இல்லை. என்னை வெறுப்பவனிடம் இதைக் கூறாதே. (67)*

*நான் உரைக்கும் கீதையினது ரகசியத்தை உன்னில் உயிர்க்குலத்தில் இருக்கும் தத்துவத்தை நான் என் பக்தர்களுக்குப் பங்கு வைப்பவன். என் திருவாயில்படி மிதித்தவன் என்னுடன் என்றும் கலப்பான். இதில் எனக்கு அணுவளவும் சந்தேகமுமில்லை. (68)*

என்னையே தஞ்சமென எண்ணி, எனக்காகவே உழைத்து, எனக்காகச் செய்பவன் மனிதருள் மாணிக்கமாவான். இந்த போக யோகமே (கலிகாலத்தில்) பெரிதென நினைக்கும் இந்த பூமியில் இல்லை என்பது நிதர்சனம். இது சத்தியமானது. (69)

என் இனிய பார்த்தனே! இதுவரை நீயும் நானும் இங்கே உரைத்தவாத்தைகளை ஏன்? குறிப்பாக நானும் நாராயணனுமாக நாம் நடத்திய நாடகத்தை எவனொருவன் படித்தாலும், கேட்ட

எழுதினாலும், சொன்னாலும் என்னை வணங்கியதாகவே நான் எண்ணுவேன். (70)

நம்பிக்கை அவசிய மானது. நாட்டமும் உடன் இருக்க வேண்டும். இந்த கீதாசாரத்தை எவனொருவன் கேட்கினும் அவனது பழவினை (பாபம்) அழிவது உறுதியிலும் உறுதி. அவன் பரமபதத்தை அடைகிறான். (71)

பார்த்தனே! மனதைப் பக்குவப்படுத்தி நான் அதாவது கண்ணனாகிய நான் சொன்னதை நீ உண்மையாகவே கேட்டாயா? தனஞ்செயா! என் தததுவம் மிக்க மொழிகளிலே உன் மயக்கம் (தாமஸம்) நீங்கிற்றல்லவா? (72)

**பார்த்தன் அளித்த பதில்**

பரந்தாமா! பகவானே! உன் அருள் மொழி கேட்டேன்! அடடா? எத்தனை அற்புதம்! அதிசயம். என் நெஞ்சம் நிமிர்கிறது. எனக்கு என்னைப் பற்றி சுய உணர்வு வருகிறது. ஏனெனில் என் மயக்கம் ஒழிந்தது அல்லவா? எனக்கிருந்த கூச்சம் (சங்கை) இப்போது இல்லை. இனி எப்போதும் இல்லை. எனக்கு யாரைப் பற்றியும் பயமில்லை. என் மோகமானது முற்றிலும் நீங்கியது. நிகழ்காலம் கடந்த காலம், எதிர்காலமும் உன்னால் தெரிகிறது. நான் இன்றுதான் பிறவிப் பயன் கண்டேன். உண்மையிலேயே இதனையும் நீயே உணர்வாய். கண்ணனே கடவுள்; கண்கண்ட தெய்வம், கண்ணன் சொல்லே கடவுளின் தனிச்சொல். (73)

என்று சொல்லி காண்டீபத்தைத் தனஞ்செழியன் தன்கைகளில் எந்தினான்.

அங்கே சஞ்சயன் கண்ணிலா திருதராட்டினனுக்கு சொல்கிறான் : மன்னர் மன்னா! ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த உரையாடலை- அந்த அற்புதமான விளக்கமான மெய்ம்மயிர் பொடிக்கச் செய்யும் உரையை 'நான் வியாசபகவான் அருளிய ஞானக் கண்ணால் கண்டு, என் செவிக்கு அமுதமெனக் கேட்டேன். (59)

பிறர்க்குத் தெரியக்கூடாததும், மிக உயர்ந்ததுமான இந்த யோகத்தை ஞானத்திற்கே அதிபதியான ஸ்ரீமத் நாராயணன் ஸ்ரீ அரங்கநாதன், ஸ்ரீகண்ணன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வியாசபகவான் அருளால் நான் கேட்டேன். (75)

குருகுலத்தை ஆளும் திருதராட்டின மன்னனே! கேசவன் தனஞ்செயன் கேட்கச் சொன்ன இந்த அற்புதமான கீதையை மீண்டும் மீண்டும் எண்ணி நான் புளங்காகிதம் அடைகின்றேன். (76)

மன்னா! இந்த உலகை மூவடியால் அளந்த திருமால் - கண்ணன், அவன் தன்னுடைய அற்புதமான திருவடிவை, விஸ்வரூபத்தை நான் வியாச பகவான அருளிய ஞானக் கண்களால் கண்டு கண்டு, திளைத்துத் திளைத்து பெருமகிழ்வு கொண்டேன். நான் திகைப்புறுகின்றேன். திகைக்கிறேன். மீண்டும் என்னுள் நானே மகிழ்கின்றேன்.

கண்ணனோ அல்லது காண்டீபனோ இருக்கும் இடத்தில் உண்மையிருக்கும். திருமகளை மார்பில் அமரச் செய்த திருமாலின் பொலிவில் நீதி, நியாயம், வெற்றி கீர்த்தி எல்லாமே அவர்களுக்கு உரியனவே ஆகும் என்பது எனது முடிந்த முடிவாகும்.



# 28. கீதையின் சீரிய சிந்தனைகள்

அன்புக்குரிய வாசகப் பெருமக்களே! பக்தசிரோன் மணிகளே! இது காறும் இராம காதையின் சுருக்கத்தையும், கீதை உரையின் சிந்தனைத் தொகுப்பையும் தொகுத்து 1999 ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் நாள் நள்ளிரவில் இந்த நூல் முழுமை பெறுகின்றது என்பதை இறையின் திருவருள் கூடியராய், பெருமையுடன் தெரிவித்து இனிய இப்புத்தாயிரத்தாண்டு தினத்தில் ஜனவரி முதல் நாள் 2000ம் ஆண்டில் அச்சாக்க அனுப்பப்படுகிறது என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இறையருள் எம் இதயத்து இருந்ததனால். இறையருளாலே அவன் இருதாள் இறைஞ்சி இந் நூலை ஆக்க அருளிய அந்த பரம்பொருளான திருமலைநாதன் திருவேங்கடத்தான் ட ந்ங்களில் வைத்துப் பணிகின்றேன். இந்த நூலை ஆக்க அவன் அருளே துணைப் புரிந்து ஆணையிட்டு ஆக்கித் தருகின்றது என்பது தான் உண்மை.

அண்ட சாரசரங்களைத் தோற்றுவித்து காத்து அழிக்கவல்லது பரம்பெருளான இறைவனே என் பதையும், அவனை எப்பெயரிட்டு அழைத்தாலும், எந்த சமயத்தில் அழைத்தாலும் பெருங்கருணை வைத்துத் துணைபுரிகின்றான் என்பதையும் சொல்லித்தான் ஆகுதல் வேண்டும். உன்னை சரணமடைந்த பக்தன் செயல்களால் வரும் வினைப்பயன் ஆண்டவனையே அடைவதால், வினையால் வரும் பாவ புண்ணி

மக்களைப் பாதிக்காது என்பது நன்கு தெளிவுபடுத்தப் படுகின்றது.

**பயன்கருதாத பணி**

தன்னலம் கருதாது செய்யப்படும் பணிகள் பிறருக்கு எந்தவிதத்திலாவது பயன்படுவதாக அமையுமானால் அதுவே சமுதாயத் தொண்டாக மலரும். அங்கு அன்பு பெருக்கெடுத்து நிற்கும் அன்பின் பெருக்கு பத்தியாக மலரும். தன்னினும் தாழ்ந்தவர்பால் செலுத்தப்படும் பக்தியே அருளாக மலரும். அந்த அருட்சக்தியைப்பெற்ற ஒருவர் கடவுள் நிலைக்கு உயர்த்தப்பட்டு மகானாக மக்களால் போற்றப்படுகின்றார். நடைமுறை வாழ்வில் கீதையின் பாதையில் சென்று வாழ்ந்த காட்டியவர்கள் யாராவது உண்டா என்ற ஐயப்பாடு நமக்குள் ஏழலாம்.

**அண்ணல் வாழ்வில் கீதை பாதை**

இந்தியத் திருநாட்டின் தந்தை என்று போற்றப்படும் அண்ணல் காந்தியடிகள் வாழ்க்கைப் பாதையிலும், இறுதி முடிவு நாளிலும் தன் கீதையின் வழி நெறியைக் கடைப்பிடித்துள்ளார் என்பதை அவர் தம் வாழ்க்கை வரலாறு நமக்கு உணர்த்துகின்றது. அவரைப் பெரிதும் கவர்ந்த அறநூல்களில் 'கீதையும்' ஒன்றாகும். அதைப் படித்துத் தெளிந்து கீதைக்கு உரை வழங்கியவர்களில் அண்ணல் காந்தியடிகளும் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது. கீதையின்

பாதையே அவரின் சத்திய சோதனைகளில் வெற்றியைப் பெற்றுத்தந்துள்ளது என்பதையும் உணரலாம். மேலும் அவர் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு தன் பேத்திகளுடன் டில்லி, பிர்லா மாளிகையில் இருந்து சென்று கொண்டிருந்த போது வினாயகக் கோட்சே என்ற இனவெறியினால் சுடப்பட்டு தரையில் விழுந்த சமயம் இறுதியாகச் சொன்ன சொற்கள் இராம், இராம், இராம் என்ற வார்த்தைகள் அவரை எந்த அளவுக்க இராம நாம மகிமை மீது மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார் என்பதைப் புலப்படுத்துகின்றது. அவரை சாதாரண மனிதராக நினைக்காமல் ஒரு மகானாக இந்த உலகு கண்டது. இன்றும் அவரை மகாத்மா என்றே போற்றி புகழ்கின்றது.

**கீதையும் விவேகானந்தரும்**

ஆன்மிகத்தின் அடித்தளத்தை கீதையின் பாதையை அகில உலகம் அறியக் காரணமாய் இருந்தவர், வீர விவேகானந்தர் என்றால் மிகையாகாது. அவர் கீதையில் பெற்ற ஆய்ந்த ஆன்மீக ஆற்றல் அமெரிக்க மண்ணிலே, சிகாகோ நகரில் அகில உலக சர்வசமய மாநாட்டில் ஆற்றிய உரையில் வெளியிடப்பட்டு அகில உலகமே வியந்து பாராட்டியது. அவரும் கீதைக்கு உரை வழங்கி பெருமை சேர்த்துள்ளார். கீதை காட்டிய பாதையை உலகுக்குக் காட்டி அவரும் உயர்ந்து, பிறரையும் உயர்த்தப் பாடுபட்டார்.

## கீதையும் வள்ளுவரும்

திருவள்ளுவரால் ஆக்கப்பட்ட திருக்குறள் அற நூலாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இன்று வள்ளுவருக்கு கன்னியாகுமரியின் கடலோரத்தில் 113 அடி உயர கம்பீர சிலை நிறுவப்பட்டு மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர். கலைஞர் அவர்களால் திறப்பு விழா நடந்து கொண்டுள்ள சமயம் உலகப் பொதுமறை தந்த வள்ளுவன் சிந்தனையில் கீதையின் வாசகங்கள் பல அப்படியே பதிந்துள்ளதை ஆய்ந்து நோக்கினால் உணரமுடியும். கடவுள் வாழ்த்துப் பாடல்களில் இறைவனைக் குறிக்க வரும் சொற்கள் அத்தனையும் பகவானால் கூறப்பட்டுள்ளது. ஆதிபகவன், வாலறிவன் இதயத்திருப்பான் (மலர் மிசை ஏகினான்) வேண்டுதல் வேண்டாமையிலான் (விருப்பு வெறுப்பற்ற நிலை) (பற்றின்மை) புகழ்புரிந்தான், ஐந்தவித்தான் (ஐம்புலனடக்கம் உள்ளான்) தனக்குவமை இல்லாதான், எண்குரைத்தான், இறைவன் என்று எந்த சமய தெய்வப் பெயரையும் குறிப்பிடாமல் அமைந்துள்ளது இதன் தனிச்சிறப்பாக அமைந்துள்ளது. மேலும் கீதை இல்லறம் துறவற நெறிகளைக் குறிப்பிடுவது போல் அறத்துப் பாலில் இல்லறவியல், துறவறவியல் என்று பகுக்கப் பட்டுள்ளதும் கீதை வழியைக் காட்டுவனவாகும். திருக்குறள் பொருட் பாடலில் வரும் அரசியல், அமைச்சு போன்றோர்களின் கடமைகள் பற்றிக்

குறிப்பிடுவது போல் கீதையிலும் இனபாகுபாடுகள், ஆவல்களின் பண்பு நலம், கடமைகள் ஆகியவை குறித்தும் பகவான் கண்ணன், பார்த்திபனுக்கு உரைத்த கீதை உபதேசத்தில் வலியுறுத்தப் படுவதைக் காண்கின்றோம். வள்ளுவரும் கீதை உரையைப் படித்துத் தெளிந்திருக்க வேண்டும். அந்தத் தெய்வீக உணர்வால் உந்தப்பட்டு உருவானவைகள்தான் 1330 குறட்பாக்களைக் கொண்ட திருக்குறள் என்று எண்ணத் தோன்றுகின்றது. பகவான் கண்ணன் வகுத்த பாதையில் செல்லும் எவரும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வங்களாவது திண்ணம். அந்த நிலையில்தான் வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் உற்றான்.

நாமும் அத்தகு தெய்வீக ஆற்றலைப்பெற கீதை வழியில் நடந்து மெய்ஞ்ஞானத்தைப் பெற முயற்சிக்கலாமல்லவா?

# 29 கீதையின் முரண்பாடும், முடிவும்

எல்லாம் வல்ல இறைவன் தன் அருள் தொண்டர்களை உலக மக்களை உய்விப்பதற்காக அவ்வப்போது மகான்களை அவதாரம் செய்விக்க வைத்து அறக் கருத்துக்களை உபதேசங்கள் வாயிலாக வெளிப்பட வைக்கின்றார். ஏசுவின் போதனைகள், நபிகள் போதனைகள், குருநானக் போதனைகள், சங்கரர் போதனைகள், இராமானுசர் போதனைகள், மத்துவர் போதனைகள் என்று எத்தனையோ மகான்கள் காலத்துக்கு உகந்த போதனைகளை வழங்கிச் சென்றுள்ளார்கள். மனதைப் பக்குவப்படுத்த வந்த அவைகள் சமயங்கள் வாயிலாக உணர்த்தப் பட்டுவருகின்றன. ஆனால் இது எல்லா மக்களுக்கும் சென்றடைவதில்லை. மேலும் அவை சாதாரண மக்களுக்காகவே வழங்கப்பட்டுள்ளன.

## கீதையும் சிறப்பும்

பகவான் திருமாலே கண்ணன் என்ற பெயரில் அவதாரம் செய்து தன் பக்தனும் நெருங்கிய நண்பனுமான பார்த்திபனுக்கு நேரடியாக வந்து, அவனுடன் தங்கி, தானே ஒரு சாரதியாக அமர்ந்து, செய்யப்படும் உபதேசமே கீதா உபதேசமாகும். கீதையை முழுதும் படித்து ஜீரணித்துக் கொண்ட ஒருவன் நிச்சயம் எந்த இன்னல்களுக்கும் ஆளாக மாட்டான் என்பது திண்ணம். ஏனெனில்,

இறைவனே நேரிடையாகத் தெரிவித்ததே இதற்குக் காரணம்.

### கீதையில் முரண்பாடு

பாரதத்தை ஆக்கித் தந்தவர் வியாச பகவான் ஆவார். பாரதத்தின் ஒரு பிரிவான கீதை உரையும் அவரால் தான் இந்த உலகுக்கு வந்தது. பாரதக் குருட்சேத்திரப் போர் நடந்து பல ஆண்டுகள் கழித்தே வியாசர் பாரதத்தை எழுதி இருக்க முடியும். தன் ஞானக் கண்ணால் தெளிவுற்று பகவான் பார்த்தனிடம் வழங்கிய கீதா உபதேசங்களைத் தொகுத்து எழுதியிருக்க வேண்டும். அதனால் கண்ணனின் உபதேசங்களோடு தன் கருத்தையும் சேர்த்து உபதேசமாகக் கூட்டியோ, குறைத்தோ சொல்லி இருக்கலாம் அல்லவா என்ற சந்தேகம் நமக்கு ஏற்பட வாய்ப்புள்ளது.

மேலும் கீதை உரை நிகழ்ந்த இடம், நேரம் இவைகளிலும் சில முரண்பாடுகள் தோன்றத்தான் செய்கின்றன.

கண்ணற்ற திருதராட்டினன் போர்க்கள காட்சியை அமைச்சர் சஞ்சயன் வாயிலாக அறிய விரும்புகின்றான். சஞ்சயனும் வியாச பகவான் அருளால் எல்லா நிகழ்வுகளையும் தொலைக்காட்சி, வானொலி ஒலி பரப்பு போல எல்லாவற்றையும் சொல்லிக் கொண்டே வருகின்றான். இரு திறத்துப்படைகளும் போருக்கு ஆயத்தமாக சங்குகளை முழங்குவிட்டன விஜயன்

விருப்பப்படி இரு படைகளுக்கும் மத்தியில் தேரை நிறுத்தி பகைவர் படையைப் பார்க்கச் சொல்லுன்கிறான். அவன் மனம் பந்த பாசத்தால் உந்தப்பட்டு போர் செய்யமறுத்து வில் அம்பை வீசி எறிந்து விட்டு குழம்பிய மனநிலை அடைகிறான். அவன் கடமை என்ன என்பதை எடுத்து கூறி மனக்குழப்பத்தைப் போக்க அது சமயம் பார்த்தனுக்கும் பரந்தாமனுக்கும் நிகழ்ந்த உரையாடலே கீதா உபதேசம் எனப்படுகின்றது. இந்த உபதேச உரையாடல் நிகழ சுமார் இரண்டு மணி நேரமாவது நிகழ்ந்திருக்கலாம்.

இந்த இரண்டு மணி நேர உரையாடலின் போது ஆய்ந்த நிலையில் இருந்த பாடல்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்ற ஐயப்பாடு யாருக்கும் வரலாம். இவை அத்தனையுமானபடி சஞ்சயன திருதராட்டினனுக்கு விளக்கிச் சொல்லி இருக்க முடியும் என்ற சந்தேகமும் வரலாம். பரந்தாமனின் விஸ்வ ரூபதரிசனத்தை பார்த்தன் மட்டுமின்றி அமைச்சர் சஞ்சயனும் கண்டிருக்கின்றார் என்பது கீதை உரையிலேயே இடம் பெற்றுள்ளது. அந்தப் பேற்றை சஞ்சயன் எவ்வாறு பெற்றார் என்பதும் கேள்விக்குறிதான்!

### கீதையின் முடிவு

கீதையின் முடிவு மேற்கண்ட ஐயப்பாடுகள் அனைத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்தாற் போல் விளக்கப்பட்டுள்ளதை ஆய்ந்து நோக்கினால் உலகில்

அன்றாடம் நடக்கும் அத்தனை நிகழ்கழகளும் யானே நிகழ்த்துகிறேன். நானே உணர்வு நானே செயலின் முதல், பயனும் நானே! என்றெல்லாம் சொல்லும் போது அவன் நினைத்தால் எல்லா உயிர்களையும் எவ்வளவு நேரமாவது நிலைக்க வைக்க முடியும் என்பதையும், எளிய சஞ்சயனுக்கும் அவன் இனிமையானவன் ஆனதால் பகவானின் விஸ்வரூபத்தை காண்டீபனுடன் சேர்ந்து காணவந்தான் என்று தெளியலாம். இவ்வளவு நீள உபதேசம் பார்த்தனிடம் சொல்ல வேண்டிய அவசியம் தேவையில்லைதான். அவன் பார்த்தனின் உணர்வில் தங்கியே போரிடச் செய்திருக்கலாம்.

பகவான் கருணை வெள்ளம் இந்த உபதேசத்தை மற்றவரும் கேட்டு தங்கள் உண்மை தெய்வ நிலையை அனைவரும்பெற வைக்க வேண்டும் என்பதற்காகவே இந்த நாடகத்தை நடத்திக் காட்டுகின்றான்.

**அன்றாட பிரச்சனைகளும் முடிவும்**

மனிதர்கள் ஒவ்வொருவரும் அன்றாடம்பல பிரச்சனைகள், விபத்துக்கள், சாதனைகள், பாராட்டுகள், நோய் நொடிகள், மனக்கவலைகள், குடும்பத் தொல்லைகள் போன்றவற்றைச் சந்தித்துக் கொண்டுதான் இருக்கின்றோம். அதனால் கலக்கமோ, மகிழ்ச்சியோ, துன்பமோ அடைகின்றோம். இதற்கெல்லாம் தீர்வே இல்லையா?

ஏன் இல்லை. உண்டு; ஒரு உண்மையை உணர்ந்தால்;

நம்மால் வருவதும் போவதும் ஒன்றும் இல்லை. வர வேண்டியது வந்தே தீரும். போக வேண்டியது போயே தீரும். இதையாராலும் தடுத்து நிறுத்த முடியாது. நாம் நமது கடமையைத்தவறாது செய்வோம். எல்லாவற்றையும் பிரார்த்தனை மூலம் நம்மை ஆள்விக்கும் ஆண்டவனிடம் சரண் உறுவோம் பயனை எதிர் நோக்காது நிச்சயம் அல்லும் பகலும்அற்புதம் நிகழும். இதுவே தெய்வீகமாகும்.



# 30. கீதையின் பொன்மொழிகள்

இறைவனிடம் மனத்தை வைத்து, இடைவிடாமல் என்னைத் தியானித்து, பக்தி சிரத்தையுடன் வழிபடும் பக்தனைத்தான் யோகத்தில் மேம்பட்டவனாகக் கருதுவான்.

யார் எல்லாச் செயல்களையும் என்னிடம் அர்ப்பணித்து விட்டு, என்னையே கதியென்று நினைத்து, சிதையாத மனத்துடன் என்னை தியானித்து வணங்குகிறார்களோ, அத்தகைய பக்தர்களை அவன் பிறப்பு, இறப்பு என்ற சம்சாரக் கடலில் இருந்து விடுவித்து கரையேற்றுகிறேன்.

பொறிகள் என்பவை மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவையாகும். பொறிகள் உணரும் சக்திகள் அனைத்தும் நிலையாமைத் தத்துவம் உடையன. இன்பம் தரும் ஒரு செயல் வேறொரு சமயம் துன்பமாகத் தெரியும். இவற்றைப் பொறுத்துப்பழகுதல் உறுதியைத் தரும். அஞ்ஞானம் பெறும் தகுதி உண்டாகும். எவன் இவற்றால் துன்பப்படாமல் இருக்கிறானோ, இன்பத்தையும், துன்பத்தையும் ஒரே மாதிரியாகக் கருதுகிறானோ அவனே முக்திக்குத் தகுதியுள்ளவனாகிறான்.

இந்த உடம்பு அழிந்தபின்னரும் நாம் இல்லாமல் போகமாட்டோம். ஆத்மா அழிவற்றது.

❋ செருக்கையும், மயக்கத்தையும் விட்டு, பற்று என்ற குற்றங்களை வென்று ஆத்ம ஞானத்தில் நின்று, ஆசைகளைவிட்டு, இன்ப, துன்பம் என்ற இரட்டைகளில் இருந்து விடுபட்டு, மடமை யற்று இருப்பவர்கள் அழியாத பரம்பொருளை அடைகிறார்கள்.

❋ உன் மனத்தை என்னிடம் வைத்து, புத்தியை எவன்பால் சிந்திக்கச் செய். பின்பு என்னுள்ளே இருப்பாய். இதில் ஐயமில்லை.

❋ எல்லா இடங்களிலும் புகுந்து செல்லுகின்ற காற்று எவ்வாறு வானத்தில் நிலைபெற்று இருக்கிறதோ, அது போலவே எல்லா உயிரினங்களும் இறைவனுள் என்றும் இருக்கின்றன.

❋ சூரியன், சந்திரன், தீ ஆகியவை அந்த இடத்தை ஒளியால் விளக்கிக் காட்ட முடியாது. அங்கு சென்றவர்கள் திரும்பி வருவதில்லை. அதுதான் அழிவில்லாத இறைவனுடைய பரமபதம்.

சுபம்.